# சின்மயானந்தரின் சிறுகதைகள்

எஸ். லட்சுமிசுப்ரமணியம் —











இமயப் பதிப்பகம்

உ

# சின்மயானந்தரின் சிறுகதைகள்


**மகா. கோவிந்த சுவாமி**

ஸ்ரீ-ஜகத்குரு சங்கர ஆசிரமம்,
அண்டு, ஸ்ரீ-இராம ஆச்ரமம்
கொப்பமாபுரி, கொப்பம்பட்டி போஸ்டு,
VIA வைரிசெட்டிபாளையம்-621 012.
துறையூர் வட்டம், திருச்சி மாவட்டம்


எஸ். லட்சுமிசுப்பிரமணியம்






இமயப் பதிப்பகம்
20 பெருமாள் தெற்கு வீதி,
நாகப்பட்டினம் 611 001.

முதற்பதிப்பு: நவம்பர், 1982
உரிமை ஆசிரியருக்கு

பதிப்பாளர்:

பாரதிப்பித்தன்,
இமயப் பதிப்பகம்,
நாகப்பட்டினம்.

விலை ரூ. 14-50

அச்சிட்டோர்:
பிரபு பிரிண்டிங் ஹவுஸ்
18, வடக்கு உஸ்மான் சாலை,
தி. நகர், சென்னை-600 017.

உ

# பழைய கதை

திரு லட்சுமிசுப்பிரமணியம் அவர்களுடன் 1965 லிருந்து தொடர்புடையவன். அவருடைய சிறுகதைகள், குறுநாவல்கள், நாவல்கள், மருத்துவ நூல் எல்லாம் வெளியிடும் வாய்ப்பை எனக்கு நல்கியவர். அவருடைய இந்த நூல்கள் எல்லாம் வெளி வரும்போது எனக்கேற்படும் கஷ்ட நஷ்டங்களை அவரிடம் வெளியிடுவேன். அவர் மிகப் பரிவோடும் அன்போடும் என்னுடைய இடர்களில் பங்கு கொண்டு என்னை உற்சாகப்படுத்துவார்.

ஒரு சமயம் அவருடைய 'நாதமெனும் கோயிலிலே' என்னும் இசை ஞானம்நிறைந்த அருமையான நாவலை டிசம்பர் மாத இசை விழா நிகழ்ச்சியின் போது வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டிருந்தேன். அது காலத்தில் வெளி வர வேண்டுமே என்ற கவலை மிக கொண்டேன். அது சமயம் லட்சுமி சுப்பிரமணியம் அவர்கள் "நீங்கள் என் சகோதரர். உங்களுடன் நான் என்றும் ஒத்துழைப்பேன்" என்றார். அந்தச் சொல் கேட்டு நான் அதிர்ந்தேன். என் உடல் புல்லரித்தது. அவர் சொன்ன சொல் என் இரத்த நாளங்களில் ஊடுருவிப் பாய்வதை உணர்ந்தேன். அமெரிக்காவில் பாரத பூமியின் பெருமையை விளக்கச் சென்ற விவேகானந்தர் அந் நாட்டு மக்களைப் பார்த்து "சகோதரசகோதரிகளே!"

என்று அழைத்தாராம். அதைக் கேட்ட அந்நாட்டு மக்கள் அவருடன் கட்டுண்டு ஐக்கியமாகி விட்டதை புத்தகத்தில் படித்துள்ளேன். அதேப் போல சகோதரப் பாசத்துடன் பழகும் லட்சுமி சுப்பிரமணியம் என்னுடன் ஒன்ருகக் கலந்து விட்டதால் இந்த உன்னதமான நூலை வெளியிடும் பாக்யம் எனக்குக் கிடைத்தது.

பாரத நாடு பழம் பெரும் நாடு. இந்த ஞான பூமியின் பெருமையை திருபொன் பாஸ்கர மார்த்தாண்டன் தமிழக மெங்கும் பரப்ப அயராதுஉழைத்து வருகிருர். அவரது சிறப்பான முன்னுரை இந்நூலுக்கு மகுடம் சூட்டியதாக அமைந்துள்ளது. அவருக்கு என் நன்றி. என்றும் உரியது.

அன்புடன்

தோ. ந. வீரராகவன்

(புத்தகப்பித்தன்)

# முன்னுரை

நான் எந்த நூலுக்கும் முன்னுரை எழுதத் துணிவதில்லை. அதற்குரிய தகுதி எனக்கு இருப்பதாக நான் நம்பத் தயாராக இல்லை.

அதுவும் குறிப்பாக என்னைவிடத் தகுதியிலும் அனுபவ ஆற்றலிலும் முன்னவரான திரு. எஸ். எல். எஸ். அவர்கள் நூலுக்குமுன்னுரை எழுதுவதா?

என்னை எழுதக் கேட்டிருப்பது அவருடைய பெருந்தன்மை......நான் எழுதத் துணிவது எந்த நன்மையிலும் சேர்த்தி இல்லை.

ஆனாலும் இதை எழுதுகிறேன்.

அதுவும் ரொம்ப ஆர்வத்தோடு, ஆசையோடு எழுதுகிறேன். அதற்கு ஒரே காரணம், இந்த அற்புதமான அரிய அறிவுப் பெட்டகமான நூலின், ஒரே ஒரு பக்கத்தையாவது 'பிடித்து'க் கொண்டு அதில் இடம் பெற்றுவிட வேண்டும் என்ற பேராசைதான். பக்கத்துக்குப் பக்கம் மணம் வீசும் இந்த நறுமலர் நூலோடு சேர்ந்து நானும் மணம் பெற்றுவிடத் துடிக்கும் ஆர்வம் தான்.

நம் இந்து மதத்துக்கு எல்லாம் இருந்தும் ஒன்றே ஒன்றுதான் இல்லை.

அதுதான், அதன் பெருமைகளை உலகுக்கு எடுத்துச் சொல்லும் சக்திவாய்ந்த, உள்ளார்ந்த ஈடுபாடு கொண்ட ஒரு அறிவு விளக்க இயக்கம். இந்த பாரத நாட்டின் மிகப் பெரிய சொத்து என்ன என்று இங்கு வந்து திரும்பிய ஒரு ஜெர்மானியரிடம் கேட்ட போது—

"பாரதத்திலுள்ள சாத்திரங்களும், வேதங்களும் உபநிஷத்துக்களும், இதிகாசங்களும்தான்!" என்று பதில் அளித்தானும் அந்த ஜெர்மானியன்.

நம்மிடம் இந்த கேள்வியைக் கேட்டிருந்தால், நாம் இந்தப் பதிலை சொல்லியிருக்க மாட்டோம்.

ஏனென்றால் இப்படியொரு சொத்து நம்மிடையே இருப்பதே நமக்குத் தெரியாது.

தன் தந்தை கோடானுகோடி பெறுமதியான சொத்துக்களை தனக்கு விட்டு வைத்திருப்பதை தெரிந்து கொள்ளாமல், பிச்சையெடுக்கும் ஒரு குழந்தையைப் போல்—

நம் பழம்பெரும் அறநெறி ஆன்மீக நெறிச் சொத்துக்களைப்பற்றி துளியும் தெரிந்து கொள்ளாமல் மேல் நாட்டு நூல்களையும், ஆராய்ச்சிப் புத்தகங்களையும், நாம் பெரிய தத்துவச் சொத்துக்களாக நினைத்து போற்றிக்கொண்டிருக்கிறோம்.

இங்கு அந்த மேல் நாட்டவருக்கு முந்தியே தத்துவங்களும் ஞானங்களும் மலிந்திருந்தன.

அதைச் சொல்லத்தான் நமக்கு ஆளில்லை......ஓர் அமைப்பு இல்லை.

அந்தக் குறையைப் போக்க நம்மிடையே உருவாகிப் பேருருவாய்—

ஒரு தத்துவ விளக்க ஞானதீபமாய்—எளிமையாக, நமக்கு புரியும் மொழியில் அரிய கனத்த விஷயங்களையும் சிரிக்கச் சிரிக்க சின்னச் சின்ன கதைகளை வேடிக்கையாக ஒரு தாய் அம்புலியைக் காட்டி குழந்தைக்கு அன்னமூட்டுவது போல்—நமக்கு விளக்கமளித்து நமக்கு அறிவு அன்னம் அளிக்க அவதரித்திருப்பவர்,

சுவாமி சின்மயானந்தர்.

அவர் ஒரு தனிமனிதரல்ல. ஒரு பேரியக்கம். அவருடைய அறிவுப் பணி, நம் பழம்பெரும் மதத்துக்கு ஒரு ஜீவ ஓட்டமான, கங்கைப் பிரவாகம். ஆனால் ஒரு சின்னக் குறை.

அவர் ஆங்கிலத்தில்தான் தன் உரைகளை ஆற்றியிருக்கிறார். அதை, அதே ஜீவனுடன் யாராவது தமிழ் மக்களுக்கும் சொல்ல முடிந்தால்......?

இந்த கேள்விக்குப் பதிலாக எழுந்திருப்பவர்தான் 'எஸ். எல். எஸ்.' என்று அழைக்கப்படும் எஸ். லட்சுமி சுப்ரம்ணியம் அவர்கள்.

'ஆல் ரவுண்டர்' என்ற பதத்துக்கு இன்னும் ரத்னச் சுருக்கமான விளக்கம் ஒன்று உண்டானால் அதுதான் எஸ். எல். எஸ்.

அவர் எழுதிய அருமையான சிறு கதைகள், நாவல்கள் எண்ணற்றவை. அவருடைய பல நூற்றுக்கணக்கான சிறு கதைகள் தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் அனைத்திலும் வெளியாகியிருக்கின்றன. அவற்றுடன் பல போட்டிப் பரிசுகளையும் வாசகர்களின் அபரிதமான வாழ்த்துக்களையும் பெற்றிருக்கிறார். ரத்னச் சுருக்கமாகவும், கவிதை நயத்துடன் சொற்களை அமைத்து, ஒரு தங்கச்சங்கிலிக்கு கண்ணிகளைச் சேர்த்து வைரம் பதிப்பது போல் சிறுகதைகளையும் தொடர் கதைகளையும் மணக்க மணக்க எழுதும் அற்புதச் சொற்சிற்பி அவர்.

அவர் கதைகளும், எழுத்துக்களும் சந்தியா காலத்திலும் உஷத் காலத்திலும் ஒரு பூஜைக்கு அனுபவமாக வாசித்து சுவைக்கப்பட வேண்டியவை.

சிறு கதைகள், நெடுங்கதைகள் மட்டுமல்ல; ஆயிரக் கணக்கான பத்திரிகைப் பேட்டிகள், கட்டுரைகள், மருத்துவ ஆய்வுக் கட்டுரைகள் பொருளியல், தொழிலியல் கட்டுரைகள் இவற்றை எழுதித் தனக்கென ஒரு தனிப்

பாதையை, அழுத்தமாக வகுத்துத் திகழும், எஸ். எல் எஸ். அவர்கள், ஆன்மீகத் துறையிலும் தன்பணியை உலகுக்கு அளித்திருப்பதுதான், இந்த நூல்.

சுவாமி சின்மயானந்தர் ஒரு அறிவுப் புலி. மேடையில் காணும் அறிவு விளக்கக் கதைகளை சுவை கெடாமல் கச்சித மாக எழுத்தில் கொண்டு வருவது என்பது சாமான்ய விஷய மல்ல. அது ஒரு மகாயக்ஞம்.

இந்த நூலில் இடம் பெற்றிருக்கும் ஒன்றிரண்டு கதைகளை எடுத்து முன்னுரையில் சொல்ல நினைத்தேன். சில நயங்களை கோடிட்டு காட்ட நினைத்தேன். என்னை மன்னிக்க வேண்டும். அது என்னால் முடியவில்லை. எல்லாம் சிறப்பாக நயமாக இருக்கும்போது எதையென்று நான் குறிப்பிடுவேன்? ஒவ்வொரு கதையிலும் ஒரு சுவையிருக் கிறது. சொல்லிய முறையில் நீரோட்டமும் ஒளியும் இருக் கிறது.

அப்படி சிரத்தையோடும் சிறப்பாகவும் இந்த நூலை உருவாக்கித் தந்திருக்கிறார் எஸ். எல். எஸ். அவரைப் போன்ற ஓர் எழுத்து யோகியால்தான் இதைச் செய்ய முடியும்......

அவருடைய அரிய பணிக்கு என் சிரம் தாழ்ந்த வணக்கம்.

அன்புடன்,

சென்னை-90
14—10—82 } பொன். பாஸ்கரமார்த்தாண்டன்

ஆசிரியர்: "ஞான பூமி"

# சின்மயானந்தரின் சிறுகதைகள்...

## 1

"அப்பா ஆடிப்பண்டிகைக்குக் கூப்பிட்டிருக்கிறார், போகலாமா?" என்று கேட்டாள் மனைவி. அவள் இளம் மனைவி. ஒரே ஒரு குழந்தைதான். அந்தக் குழந்தைக்கு மூன்று வயது இருக்கும். இளம் மனைவி ஆசையாகக் கேட்கும் போது கணவன் ஒப்புக்கொள்ளாமல் இருக்க முடியுமா? நண்பன் ஒருவனிடம் கார் இரவல் வாங்கிக் கொண்டு குடும்பத்தோடு புறப்பட்டான்.

மாமனார் வீடு சுமார் நூறுமைல்கள் தூரத்தில் இருந்தது. கடைசி இருபது மைல்கள் காடு சூழ்ந்த இடம். மாலை வேளை முதிர்ந்துவிட்டால் அங்கே ஓநாய்கள் நடமாடும். அந்தப்பகுதியில் உதவிக்குக் கூப்பிடக்கூட வீடுகளில் வசிப்பார் யாரும் இல்லை.

அப்பாவிடம் போகிற பெண் அல்லவா? தேடித் தேடி ஏதேதோ சாமான்களைச் சேகரித்துக் கொண்டாள். வெளியே போகும் பெண் ஆயிற்றே? டிரஸ் பண்ணிக் கொண்டு அலங்காரத்தை முடித்துக்கொண்டு புறப்பட நேரம் ஆகிவிட்டது. பிற்பகல் டிபன் சாப்பிட்டு விட்டுத் தான் புறப்பட முடிந்தது.

இளம் மனைவியுடன் பேசிக்கொண்டு வந்த கணவன் வழியைத் தவறவிட்டுவிட்டான். மறுபடி வழியை விசாரித்து

போது ஆளுக்கு ஒரு விதமாகச் சொன்னார்கள். போலீஸ் ஸ்டேஷனைத் தேடி அங்கே விவரம் கேட்டுக்கொண்டு ஒருவிதமாகப் புறப்பட்டான் கணவன். இதில் ஒரு மணி நேரம் போய் விட்டது.

மாலை மணி ஆறு. இருட்ட ஆரம்பித்துவிட்டது. காட்டுப் பகுதியில் பாதி தூரம் வந்த கார் நின்றுவிட்டது. கணவனுக்கு உடல் எல்லாம் வியர்த்துவிட்டது. காரின் முன்புறத்தைத் திறந்து எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்தான். எல்லாம் சரியாகத்தான் இருந்தது.

''சீக்கிரம் பாருங்கள். நேரமாகிறதே? நடுக்காட்டில் அகப்பட்டுக்கொண்டு விட்டோமே? அடித்துப் போட்டால் கேட்க நாதியில்லை.'' என்று அவசரப்படுத்தினாள் மனைவி.

''ஆமாம். இப்போது அவசரப்படு! நேரத்தில் கிளம்பி யிருக்கலாம் அல்லவா! சாமான்களைச் சேகரித்துக் கட்ட இரண்டு மணி நேரம், அலங்காரம் செய்துகொண்டு முடிய இரண்டு மணி நேரம், உன்னால்தான் தாமதமாகிவிட்டது!'' என்றான் கணவன்.

''என்னால் ஒன்றும் தாமதம் இல்லை. டிபன் சாப்பிட்டு விட்டு மூன்று மணிக்கே புறப்பட்டுவிட்டோம். நீங்கள் தான் வழியைத் தவற விட்டுவிட்டு எங்கெல்லாமோ சுற்றி னீர்கள். அதில் ஒரு மணி நேரம் போய்விட்டது. இல்லா விட்டால் இந்நேரம் எங்கள் அப்பா வீட்டுக்குப்போய்ச் சேர்ந்திருக்கலாம்!'' என்றாள் மனைவி.

''உன்னாலேதான் தாமதம்.'' என்றான் கணவன் மறு படியும்.

''உங்களால்தான்.'' என்றாள் மனைவி.

இருவரும் சண்டை போட்டுக் கொண்டதைக் குழந்தை பார்த்தது. ''ஸ்டாப்! ஸ்டாப்!'' என்று சத்தம்போட்டது

குழந்தை அப்படிச் சொன்னதைக்கேட்டு இருவரும் தங்களை மறந்து சிரித்தார்கள். கோபம் போய் விட்டது.

"கார் நின்று போனா தள்ளவேண்டியதுதானே; சண்டை எதுக்கு?" என்று கேட்டது குழந்தை.

"குழந்தை சொல்கிறான். அப்படியே செய்து பார்ப்போம்!" என்றான் கணவன். மனைவி பின்புறமிருந்து தள்ளினாள். கணவன் 'ஸ்டியரிங்' அருகே நின்று கொண்டு முன்புறம் தள்ளினான். குழந்தை உள்ளேயே உட்கார்ந்து கொண்டு காரின் கண்ணாடியில் கையைவைத்து ரொம்பச் சிரமப்பட்டுத்தள்ளிற்று!

கொஞ்சம் தள்ளிவிட்டு ஸ்டார்ட் செய்தான். கார் கிளம்பிவிட்டது. மனைவிக்கு ஒரே மகிழ்ச்சி. குழந்தை "நான் சொன்னது சரியாப்போச்சு!" என்று கையைத் தட்டி 'ஓ'வென்று சிரித்தது.

இருட்டு முற்றிப் போவதற்குள் காட்டுப் பகுதியைக் கடந்து விட்டார்கள். மாமனார் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்து கணவன் காரை "ஷெட்"டில் நிறுத்திவிட்டு வந்தான். மாமனார் "நான் ரொம்பக் கவலைப்பட்டுவிட்டேன். ஏன் இவ்வளவு தாமதம்? ஏதாவது தகராறு?" என்று கேட்டார்.

"ஆமாம் அப்பா! கார் நின்றுவிட்டது. கதையைச் சொல்லுங்கள்!" என்று கணவனைப் பார்த்தாள் மனைவி. கணவனும் விவரமாக நடந்ததையெல்லாம் சொன்னான். குழந்தை பக்கத்திலிருந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தது. அப்பா சொல்லி முடித்த பிறகு "தாத்தா! அப்பா சரியாகச் சொல்லவில்லை. நான் சொல்றேன் கேளு...கார் கிளம்பவில்லை...எல்லாரும் தள்ளினார்கள்... அப்பவும் கிளம்பவில்லை. நான் காருக்குள்ளேயிருந்து வேகமாகத் தள்ளினேன். அப்புறம்தான் ஸ்டார்ட் ஆச்சு! பெருமை எனக்குத்தான்!" என்றது குழந்தை.

அதைக் கேட்டு மூவரும் சிரித்தார்கள். நீங்களும் சிரிக்கிறீர்களோ? ஏன்? ஒருகணம் யோசித்துப் பாருங்கள். இறைவனின் குழந்தைகளான நாம், வாழ்க்கையில் ஒவ்வொரு கணமும் அதேபோலத்தானே பெருமை அடித்துக் கொள்கிறோம்!



# 2

அது ஒரு பழைமையான கோயில். அதிகம் பேர் அங்கே வருவதில்லை. யாரோ ஒரு சுவாமிகள் அங்கே ஒரு முறை வந்து விட்டுப் போனார். போன இடங்களில் எல்லாம் அந்தக் கோயிலைப் பற்றிச் சொன்னார். அது பிரசித்தம் ஆகிவிட்டது. திருவிழாக் காலங்களில் சொல்ல முடியாத அளவு கூட்டம்!

அது அவ்வளவு கூட்டமில்லாத சாதாரணமான ஒரு நாள். விசாலமான கோயில் பிராகாரத்தில், ஒரு சாமியார் துண்டைப் பரப்பி உட்கார்ந்து கொண்டிருந்தார். கண் மூடவில்லை. ஆனால், அனாவசியமாக உடம்பு அசையவும் இல்லை. அப்படியே ஒரு தியான நிலையில் திறந்த பார்வையுடனேயே ஆழ்ந்திருந்தார்.

அது காலை ஒன்பது மணி நேரம். கோயில் அதிகாரி அவரைப் பார்த்துக் கொண்டே சன்னதிக்குப் போனார். யாரோ சன்னியாசி என்று எண்ணிக் கொண்டு போய் விட்டார். மாலையில் ஆறு மணிக்கு அதிகாரி சந்தியா கால பூஜைக்காக வந்தார். சாமியார் அந்த இடத்திலேயே,

அதே நிலையிலேயே உட்கார்ந்திருந்தார். அதிகாரிக்குச் சற்று ஆச்சரியம் உண்டாயிற்று. உள்ளே போய்ப் பூசாரியிடம் கேட்டார்.

''யார் அந்தச் சாமியார்? என்ன செய்கிறார்...?''

''தெரியவில்லை ஸார்! அப்படியே மோன நிலையில் அமர்ந்திருக்கிறார். துளி அசைவதில்லை'' என்றார் பூசாரி.

''சாப்பிட வேண்டாமோ...? என்ன செய்கிறார்...?'' என்று கேட்டார் அதிகாரி.

''நான் சுவாமிக்கு நிவேதனம் செய்த பிரசாதம் கொஞ்சம் கொடுக்கிறேன். அவ்வளவுதான்!'' என்றார் பூசாரி. அதிகாரி யோசித்துக் கொண்டே வீட்டுக்குப் போய்விட்டார்.

மறுநாள் காலை ஒன்பது மணிக்குக் கோயிலுக்கு வந்தார். சாமியார் அதே இடத்தில், அதே நிலையில் உட்கார்ந்திருந்தார். மாலை ஆறு மணிக்கு மீண்டும் கவனித்தார். சாமியாரின் நிலையிலோ இருப்பிடத்திலோ துளி மாறுதல் இல்லை.

இரண்டு, மூன்று நாட்கள் இப்படியே ஆகிவிட்டன. அதிகாரிக்குக் கவலை உண்டாகி விட்டது. 'யார் இந்தச் சாமியார்...? ஏன் அதே இடத்தில் உட்கார்ந்திருக்க வேண்டும்...? எதை அவர் கவனித்துக் கொண்டிருக்கிறார்?'' என்று எண்ணி எண்ணிக் குழம்பினார். 'இப்படியே விட்டு விட்டால் என்ன செய்வாரோ...? ஏதாவது உரிமை கொண்டாடினால் என்ன செய்வது...?கோவிலில் பக்தர்கள் நிறைய வரும் சமயத்தில் கலாட்டா நேர்ந்து விட்டால் என்ன பண்ணுவது...?'' என்று நினைத்துக் கலங்கிப் போனார்.

அவரைப்பற்றி பூசாரியிடம் மீண்டும் கேட்டார். ''அவர் எதுவும் செய்வதில்லை. சும்மா இருக்கிறார். அவ்வ

ளவு தான்! பேசுவதுகூட இல்லை. முழுக்கமுழுக்க மௌனம். அசைவதுகூட இல்லை. தூங்குகிருரோ என்பது கூடச் சந்தேகம்தான்.'' என்ருர் பூசாரி, அதிகாரியின் கலவரம் அதிகமாயிற்று. சாமியார் ஏதாவது பேசி, நடந்து இப்படி ஏதாவது செய்திருந்தால் கூட அவர் அவ்வளவு தூரம் பயந்திருக்க மாட்டார்.

''அவரை அங்கிருந்து எழுந்து போகச் சொல்லும்!'' என்ருர்.

''எப்படிச் சொல்வது? இது பொதுக் கோயில் ஆயிற்றே...?'' என்ருர் பூசாரி.

''அவருக்குச் சாப்பிடப் பிரசாதம் கொடுக்காதீர். இது என் கட்டளை,'' என்ருர்.

''உங்கள் உத்தரவு அதுவாளுல் நான் இங்கிருந்து கொடுக்கவில்லை. ஆனுல் என்னுல் அவர் பட்டினி கிடக்கப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. வீட்டில் சமைத்ததை அவருக்குக் கொடுப்பேன்.'' என்ருர் பூசாரி பிடிவாதமாக.

அதிகாரிக்கு கோபம் வந்துவிட்டது. ''சரி விடும்! நீர் ஒரு கோழை. நானே பார்த்துக் கொள்கிறேன்'' என்று சாமியாரிடம் போனுர். ''நீர் யார்...? இங்கே ஏன் வந்தீர்...? என்ன செய்து கொண்டிருக்கிறீர்...?'' என்று கேள்விகளை வரிசையாக அடுக்கினுர். சாமியார் வெறுமனே— புன்னகை செய்தார். அவ்வளவுதான் பதில்! பிறகு கையால் சாடை காட்டி அதிகாரியை உட்காரச் சொன்னுர். வம்பு வேண்டாம் என்று அதிகாரியும் உட்கார்ந்தார்.

ஐந்து நிமிடங்கள் ஆயின. அதிகாரி உட்கார்ந்து கொண்டேஇருந்தார். அவருக்கு உடம்பு நிலைகொள்ளவில்லை. சும்மா எப்படி உட்கார்ந்திருப்பது...? சாமியாரை மீண்டும் பார்த்தார். ''இன்னும் ஐந்து நிமிடங்கள் உட்கார்ந்திரும்!'' என்று ஜாடை காட்டினுர் சாமியார்.

இரண்டு மூன்று நிமிடங்களுக்கு மேல் தாளவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு ஐந்து நிமிடங்கள் உட்கார்ந்திருந்தார். அப்புறம் சாமியாரிடம் மறுபடி எதுவும் கேட்கவில்லை. எழுந்து ஓட்டமும்— நடையுமாக ஆபீஸ் அறைக்கு வந்து உட்கார்ந்து கொண்டுவிட்டார்.

பூசாரிமெதுவாகவந்து அறைக்குள் எட்டிப்பார்த்தார். "ஸார் என்ன நடந்தது... சாமியாரைப் போகச் சொல்லி விட்டீர்களா...?" என்று கேட்டார்.

'இல்லை' என்று தலையை ஆட்டினார் அதிகாரி.

"அவருக்கு நான் பிரசாதம் கொடுக்க அனுமதி உண்டா...?" என்று பவ்வியமாகக் கேட்டார்.

"தாராளமாகக் கொடும்! அவர் அங்கேயே இருக்கட்டும். எவ்வளவு நாட்கள் இருக்க வேண்டும் என்று நினைக்கிறாரோ, அவ்வளவு நாட்கள் இருக்கட்டும்!" என்றார் அதிகாரி.

"என்ன ஸார்...? என்ன நடந்தது...?" என்று வியப்போடுகேட்டார் பூசாரி. அதிகாரி புன்முறுவல் பூத்தார்.

"எதுவும் நடக்கவில்லை. சாமியார் என்னிடம் பேசக்கூட இல்லை. ஆனால் எனக்குப்புரியவைத்து விட்டார். என்னால் ஐந்து நிமிடங்கள் உட்கார்ந்திருக்க முடியவில்லை. அதுவும் சும்மா இருக்கவே முடியவில்லை. மேலும் ஐந்து நிமிடங்கள் உட்காரும்படி ஜாடை காட்டினார். இருந்தேன். உடம்பு நிலை கொள்ளவில்லை. எழுந்து ஓடியேவந்து விட்டேன். சாமியார் எப்படி நாட் கணக்கில் சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கிறார்...? சும்மா இருப்பது என்பது லேசுப்பட்ட காரியம் இல்லை. உடம்பையும் உள்ளத்தையும் கட்டிப் போடுவது என்பது எளிதான காரியமும் இல்லை! அவருடன் பேசாமலே நான் அவர் மகிமையைப் புரிந்து கொண்டு விட்டேன். சாமியார் என்னை

ளவு நாட்கள் வேண்டுமானாலும் அங்கேயே அப்படியே இருக்கட்டும். அதுநாம் செய்த பாக்கியம்!'' என்று கண்களில் நீர் மல்கச் சொன்னார் அதிகாரி.

பூசாரி பிரமித்துப்போய் நின்றார்.

● ●

# 3

அன்று அலுவலகத்தில் கடுமையான வேலை. எவ்வளவு வேலை இருந்தாலும் தாங்கிக் கொள்ளலாம். விட்டுத் தள்ளுங்கள். ஆனால் மனம் அமைதியாக இருக்க வேண்டும் அல்லவா? அந்த அமைதிதான் கிடைக்கவில்லை. அந்த உதவியாளரை மானேஜர் தன் அறைக்குக் கூப்பிட்டு வெளுத்துக் கட்டிவிட்டார்.

வீட்டுக்குத் திரும்பி வந்தவருக்கு வேலை ஓடவில்லை. யாரைப் பார்த்தாலும் கோபமாக வந்தது. அட்டெண்டர் மீது சீறி விழுந்தார். அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டு போய் விட்டான். மானேஜர் கிளம்பியதும் செருப்பை மாட்டிக் கொண்டு 'விருட்'டென்று கிளம்பிவிட்டார்.

அவருடைய வீடு ஒரு மைல் தூரத்தில் தான் இருந்தது. பஸ்ஸில் ஏறிப்போவது வழக்கம். அன்று நடந்தே போனார். வழிநெடுக மனம் குமுறிக் கொண்டே வந்தது. எதிர்த்துப் பேச முடியாத மானேஜரை மனத்துக்குள்ளேயே எதிர்த்துச் சண்டைபோட்டுக் கொண்டே வந்தார்.

வீட்டு வாசலில் விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகள் அப்பாவைத் தூரத்தில் கண்டதும், உள்ளே ஓடிவந்து, ''அம்மா! அம்மா...! அப்பா வந்தாச்சு.'' என்று சத்தம் போட்டுச் சொன்னார்கள். அவள் ஜன்னல் வழியாகப் பார்த்தாள். அவருடைய சோர்ந்த நடை, தொங்கிப் போன முகம், கடுகடுப்பான பார்வை, எல்லாவற்றையும் பார்த்து, 'ஓஹோ...! அவருக்கு இன்றைக்கு ஏகப்பட்ட கோபம் வந்திருக்கிறது!' என்று புரிந்து கொண்டுவிட்டாள். குழந்தைகளால் தொந்தரவு வந்து விடும் என்று அஞ்சி பக்கத்து வீட்டுக்கு அனுப்பிவிட்டாள்!

வீட்டு வாசலுக்கு வந்தார் கோபக்காரரான கணவன். வாசலில் குழந்தைகள் சத்தம் போட்டு விளையாடி இருந்தால் கோபித்துக் கொண்டிருப்பார். மேலே வந்து விழுந்து கட்டிக் கொண்டிருந்தால் எரிந்து விழுந்து முதுகில் போட்டிருப்பார்! இரண்டும் இல்லை. அதனால் அவருடைய கோபத்துக்கு வாசலில் வடிகால் கிடைக்கவில்லை.

வாசல் கேட் திறந்து வைக்கப் பட்டிருந்தது. கோபமாக மூட முடியவில்லை. வீடு துப்புரவாகப் பெருக்கி வைக்கப்பட்டிருந்தது. சிறு தும்பு தூசிகூட இல்லை. அந்தந்த சாமான்கள் அந்தந்த இடத்தில் இருந்தன. 'வீட்டை வைத்துக் கொள்ளுகிற லட்சணத்தைப் பார்!' என்று சொல்லிச் சீற முடியவில்லை. உட்காருகிற நாற்காலிக்கு மேல் மின்விசிறி சரியான அளவுக்குப் போடப்பட்டிருந்தது. அவர் அதில் உட்கார்ந்த போது அமைதிதான் இருந்ததே தவிர மனக்கலக்கம் ஏற்படவில்லை.

ஐந்து நிமிடங்கள் உட்கார்ந்து விட்டு உள்ளே போய் உடைகளை மாற்றிக் கொண்டார். குழாயடியில் தண்ணீர் பிடித்து வைக்கப்பட்டிருந்தது. பக்கத்திலேயே செம்பு வைக்கப் பட்டிருந்தது. கால் கழுவிக் கொள்ள குறை ஏதுமில்லை. மனைவியிடம் கோபிக்க வழியே இல்லை.

திரும்பி உள்ளே வந்தார். நாற்காலிக்கு எதிரே ஒரு ஸ்டூல் போடப்பட்டு அதன் மேல் காப்பி வைக்கப்பட்டிருந்தது. காப்பி சரியான சூட்டில் இருந்தது. ரொம்ப ஆறவும் இல்லை; ஆவி பறக்கவும் இல்லை. அவரால் அங்கேயும் எரிந்து விழமுடியவில்லை.

தன் கோபத்தை எங்கேயாவது கொட்டித் தீர்த்து, மனத்தாங்கலை ஆற்றிக் கொண்டுவிட வேண்டும் என்று அவருக்கு ரொம்ப வேகம். ஆனால், அதற்கு வாய்ப்பே கிடைக்கவில்லை! மனைவியைக் கண்ணிலேயே காணவில்லை! கோப்பையில் ஸ்பூன் போட்டு வைத்திருந்த காப்பியை எடுத்து மெல்ல உறிஞ்சினார். சர்க்கரை இல்லை...

வந்தது கோபம்! (அப்பாடா! ஒரு வழியாக ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது) ''அடியே! எங்கே தொலைந்து போனாய்?'' என்று கூச்சல் போட்டார். மனைவி சமையலறையிலிருந்து வெளியே வரவில்லை. அங்கிருந்தபடியே ''என்ன வேணும்...?'' என்று கேட்டாள்.

''வெளியே வந்து கேட்பதுதானே? நாள் முழுவதும் உழைத்து விட்டு வந்திருக்கிறேன். ஏனென்று கேட்பாரில்லை! எனக்குக் காப்பி கொடுக்கிற லட்சணம் இதுதானா? ஏன் சர்க்கரை போடவில்லை? உன் பாட்டன் வீட்டுச் சொத்தா?'' என்று கோபத்துடன் பொரிந்து தள்ளினார்.

மனைவி மெதுவாக வெளியே வந்தாள். கோப்பையில் இருந்த ஸ்பூனால் காப்பியை நன்றாகக் கலக்கிவிட்டு, அமைதியுடன் ஸ்பூனை எடுத்துக் கொண்டு போய்விட்டாள். இப்போது காப்பியை எடுத்துப் பருகினார் அவர். அளவான இனிப்புடன் கூடாமல்—குறையாமல் காப்பி 'ஜம்'மென்று இருந்தது!

வாழ்க்கையில் மகிழ்ச்சி என்பது மறைந்து கிடக்கிறது. அதை உண்மையாக அனுபவித்துத் திருப்தி அடையவேண்டு மானால், மனத்தை அவ்வப்போது, சோதனைசெய்து கலக்கி, அந்த இனிமையை வெளியே கொண்டு வரவேண்டி இருக்கிறது.

● ●

# 4

தினம் காலையில் நான் 'வாக்கிங்' போகிறதுண்டு. தனியாகத்தான் போவேன். அப்போதுதான் சுற்றி இருப்பவை களைப் பார்க்கலாம்.

அன்றும் நான் தனியாகவே 'வாக்கிங்' போய்க் கொண்டிருந்தேன். அந்த அழகான பங்களா என் கண்ணிற் பட்டது. அந்தக் கட்டிடம் என்னைக் கவரவில்லை. காம்பவுண்டுச் சுவர் ஓரமாக இருந்த மரம்தான் என்னை அங்கே கவர்ந்து இழுத்தது. அருகே போனேன். வாசலில் 'நாய் ஜாக்கிரதை' என்று போர்டு போட்டிருந்தது. அதைக்கூட நான் லட்சியம் செய்யவில்லை. 'கேட்டைத்' திறந்து கொண்டு உள்ளே சென்றேன்.

அந்த மரம் அப்போதுதான் வளர ஆரம்பித்திருந்தது. ஏராளமான பசுமையான இலைகள் செறிந்து கிடந்தன. கிளைகள் நாலா புறமும் விரிந்திருந்தன. அங்கங்கே ஓரிரு புஷ்பங்கள் கண் சிமிட்டுவது போலப் பூத்திருந்தன. நான் அதன் அழகையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

''யார் அங்கே? என்ன வேண்டும் உங்களுக்கு?'' என்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். பங்களா வின் சொந்தக்காரரர் நின்றுகொண்டிருந்தார். ''இது ரொம்ப அழகான மரம். சென்னையில் சாலையில் இருக்கிற மரங்களையெல்லாம் வெட்டி விட்டார்கள். எங்கே பார்த் தாலும் வெறிச்சோடிக்கிடக்கிறது. இங்கே இந்த இளம் மரத்தின் பசுமையைப் பார்த்ததும் உள்ளே வரத் தோன் றிற்று. அதனால் வந்தேன்.'' என்று சொன்னேன்.

அவர் என்னை உள்ளே அழைத்தார். போனேன். நல்ல காப்பி கொடுத்தார். சாப்பிட்டேன். விடைபெற்று எழுந்து வரும்போது தோட்டக்காரனைக் கூப்பிட்டார். ''கிளைகளை வெட்டு'' என்று சொன்னார். அவன் அரிவாளை எடுத்துக்கொண்டு வந்தான். என் கண் முன்னாலேயே அந்த மரத்தின் கிளைகளைச் சுற்றிலும் வெட்ட ஆரம்பித்தான். எனக்கு மனம் துடித்தது. மரத்தில் குலுங்கிய பசுமை கீழே வெட்டப்பட்டுக் கிடந்தது.

''இந்த வீட்டுக்காரரர் ஒரு 'மாதிரி'யான சித்தம் கொண்டவரோ? பிறர் தன் மரத்தைப் பார்த்து 'அழகாக இருக்கிறது' என்று சொன்னால் கூடப் பொறுக்காதவரோ? ஏன் இப்படிச் செய்தார்? ஏன் நாம் உள்ளே வந்து சொன் னோம்?'' என்று எண்ணி மறுகினேன். பேசாமல் வந்து விட்டேன்.

சாலையிலிருந்து பார்த்தேன். இளமையான மரம் மொட்டையாகக் காட்சி அளித்தது. தோட்டக்காரன் மேல் நோக்கி உயரும் கிளைகளை மட்டும் வெட்டவில்லை. மற்றக் கிளைகளையெல்லாம் சுற்றிலும் கத்தரித்து விட்டான். அங்கே இருந்த இரண்டொரு மலர்களும் போய்விட்டன. எனக்குக் கண்களில் ஈரம் கசிந்தது. அந்தப்பக்கம் மறுபடி 'வாக்கிங்' போகக் கூடாது என்று தீர்மானித்துக் கொண் டேன். ஒரு மாதம் கழித்து அந்தப் பிடிவாதத்தைத் தளர்த்திக் கொண்டு அந்த சாலை வழியாகவே 'வாக்கிங்' போனேன்.

அந்த மரம் உயரமாக வளர்ந்திருந்தது. கச்சிதமான அளவும் அதில் அழகாக அமைந்த பசுமையும் பார்க்கக் குளிர்ச்சியாக இருந்தது. தோட்டக்காரன் வெட்டிவிட்ட அடையாளமே தெரியவில்லை.

மேலும் ஒரு மாதம் கழித்து அந்தப்பக்கம் போனேன். என்ன ஆச்சரியம்! மரம் நிறையப் பூத்திருந்தது, கொள்ளையாக மலர்ந்திருந்தது. மரத்தைப் பார்ப்பதற்கு அலங்காரம் செய்துவிட்ட மாதிரி இருந்தது. அந்தப் பசுமையும் மலர்ச்சியும் என் மனத்தைக் கொள்ளை கொண்டன. என்னையும் அறியாமல் அந்த பங்களாவுக்குள் போனேன்.

வீட்டுக்காரர் வாசலிலேயே நின்று கொண்டிருந்தார். "வாருங்கள்! வாருங்கள். எங்கே இரண்டு மாதங்களாக கண்ணிலேயே படவில்லை?" என்று விசாரித்தார். 'நல்ல வேளை ஒரே ஒரு தடவை பார்த்தாலும் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறார். நிச்சயமாக நல்ல காபி கிடைக்கும்!' என்று நினைத்துக் கொண்டேன். அவர் என்னை ஏமாற்றவில்லை. உள்ளே அழைத்துச்சென்றார். நல்ல காப்பியும் கிடைத்தது.

காப்பி அருந்தியதும் அவரிடம் சொன்னேன், "உங்கள் மேல் எனக்குக் கோபம். அன்று நான் உங்கள் பங்களாவின் வாசலில் மரம் நன்றாகப் பசுமையாக இருக்கிறது என்று சொன்னதும் வெட்டித்தள்ளி விட்டீர்கள். அதனாலேயே நான் இந்தப் பக்கமே வரவில்லை!"

"இப்போது?" என்று அவர் சிரித்துக்கொண்டே கேட்டார்.

"மரம் நன்றாக வளர்ந்திருக்கிறது. கொள்ளையாகப் பூத்திருக்கிறது. அதைப் பாராட்டத்தான் வந்தேன்!" என்றேன்.

"'அன்று நான் அப்படி நாலுபுறமும் படர்ந்திருந்த கிளைகளைத் கத்தரித்து ஒழுங்குபடுத்தச் செய்யாமல் விட்டிருந்தால், மரம் தாறுமாருக வளர்ந்திருக்கும். பூக்களே இருந்திராது. வெறும் இலைக்காடாகவே இருந்திருக்கும். அன்று கூசாமல் நாலு புறமும் வெட்டித் திருத்தியதன்பலன் இன்று மரம் பூத்துச் சொரிகிறது!'' என்ருர் பங்களாவின் சொந்தக்காரர்.

வெளியே வந்தேன். என் மனம் அந்தச் சிந்தனையிலேயே ஆழ்ந்து ஒன்றியது. 'இறைவன் மனிதனுக்கு எல்லா வசதிகளையும் கொடுக்கிருன். அவனுடைய மனம் நாலாவிதமான ஆசைகளிலும் படர்கிறது. அந்த மனத்தை அப்படியே அலைய விட்டு விட்டால், அவனுடைய இளமை, சாமர்த்தியம், அறிவு எல்லாமே வீணுகப் போய் விடுகிறது.'

ஆனல் தக்க பிராயத்திலேயே மனத்தைக் கட்டுப்படுத்தி, வீணுக அலையும் மனத்தைத் தடுத்து, ஆன்ம வளர்ச்சிக்கு ஏற்ப உயரும்படி அவன் வைராக்கியம் எடுத்துக் கொண்டால், வாழ்க்கை பலிதம் அடைகிறது. திறமை சோபிக்கிறது. வாழ்க்கையில் வெற்றி கிடைக்கிறது.

● ●

# 5

அது சென்னையில் வட பகுதியைச் சேர்ந்த இடம். ரொம்பக் குறுகலான ஒரு சந்து. காற்று உள்ளே வருவதானல் உத்தரவு கேட்டுக் கொண்டுதான் வரவேண்டும். எப்

போதும் அங்கே 'ஜேஜே' என்று மக்கள் கூட்டம் இருக்கும். நெரிசல் போதாது என்று கட்டை வண்டிகளும் வரும். சாமான்கள் வந்து இறங்குவதும் போவதுமாக இருக்கும்.

இந்த இடத்தில்தான் சேட்ஜியின் கடை இருக்கிறது. விடியற்காலையிலேயே அவர் அங்கே வந்து விடுவார். பெரிய திண்டுமெத்தை போட்டிருக்கும். சுவற்றில் மகா லட்சுமி, கணபதி படங்கள் தொங்கும். எல்லாவற்றுக்கும் மாலை போட்டு ஊதுபத்தி காட்டி வணங்குவார். பிறகு கொத்துச் சாவியுடன் இரும்புப் பெட்டியின் அருகில் உட் கார்ந்து கொள்வார்.

காலைச் சிற்றுண்டி வீட்டிலிருந்து வந்து சேரும். அங்கேயே ஒரு பக்கம் உட்கார்ந்து சாப்பிடுவார். சுடச் சுடக் காப்பி பக்கத்து ஹோட்டலிருந்து வரும். அதைத் தான் குடிப்பார். நண்பர்களுக்கும் (கேட்டால்) கொடுப் பார். கடைக்கு வருபவர்கள் யாராஞலும் ஒரு நாலரை அங்குலப் புன்னகையுடன் வரவேற்பார்.

ஒரு மணி வரைக்கும் அசையாமல், நகராமல் அதே நிலைதான். அதே புன்னகைதான். அது சேட்ஜியின் பிராண்டு. அப்புறம் வீட்டிலிருந்து டிபன் பாக்ஸில் சாப் பாடு வரும். பக்கத்திலேயே இருக்கும் சிறு அறையில் தட் டைப் போட்டுக்கொண்டு சாப்பிடுவார். அப்போதும் கண் பார்வை இரும்புப் பெட்டியின் மேலேயே இருக்கும். இடது கையால் இடுப்பில் உள்ள கொத்துச் சாவியைத் தொட்டுக் கொண்டே இருப்பார்.

பிற்பகலில் அவர் தூங்குவதில்லை. திண்டில் சாய்ந்த படி வாடிக்கைக்காரர்களுடன் பேசுவார்; சிரிப்பார். இரண்டும் இல்லாத வேளையில் இரண்டு நிமிஷம் கண்களைக் கொட்டி விழிப்பார். அவ்வளவு தான்.

மாலையில் அவர் வெளியே போவதில்லை. வேறே பொழுது போக்குகளும் இல்லை. விளக்கேற்றியதும் கன்னத்தில் போட்டுக்கொண்டு, நெற்றிக்குக் குங்குமம் தரித்துக் கொண்டு உட்காருவார். இரவு ஒன்பதரை மணிவரையில் அதே நிலைதான். கடைப் பையன்கள் ஒவ்வொருவராகச் சொல்லிக் கொண்டு புறப்படுவார்கள். எல்லாரையும் அனுப்பிவிட்டுக் கடைசியாக அவர், வெளியே வருவார். இரட்டைப் பூட்டை இழுத்துப் பூட்டி, கையால் இழுத்துச் சரி பார்த்துவிட்டுப் பத்து மணிக்குக் கிளம்புவார்.

கொஞ்ச தூரம் போய்விட்டு மறுபடி வந்துப் பூட்டை இழுத்துப் பார்த்து விட்டுப் போவார். தெருக்கோடியில் வழக்கமான ரிக்ஷாக்காரன் காத்திருப்பான். அதில் ஏறிக் கொண்டு ஒரு மைல் தொலைவில் உள்ள வீட்டுக்குப் போவார். அவனுக்கு ஐம்பது பைசா கூலி. ஆனால் நிச்சயமான கூலி. அதற்காக அவனும் தினந்தோறும் காத்திருப்பான்.

வீட்டுக்குப்போய் சாப்பிட்டுவிட்டு, வெற்றிலைப்பாக்கு போட்டுக்கொண்டு மனைவியிடம் சொற்பமாகக் குடும்ப விஷயங்களைப் பேசுவார். பிறகு சட்டையைக் கழற்றி விட்டுக் காற்றுட வந்து உட்காருவார். பெரிய கணக்குப் புத்தகத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு கணக்குகள் எழுதுவார். கடையில் எழுதுவது வருமான வரி வணிக வரி அலுவலர்களைத் திருப்தி செய்து கொள்வதற்காக. வீட்டில் எழுதும் கணக்கு தன்னையே திருப்தி செய்து கொள்வதற்காக, அதை எழுதி முடித்த பிறகுதான் அவருக்குத் தூக்கம் வருகிறது. அப்புறம் தூக்கத்திலும் அவருக்கு அதே நினைவுதான். கனவிலும் போனில் பேசுகிறார். வாடிக்கைக் காரர்களுடன் வாதாடுகிறார்; சிரிக்கிறார்.

பொழுது விடிகிறது. அவருக்கு இருப்புக் கொள்வதில்லை. அந்த வீடும் வசதிகளும் திருப்தி தருவதில்லை,

சலவைக்கல் தரையும், மென்மையான மஞ்சமும், குளிர் சாதனமும் இன்பமாக இருப்பதில்லை. பெரிய பங்களாவும் சுற்றிலும் உள்ள நந்தவனமும் மனத்துக்கு இனிமை கொடுப்பதில்லை.

விடிந்து எழுந்ததும் அவசரமாகக் குளிக்கிறார். உடையணிந்து வெளியே புறப்படுகிறார். குறுகலான அந்த சந்தில் இரைச்சல் நிறைந்த சூழ்நிலையில் அந்தச் சின்னக் கடைக்கு வந்து பூட்டைத் திறக்கும் போதுதான் அவருக்கு மனம் பூரித்துப் போகிறது. காற்றோட்டம் இல்லாத சிறு அறையில் திண்டுபோட்ட மெத்தையில் உட்கார்ந்து இரும்புப் பெட்டியைத் திறந்த பிறகுதான் அவருக்குத் திருப்தி கிடைக்கிறது. காலைச் சிற்றுண்டி கூட வசதியான அந்த வீட்டில் இல்லை; வசதிகள் குறைந்த இந்தக் கடையில் தான்.

'அவ்வளவு வசதியான அந்த வீடு ஏன் உங்களுக்குப் பிடிக்கவில்லை?' என்று நீங்கள் அவரிடம் கேட்கலாம்.

'அந்த வீடும் வசதியும் என் மனைவி, மைத்துனன், மைத்துனி, குழந்தைகள் ஆகியவர்களுக்காக. இந்தக் கடையும், இங்கே செய்யும் வேலையும் என் திருப்திக்காக. இந்தச் சூழ்நிலைதான் எனக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறது.' என்று அவர் பதில் சொல்லுவார்.

தன்னலம் மிகுந்தவர்களும், அறியாமை கொண்டவர்களும், தான் என்ற அகந்தை உடையவர்களும், தங்களை வளர்த்துக்கொள்வதிலும் தங்களுக்குச் சுகம் தேடிக்கொள்வதிலுமே நாட்டம் கொள்ளுகிறார்கள்.

புத்திசாலிகளும், மனப்பக்குவம் அடைந்தவர்களும், தான் உழைத்துப் பிறருக்கு சுகமும் சௌக்கியமும் தேடித் தருவதில் இன்பம் அடைகிறார்கள். அந்த உழைப்பிலேயே

மனநிறைவை அடைகிறார்கள். அவர்கள் அடையும் பலன்கள் அவர்களை அடிமையாக்க முடிவதில்லை.

சேட்ஜியின் வாழ்க்கை தன்னலமற்ற இந்தத் தியாக வாழ்க்கைக்கு ஒரு சிறு உதாரணம். அந்த மனப்பான்மை ஒவ்வொரு குடும்பத்திலும் இடம் பெறும்போது உலகம் உய்வடைகிறது.

● ●

# 6

நகரத்தில் எல்லோரும் 'போர்ஷ'னில் தான் குடி இருப்பார்கள். நீங்களும் அப்படி ஏதாவது ஒரு 'போர்ஷ'னில்தான் குடி இருப்பீர்கள். நீங்கள் குடி இருக்கும் பகுதிக்குப் பக்கத்தில் ஒரு சிறு குடும்பம் இருக்கிறது. அழகான கணவன், அழகான மனைவி, அவர்களுடைய அழகான குழந்தை ஆக மூவரும் இருக்கிறார்கள்.

கணவனும் மனைவியும் வேலை பார்க்கிறார்கள். அதனால் அந்தச் சிறுவனைப் பார்த்துக்கொள்ள யாரும் இல்லை. அவனுக்கு மூன்று வயதுதான் ஆகிறது. ஆகையால் பள்ளிக்கூடத்துக்கும் அனுப்பமுடியாது. உங்களிடம் இருவரும் வந்து பேசுகிறார்கள். தயங்கிக்கொண்டே கேட்கிறார்கள். உங்களுக்குப் புரிந்து விடுகிறது. வாய் விட்டுச் சிரிக்கிறீர்கள்.

"ஓ! நான் ரிடையர் ஆனவன். வேலை இல்லாமல் வீட்டில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். படித்தாலும் தூங்கினாலும் பொழுது போகவில்லை. குழந்தையை என்னி

டம் விட்டுவிட்டுப் போங்கள். நான் பார்த்துக் கொள்கி றேன்.'' என்று சொல்கிறீர்கள். தினமும் காலையில் பத்து மணிமுதல் மாலை ஆறு மணிவரை குழந்தை உங்களிடம் இருக்கிறது. சாப்பிடுவது, தூங்குவது, விளையாடுவது எல்லாம் உங்களுடன்தான்!

குழந்தையின் விளையாட்டுக்கள் உங்களுக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. அவனுக்குச் சரியாக நீங்களும் விளையாடு கிறீர்கள். அவன் உங்கள் முதுகில் சவாரி செய்கிறான். உங்கள் நாற்காலிக்கு அடியிலேயே அவன் ஒளிந்து கொள் கிறான். நீங்கள் அது தெரியாததைப்போல வீடு முழுவதும் தேடிக் கடைசியில் கண்டுபிடிக்கிறீர்கள். அவன் கை கொட்டிச் சிரிக்கிறான். உங்களுக்கும் ஆனந்தமாக இருக்கிறது.

ஒருநாள் அவன் மூன்று பெரிய கோலிக் குண்டுகளைக் கொண்டு வருகிறான். முதல் நாள் மாலை அவனுடைய அப்பா கடையிலிருந்து வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தவை அவை. ஒன்று நீலம். இன்னொன்று பச்சை. மற்றொன்று சிவப்பு. எல்லாமே அழகான பெரிய, கண்ணாடிக் குண்டுகள்.

''உனக்கு வேண்டுமா? உனக்கு யாரும் வாங்கித் தர வில்லையே?'' என்று கேட்கிறான் குழந்தை. நீங்களும் பாசாங் குக்காகச் சிணுங்குகிறீர்கள். நான்கு வயதுக் குழந்தையாக இருந்த போது நீங்கள் எவ்வளவோ ஆசையுடன் அவற்றைப் போல கோலிக் குண்டுகளை வைத்து விளையாடி இருக் கிறீர்கள். பத்திரமாக பெட்டியில் வைத்துப் போற்றி இருக்கிறீர்கள் குழந்தைக் கொடுத்ததைப் பார்த்ததும். உங்களுக்கு அந்த ஞாபகம் எல்லாம் வருகிறது.

''சரி! ஏதாவது ஒன்றை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்கிறது குழந்தை. அதற்கு அந்த நீல நிறக் கோலிக் குண்டின்மீது ரொம்ப ஆசை. எங்கே நீங்கள் அந்தக் கோலியை எடுத்துக் கொண்டு விடுவீர்களோ

என்று அதன் மனசு பதை பதைக்கிறது. உங்கள் விரல் நீல நிறக் கோலிக்கு அருகில் போகும் போதெல்லாம் அவன் குதிக்கிறான். கடைசியில் அடக்க முடியாமல் சொல்லி விடுகிறான்:

''தாத்தா! எனக்கு அந்த நீல நிறக் கோலி வேண்டும். அதை மட்டும் கேட்டு விடாதீர்கள்!'' என்று கெஞ்சுகிறான். நீங்களும் விட்டுக் கொடுக்கவில்லை. அதுதான் உங்களுக்கும் வேண்டும் என்று பிடிவாதம் பிடிப்பது போல நடிக்கிறீர்கள். குழந்தை எல்லாக் கோலிக் குண்டுகளையுமே எடுத்துக் கொண்டுபோய் விடுகிறான்.

பத்து நிமிடங்கள் கழித்து வந்து எட்டிப் பார்க்கிறான். உங்கள் முகம் வாடிப் போயிருப்பதுபோல அவனுக்குத் தோன்றுகிறது. கிட்டே வந்து நீல நிறக் கோலிக் குண்டை உங்கள் மடியில் போடுகிறான். நீங்கள் எடுத்துக் கொள்ளுகிறீர்கள். அவனுக்கும் அளவிலாதமகிழ்ச்சி உண்டாகிறது. கையைத் தட்டிச் சிரிக்கிறார்.

கொஞ்ச நேரம் ஆகிறது. அவனுக்கு நீங்கள் வாசலில் போகும் ஐஸ்கிரீமை வாங்கிக் கொடுக்கவில்லை. ''உடம்புக்கு ஆகாது. உனக்குச் சளி பிடித்திருக்கிறது. நாளைக்கு வாங்கிக் கொள்ளலாம்.'' என்று சொல்லுகிறீர்கள். அவனுக்குக் கோபம் வந்து விடுகிறது. நீல நிறக் கோலிக் குண்டைப் பிடுங்கிக் கொண்டு போய்விடுகிறான். நீங்கள் அழுவது போலப் பாசாங்கு செய்கிறீர்கள். அவன் லட்சியம் செய்யவில்லை. ''உங்களுக்கு நன்றாக வேண்டும். அப்படித் தான் செய்வேன்!'' என்று விரலை ஆட்டி எச்சரித்துவிட்டுப் போகிறான்.

நீங்கள் அவனுடன் ஆசையாக விளையாடுகிறீர்கள். அந்த விளையாட்டில் உயிரும்உற்சாகமும் இருக்கவேண்டுமே என்பதற்காக அதில் ஈடுபாடுகொண்டது போல நடிக்கிறீர்கள். சாதாரணக் கோலிக்குண்டு உங்களுக்கு மிகப் பிரிய

மான பொருளைப் போலப் பாவித்துப் பாசாங்கு செய்கிறீர்கள். குழந்தைக்காக விளையாட்டு தொடருகிறது. ஆனால் அதில் ஈடுபட்டுள்ள உங்களுக்கு எதிலுமே பற்று இல்லை. எதையுமே உண்மையில் நீங்கள் ஒரு பொருட்டாகக் கருதவில்லை.

மனப்பக்குவம் அடைந்தவன், அனுபவங்களால் பழுத்து முதிர்ந்தவன் இந்த உலகத்தில் அப்படித்தான் வாழ்கிறான். தன்னைச் சுற்றிலும் உள்ள சூழ்நிலையில் ஒன்றிப் போனவனாக அவன் காணப்பட்டாலும், அவன் உள்ளம் ஆண்டவனைத் தவிர வேறு யாரிடமும், எந்தப் பொருளிடத்தும் பற்றுக் கொள்வதில்லை.

● ●

# 7

அந்தக் கிராமத்திலேயே மிகப் பெரிய கில்லாடி காளி. பெரிய மனிதர்கள் யாரும் அவனை விரோதம் செய்து கொள்வதில்லை. வீட்டுக்கு வந்து பணம் கேட்டால் வெற்றிலை பாக்கு வைத்துக் கொடுத்து விடுவார்கள்.

அவன் தெருவில் போனால் பெண்கள் அந்தப் பக்கமே வரமாட்டார்கள். அவ்வளவு பயம் குழந்தைகள் அவனைக் கண்டால் அழுகையை நிறுத்திவிட்டு உள்ளே ஓடிவிடுவார்கள்.

கிராமத்தில் ரகளை, சண்டை, பூசல் எல்லாம் எங்கே நடந்தாலும் அங்கே காளி இருப்பான். அவனுடைய

கட்சிதான் ஜெயிக்கும். அவன் சொல்லுவதைத்தான் மக்கள் நியாயம் என்று எடுத்துக் கொள்வார்கள். வேறு விதமாகப் பேசினால் அவர்களுக்கு உதை கிடைக்கும்.

ஊரில் நிலத்தில் சாகுபடி, அறுவடை எல்லாம் அவன் சொற்படிதான். அதில் அவனை மீறி நடந்தால் பயிர் பறி போய்விடும். அடிதடியில் உயிர்கூடப் போய்விடும். பல கொலைகளுக்கு அவன்தான் காரணம் என்று மக்கள் நம்பியதுண்டு. ஆனால், போலீசாரிடம் யாரும் புகார் செய்ததில்லை.

ஒரு நாள் காளியின் மனைவி திடீரென்று இறந்து போனாள். அதனால் அவனுக்கு வாழ்க்கையில் கசப்பு வந்து விட்டது. கிராமத்தையும் அதன் சூழ்நிலையையும் மறக்க எண்ணினான். டவுனுக்குப் போய் இராணுவத்துக்கு ஆள் சேர்க்கும் அலுவலகத்தில் தன் பெயரைப் பதிவு செய்து கொண்டான். அவர்களுக்குத் தேவையான அளவு உடற் கட்டு, அளவுகள், சக்தி எல்லாம் காளிக்கு இருந்தது. அதனால் அவனைத் தேர்ந்தெடுத்தார்கள். கிராமத்து மணியகாரர் அவனுக்கு சர்டிபிகேட் எழுதிக் கொடுத்தார். அவருக்கு அவன் எப்படியாவது ஊரைவிட்டுப் போனால் போதும் என்று இருந்தது.

காளி இராணுவத்தில் சேர்ந்தான். இமாலய எல்லையில் கடுமையான குளிர் இருக்கும் பிரதேசத்தில் அவனைக் காவல் வேலைக்குப் போட்டார்கள். அவனுக்கு இந்த வேலை மிகவும் பிடித்திருந்தது. அடிப்பதும், உதைப்பதும் அவனுடைய இயற்கையான சுபாவம் அல்லவா...? தன் னுடைய பணிகளில் வேடிக்கையாகவே ஈடுபடத் தொடங் கினான்.

கொஞ்சம் கொஞ்சமாக அவனுக்குக் கடமை உணர்ச்சி வந்துவிட்டது. தன்னுடைய வேலையைக் கண்ணும் கருத்துமாகக் கவனிக்கத் தொடங்கினான். அவன் சுட்டால்

குறி தப்பாது. இரவு வேளைகளில் கண்கொட்டாமல் விழித்திருப்பான். அவனை ஏமாற்றி எல்லையைக் கடந்துவர நினைத்த எதிரிகள் அவன் குண்டுக்கு இரையானார்கள்.

காளிக்குப் பதவி உயர்வு கிடைத்தது. பாராட்டும் கிடைத்தது, ஆபீசர் லீவு கொடுத்து அவனை ஊருக்குப் போய் விட்டுத் திரும்பும்படி அனுப்பினார். காளி கிராமத்துக்குத் திரும்பி வந்தான். கிராமத்து மக்களுக்கு அவனுடைய வீரச் செயல்கள் தினசரி பத்திரிகைகளின் மூலம் தெரிந்திருந்தன. அவனுக்கு அமோகமான வரவேற்புக் கொடுத்தார்கள்.

பெண்கள் அவனுக்குக் திலகமிட்டார்கள். பெரியவர்கள் மாலை போட்டார்கள். குழந்தைகள் கைதட்டி வரவேற்றார்கள்.

அதே காளிதான் இவன். அவனுடைய உருவம் மாறவில்லை. அதே முரடன்தான் இவன். அவனுடைய கரடுமுரடான சுபாவம் மாறவில்லை. அந்த வேலையிலும் அவன் அடிக்கிறான்—உதைக்கிறான்—கொல்லுகிறான். ஆனால் யாரும் அவனைக் கேடி என்று சொல்லவில்லை. கொலைகாரன் என்று தூற்றவில்லை.

என்ன காரணம்? மாறாத அவனை மக்கள் எப்படி மனம் மாறி வரவேற்கிறார்கள்...?

காளி இப்போது தன் கடமையைச் செய்கிறான். தனக்காகச் செய்யவில்லை. தன்னுடைய நாட்டுக்காகச் செய்கிறான் 'நான் செய்தேன்!' என்று தற்பெருமைக் கொள்ளவில்லை. 'நான் சார்ந்துள்ள ராணுவப் படை செய்தது!' என்றுதான் பெருமைப்படுகிறான். அவனுடைய எண்ணத்திலோ செய்கையிலோ, 'தான், தனக்கு' என்ற பிடிப்பு இப்போது இல்லை. அதுவே அவனை உயர்த்தி விட்டது.

தான் என்ற அகந்தையோ, தனக்கு என்ற ஆசையோ இல்லாமல் வாழப் பழகிக் கொள்ள வேண்டும். தனது பணியில் தன் பங்கை ஒரு தியாகமாகவே கருத வேண்டும். சாதாரண மனிதனைக்கூட அது மிக உயர்ந்த நிலையில் கொண்டு சேர்த்துவிடும்.

● ●

# 8

அந்த ஊருக்கு ஒருநாள் அந்த சுவாமியார் வந்து சேர்ந்தார். ஒரு மரத்தடியில் வந்து உட்கார்ந்து நிம்மதியாகத் தியானம் செய்யத் தொடங்கினார். நல்ல மனிதர்கள் அங்கே வந்து அவரை வணங்கிவிட்டு விபூதிப்பிரசாதம் வாங்கிக்கொண்டு போனார்கள். கொஞ்சம் கொஞ்சமாக சுவாமிகளிடம் பக்கத்து ஊர்களிலிருந்தும் கூட்டம் வரத் தொடங்கியது. அவரைத் தங்கள் கிராமத்துக்கும் வர வேண்டும் என்று அழைத்தார்கள். சுவாமிகளும் அக்கம் பக்கத்து ஊர்களுக்குப் போய் வரலானார்.

பக்கத்து ஊரில் இருந்த மிராசுதாரர் ஒருவர், சுவாமிகளுக்கு ஒரு ஏக்கர் நிலத்தைத் தனது காணிக்கையாகக் கொடுத்தார். அது ஓர் அபூர்வமான நிலம்! சரியான மேடு. தண்ணீர் லேசில் அங்கே பாயாது. மழை பெய்தால் உடனே வடிந்து விடும். மேலே ஒரு அடி உயரத்துக்கு உபயோகமில்லாத மண் இருந்தது. அதை வெட்டி எடுத்தால்தான் பயிர் செய்யலாம். மிராசுதாருக்கு அந்த நிலம்

எந்த வகையிலும் உபயோகம் இல்லை. சுவாமிகளுக்குக் கொடுத்துவிட்டார்!

துறவியான சுவாமிகளுக்கு நிலம் எதற்கு? அந்த இடத்தைப் பார்க்கப்போனார். நிலத்தின் தகுதியைப் பார்த்துத் தனக்குள்ளே சிரித்துக்கொண்டார். அங்கே இருந்த ஒரு ஏழை விவசாயி அவரைக் கண்டு, அவர் காலில் விழுந்து வணங்கினான். ''இந்த நிலத்தை நீ எடுத்துக்கொள். நல்ல தோட்டம் ஒன்றை இங்கே உருவாக்கு!'' என்று சொன்னார் சுவாமிகள். அந்த ஏழைக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. ''கவலைப்படாதே. இது இனிமேல் உன்னுடையது. உன்னாலானதைச் செய்!'' என்று சொல்லி விட்டுச் சுவாமிகள் யாத்திரைப் போய்விட்டார்.

ஓர் ஆண்டு காலம் கழிந்தது. சுவாமிகள் பாத யாத்திரையை முடித்துக் கொண்டு, மீண்டும் அந்த ஊருக்கே வந்தார். வரும்வழியில்அந்த நிலம் இருக்கும் பகுதிக்கு வந்தும் நின்றார். அந்த நிலத்தைக் காணவில்லை! ஆமாம்; அவர் ஓர் ஆண்டுக்கு முன்பு அங்கே பார்த்த அந்த நிலத்தைக் காணவில்லை. அந்த இடத்தில் பச்சைப் பசேலென்று ஒரு பெரிய தோட்டம் உருவாகி இருந்தது. கறிகாய்களும், பழங்களும், பூவுமாகத் தோட்டம் அழகு குலுங்கி நின்றது. சுவாமிகள் பிரமிப்புடன் நின்றார்.

சுவாமிகள் வந்திருப்பதை அறிந்து அந்த விவசாயி ஓடிவந்தான். அவர் காலில் விழுந்து வணங்கினான். அந்த நிலத்தை அவனுக்குக்கொடுத்ததற்காக நன்றி தெரிவித்துக் கண்ணீர் உகுத்தான்.

''நான் என்ன செய்தேன்? கடவுளும் நீயும் சேர்ந்து இந்த அதிசயத்தை உருவாக்கினீர்கள்! அவ்வளவுதான்'' என்றார் சுவாமிகள்.

''உண்மைதான்!'' என்று ஒரு பெருமூச்சுவிட்டான் அந்த விவசாயி. ''ஆனால், இங்கே ஓர் ஆண்டுக்கு முன்பு

கடவுள் மட்டும்தான் இருந்தார் சுவாமி!'' என்றான். சுவாமி களை மடக்கிவிட்டதாக அவனுக்கு ஒரு திருப்தி.

''உண்மைதான் அப்பனே! அப்போது நீயும் இருந்தாய். ஆனால், இந்தத் தோட்டம் இல்லை. அது எங்கே இருந் தது...? இப்போது எப்படி வந்தது?'' என்று கேட்டார் சுவாமிகள்.

அவனுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை.

''இந்தப் பசுமையான தோட்டத்தின் கருவான மண் வளம், இயற்கையின் சக்தி, இந்த மண்ணுக்குள்ளேயே அடங்கி இருந்தது. அதை வெளியே கொண்டு வந்து தோட்டத்தை உருவாக்கும் முயற்சியில் நீ இறங்கினாய். அதற்கு உரிய மனோபலத்தையும், உடல் நலத்தையும் ஆண்டவன் உனக்குக் கொடுத்தார். இந்த இரண்டு சக்தி களும் சேர்ந்துதான் இந்தத் தோட்டம் உருவாயிற்று. இவ் வாறு சேராததினால்தான் இத்தனை நாளும் உருவாகவில்லை!' என்றார் சுவாமிகள்.

அந்த விவசாயி மீண்டும் அவர் காலில் விழுந்து வணங் கினான். ''ஆண்டவன் அருள் எனக்கு என்றும் கிடைக்க அருள் செய்யுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டான்.

கடவுள் நமக்குள்ளேயே இருக்கிறார். மனம், வாக்கு, செயல், ஆகியவற்றினால் நம்மையே நாம் சுத்தம் செய்து கொண்டால் இறைவன் அருள் நமக்குக் கிடைக்கும். நமக் குள்ளே இருக்கும் ஆண்டவன் நமக்கு உதவுவார். ஆன்மப் பயிர் செழித்து வளரும்.

● ●

# 9

அந்த நாட்டின் இளவரசனுக்குப் பட்டாபிஷேகம் நடந்தது. முடி சூட்டு விழாவுக்குப் பல நாட்டு மன்னர்களும் வந்திருந்தார்கள், விருந்தும், இசை-நடனக் கச்சேரிகளும் அமர்க்களமாக நடைபெற்றன. நாட்டு மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்திருந்தார்கள்.

புதிய அரசருக்கு லட்சக்கணக்கான மக்கள் கூடி ஒரு வரவேற்பு அளிக்க முடிவு செய்தார்கள். தெருவெல்லாம் தோரணமாகவும், வழியெல்லாம் மலர் தூவிய பாதைகளாகவும் அமைத்துஏற்பாடுசெய்தார்கள். அரசர்முழு அலங்காரத்துடன்யானைமீது அம்பாரியில் ஏறிப்பவனி வருவார்என்று அறிவிக்கப் பட்டது. மக்கள் வழிநெடுகக் காத்துக்கொண்டு நின்றார்கள்.

அந்த அரசர் இளவரசராக இருந்த போது ஓர் அருமையான அல்சேஷியன் நாயை வளர்த்திருந்தார். வெளியே எங்கே போனாலும் காரில் அதை அழைத்துச் செல்வார். இந்த வரவேற்புக்கு நாயை எப்படி அழைத்துச் செல்வது? மேலும் யானை மீது அமர்ந்து போகும்போது மடியில் நாயை வைத்துக் கொண்டு போக முடியுமா?

நாயை வேறு இடத்துக்கு அழைத்துக் கொண்டு போகச் செய்துவிட்டு, சர்வாலங்காரப் பூஷிதராகப் புறப்பட்டார். அரண்மனையில் முன் ஹாலில் பெரிய கண்ணாடி இருந்தது. அது மட்டும் அல்ல; நான்கு புறமும் சுவர்கள் முழுவதும் கண்ணாடிகள் பதிக்கப்பட்டிருந்தன. அங்கே நடுவில் வந்து நின்றால் நூற்றுக்கணக்கானப் பிம்பங்களைப் பார்க்கலாம். அரசர் அங்கே வந்து நின்றார். மிகுந்த பெருமையுடனும் மனப் பூரிப்புடனும் சுற்றிப் பார்த்தார். நூற்றுக்கணக்கான

அழகும் ஒளியும் மிகுந்த அலங்கார உருவங்கள் அவரைத் திரும்பிப் பார்த்தன. தலையை அசைத்து வாழ்த்துக் கூறினார். அவை அனைத்துமே அதே போல தலையை அசைத்து வாழ்த்துக் கூறின. அரசருக்குப் பெருமை பிடிபடவில்லை. வெளியே போய் யானை மீது அம்பாரியில் ஏறி அமர்ந்து பவனியைத் தொடங்கினார்.

வெளியே போயிருந்த நாய் திரும்பி வந்தது. காவல்காரன் அதற்கு மாமிச உணவு வைத்தான். பசியோடு இருந்த நாய் சாப்பிட்டுத் தீர்த்தது. காவல்காரன் தூங்கிவிட்டான். நாய் மெதுவாக எஜமானரைத் தேடி ஒவ்வொரு அறையாகப் பார்த்துக் கொண்டு வந்தது. எங்கேயும் எஜமானரைக் காணோம். 'நமக்குப் போட்டியாக யாரேனும் வந்து விட்டார்களா? அந்த நாய்களில் ஒன்றை அழைத்துக் கொண்டு அரசர் வெளியே போய்விட்டாரா?' என்ற சந்தேகமும் பொறாமையும், நாயின் மனத்திற் சூழ்ந்தன.

முன் ஹாலுக்கு, கண்ணாடி மண்டபத்துக்கு வந்தது. அங்கே நூற்றுக்கணக்கான நாய்கள் இருந்தன! அவையெல்லாம் அதன் பிம்பங்களே. ஆனால் அதை நாயால் புரிந்து கொள்ள முடியவில்லை. அந்த நாய்கள் அனைத்தையும் தன் எதிரிகளாகக் கருதிற்று, அவற்றைப் பார்த்து உறுமிற்று குலைத்தது. அந்த நாய்களும் உறுமின; குலைத்தன. கோபத்துடன் நாய் அவை ஒவ்வொன்றின் மீதும் பாய்ந்தது. அவைகளும் பாய்ந்தன.—

நான்கு மணி நேரம் மிகச் சிறந்த வரவேற்பில் பொழுது போக்கிவிட்டு, அரசர் திரும்பி வந்தார். அலங்கார மாலைகளுடன் உள்ளே வந்தார். தன்னுடைய உருவத்தைப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை அவருக்கு உண்டாயிற்று. கண்ணாடிகள் நிறைந்த ஹாலுக்கு வந்தார். தன்னைச் சுற்றித் தெரிந்த பிம்பங்களில், தனது கம்பீரமான அழகு நிறைந்த உருவத்தைப்பார்த்துக்கொண்டார். மிகுந்த

மகிழ்ச்சியுடனும் பெருமையுடனும் தலையைச் சுற்றித் தாழ்த்தி, வாழ்த்துத் தெரிவித்தார். அப்போது அது அவர் கண்களில் பட்டது.

அந்தப் பெரியஹால் முழுவதும், எல்லாக் கண்ணாடிகளிலும், மூன்று அடி உயரத்துக்கு விரிசல்கள் தெரிந்தன. அந்த விரிசல்களில் இரத்தத்துளிகள் காணப்பட்டன. அரசர் கலங்கிப் போனார். அரண் மனைக்குள் ஏதோ நடந்திருக்கிறது. இரத்தத் துளிகள் காணப்படுகின்றன. கொலை முயற்சியாகக் கூட இருக்கலாம். கொலைகாரன் அங்கேயே பதுங்கி இருக்கலாம்.

திகிலுடன் சுற்றிப் பார்த்தார். ஒவ்வொரு இடமாகத் தேடினார். அங்கே ஓரிடத்தில் அவருடைய அருமை 'அல்சேஷியன்' நாய் இரத்த வெள்ளத்தில் மிதந்து கிடப்பதைக் கண்டார். அவருடைய மகிழ்ச்சியெல்லாம் துயரமாக மாறிற்று. அதற்குக் காரணம் அவருக்கு உடனே புரியவில்லை...

நாமெல்லாம் அந்த நாயைப்போல அவஸ்தைக்கு ஆளாக வேண்டாம். நம் அனைவரின் உள்ளத்திலும் இறைவன் இருக்கிறார். அதைத் தெரிந்து கொள்ளாமலே உலகத்துக்குள் நுழைகிறோம். ஞான மார்க்கத்தின் மூலமாக இந்த உண்மையைக் கண்டு கொண்டால், நம்மைச் சுற்றிலும் உள்ள இயற்கையின் அழகில் இறைவனைக் கண்டு மனம் பூரிக்கலாம். இல்லாவிட்டால் கோபமும், பொறாமையும், போட்டி உணர்வும் மிகுந்து, அசிங்கமான பிரதிபலிப்புகளையே நாம் பார்க்க நேரிடும். அந்த உணர்ச்சிகளே நம்மை ஆட்டுவிக்கும். நாமே நமது துயரங்களுக்குக் காரணம் ஆகிவிடுவோம்.

● ●

# 10

அவர் ஒரு புகழ் பெற்ற சினிமா நடிகர். பணம் சம்பாதிப்பதில் கணக்கு வழக்கு இல்லை. செலவும் அப்படித் தான். வீட்டில் ஒரு அழகான மனைவி உண்டு. வெளி யிலும் அழகு நிறைந்த ஆசை நாயகிகள் பலர் உண்டு. அவர்களிடம் பிரியமாக இருப்பார். அவர்களுக்கு நிறையப் பரிசுகள் வாங்கிக் கொடுப்பார்.

வீட்டுக்கு வந்தால் மனைவி கோபித்துக் கொள்வாளே? அதற்காக மனைவிக்கும் நிறையப் பரிசுகள் வாங்கித் தருவார். அவருடைய செல்வத்தைக் கரைப்பதில் மனைவிக் கும் ஆசை நாயகிகளுக்கும் சரியான போட்டி!

ஒரு முறை அவருடைய மனைவி நகைக்கடையில் விலை யுயர்ந்த நெக்லேஸ் ஒன்றைப் பார்த்தாள். விலை சுமார் இரண்டு லட்சம் ரூபாய். அவ்வளவு பணம் கொடுத்து யாரும் ஒரு நகையை வாங்கியதில்லை. வாங்கினாலும் போட்டுக் கொண்டு தைரியமாக வெளியே வரமாட்டார் கள். அப்படி யாரும் செய்யாத ஒரு காரியத்தைத் தான் செய்ய வேண்டும் என்ற ஆவல் அவளுக்கு வந்துவிட்டது.

அன்று இரவு கணவனிடம் சொன்னாள். அன்றுதான் அவருக்கு நிறையப் பணம், ரொக்கமாகவே வந்திருந்தது. சுலபமாக அதைக்கொடுத்து நெக்லேஸை வாங்கி விட்டார் வாங்கிவிட்டால் போதுமா? அதைப் போட்டுக் கொண்டு வெளியே போக வேண்டும். அதுவும் புகழ் மிகுந்த கணவருடன், பலரும் பார்த்து அதிசயிக்கும்படி போய்வர வேண்டும். இப்படி ஓர் ஆசை.

கணவரிடம் சொன்னாள். அவருக்கு மனம் ஒப்பவில்லை. மனைவியிடம், ''உனக்கு ஏன வம்பு? நான் வெளியே

போனால் என்னைச் சுற்றி எப்போதும் ஒரு கூட்டம்இருக்கும். அதுவும் அடக்க முடியாத கூட்டமாக இருக்கும். உன்னுடைய விலையுயர்ந்த நகை பறி போய்விடும். அப்புறம் யாரும் கண்டு பிடிக்க முடியாது!'' என்று சொல்லிப் பார்த்தார். அவள் மசியவில்லை.

அன்று ஒரு திரைப்பட விழா. அவர் நடித்த படம் நூறாவது நாள் ஓடுகிறது. அவருக்குக் கேடயம் பரிசு கொடுககிறார்கள். மனைவிக்குத் தானும் கூடப் போக வேண்டும் என்ற ஆசை. அதுவும் அந்த நகையை அணிந்து கொண்டு போக வேண்டுமென்ற ஆவல். கணவர் தடுத்தும் கேட்கவில்லை.

''என்னுடன் வர உங்களுக்குப் பிரியம் இல்லை. அவ்வளவுதானே? உங்கள் நோக்கம் எனக்குத் தெரியும்!'' என்று அழ ஆரம்பித்தாள். வேறு வழி இன்றி அவர் ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று.

அங்கே ஏகப்பட்ட கூட்டம். எங்கு பார்த்தாலும் விளக்கு மயம். ஒளி வெள்ளத்தில் வைர நெக்லேஸ் கண்ணைப் பறித்தது. எல்லாரும் பார்த்து வியந்தார்கள். ஒரு பக்காத் திருடன் கண்களிலும் அது பட்டது. அவன் நன்றாக உடை அணிந்திருந்தான். யாரும் அவன் மீது சந்தேகப்படவில்லை.

அவன் அவர்களுக்கு மிக அருகில் ஒரு 'ஸீட்'டில் உட்கார்ந்து கொண்டான். அவனுடைய தோழர்கள் தயாராக இருந்தார்கள். விழா மும்முரமாக நடந்து கொண்டிருக்கும்போது 'மெயின் ஸ்விட்சை' அணைத்து விட்டார்கள். இருட்டில் நகை பறிபோய் விட்டது!

நொடிப்பொழுதில் நகை ஒருவர் கைவிட்டு ஒருவர் கை மாறி வெளியே போய்விட்டது. வெளிச்சம் வந்தது. போலீசார் வந்தார்கள். எல்லாரையும சோதனை போட்டார்கள். அந்தப் பக்காத் திருடனும் மற்றவர்களுடன்

சேர்ந்து தேடினுன். எங்கும் நகை கிடைக்கவில்லை. என்ன செய்வது?

வீட்டுக்குத் திரும்பினுர்கள். விழாவுக்குப் போய்விட்டு வந்த மகிழ்ச்சி எல்லாம் போய்விட்டது. கணவனின் கோபமும் மனைவியின் அழுகையும்தான் மிஞ்சிற்று.

''என்னுடைய ஆசையின் வேகத்தில் நீங்கள் சொன்னதைக் கேட்கத் தவறிவிட்டேன். தவறு என்மேல்தான்.'' என்று மனைவி புலம்பிப் புலம்பி அழுதாள். ஆனுல் என்ன செய்ய முடியும்?

அறிவின் ஒளி இருக்கும்வரை, ஞானச்சுடர் வீசும் வரை, தவறுகள் நேருவதில்லை. ஆனுல் இச்சைகள் நம்மைக் கவிழ்க்க வரும்போது இந்த ஒளியை அணைத்து விட்டுத்தான் வருகின்றன. மாயை ஞானஒளியை மூடி இருட்டாக்கி விடுகிறது. அந்த இருட்டில் குழப்பம் ஏற்படுகிறது. அந்த இருட்டில் இச்சைகளுக்குப் பலியாகி விடுகிறேம்.

நாம் செய்வது என்ன என்பதையே அறியாமல் பாவங்களைச் செய்து விடுகிறேம். உடலும் உள்ளமும் அசுத்தமாகி விடுகின்றன. கொள்கைகள் நழுவிப் போய் விடுகின்றன. அப்புறம் அதை நினைத்து வருந்துகிறேம். மோசம் போய்விட்டோமே என்று சொல்லிப் புலம்புகிறேம், ஆனுல் என்ன செய்ய முடியும்?

# 11

ஒரு சுவாமியாரைக் காண மூன்று வெளியூர் தம்பதி கள் வந்திருந்தனர். சுவாமியாருடைய மடம் எளிமை யானது. ஆனால் அதில் எல்லா வசதிகளும் இருந்தன. மடத்தில் தங்கி அவருடைய போதனைகளைக் கேட்கவேண்டு மென்று அவர்களுக்கு ஆசை. அப்படியே அவருடன் உண வருந்த வேண்டும் என்றும் விருப்பம்.

காலையில் நீராடிவிட்டுப் பூஜையில் அமர்ந்தார் சுவாமி. அந்த விருந்தினர்களும் நீராடிவிட்டுப் பூஜையைக் காண வந்து உட்கார்ந்து கொண்டார்கள். பூஜை தொடங்கிற்று. சம்பிரதாயப்படி வெகு நேரம் நடந்தது. அவர்களும் பொறுமையாக உட்கார்ந்திருந்தார்கள்.

அவர்களுக்கு நல்ல பசி. ஆனால் அதை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. பூஜை முடிந்ததும் சுவாமி, அவர்களுடன் அமர்ந்து பேசினார். அந்த உரை அவர்களு டைய செவிக்கு அமிர்தமாக இருந்தது. ஆனால் வயிற்றுப் பசி அவர்களைக் கவனிக்கவிடவில்லை. சுவாமி அதைக் கவனித்ததாகவே தெரியவில்லை.

''சரி, சாப்பாடு தயாராகி இருக்கும். நம்மைக் கூப் பிட்டுக்கொண்டு போகப் போகிறார்.' என்று மூன்று தம்பதி யரும் காத்திருந்தார்கள். அவர் அதைப்பற்றிப் பேசவே இல்லை. கடைசியில் அந்த தம்பதியரில் ஒருபெண்மணி ''சாப் பாட்டைக் கவனிக்கலாமா?'' என்று கேட்டார்.

''ஓ! போகலாமே?'' என்று அவர்களை அழைத்துப் போனார் சுவாமி. மூன்று தம்பதியரும் அங்கே ஆவ

லுடன் தொடர்ந்து போனார்கள். அங்கே ஒரு மேஜை இருந்தது. மேஜைமீது ஒரு கிண்ணம் வைத்திருந்தது. "ஓ இது தான் சாப்பாட்டு மேஜை. உணவு வகைகள் இங்கே வரப்போகின்றன!' என்று அவர்கள் ஆவலோடு அங்கே அமர்ந்தார்கள்.

சுவாமி அந்தப் பெண்மணியிடம் அந்தக் கிண்ணத்தைக் கொடுத்தார். அவள் அந்தக் கிண்ணத்தின் மூடியை அகற்றி விட்டுத் திறந்து பார்த்தாள். உள்ளே பளபளவென்று ஒரு சாவி இருந்தது. 'சரிதான், இது சமையலறைச் சாவி. அங்கே உணவு வகைகள் தயாராக இருக்கும். சுவாமி நமக்கு வியப்பை அளிக்கப் போகிறார்.' என்று எண்ணினாள் அந்தப் பெண்.

''சாவி இருக்கிறதல்லவா? வாருங்கள், பூட்டிய அறையைக் காட்டுகிறேன்.'' என்றார் சுவாமி. எல்லாருமே எழுந்து ஆவலுடன் தொடர்ந்து போனார்கள்.

பூட்டைத் திறந்து உள்ளே பார்த்தார்கள். உள்ளே என்ன இருந்தது? விதம் விதமான கறிகாய்கள் கொட்டிக் கிடந்தன. ஏராளமாகப் பழங்கள் குவிந்து கிடந்தன. தேனும் பாலும் நெய்யும் நிறைய இருந்தன. சமையலுக் குரிய பொருட்கள் எல்லாம் இருந்தன.

''சுவாமி, என்ன இது?'' என்று கேட்டாள் அந்தப் பெண். ''இங்கே எல்லாமே இருக்கின்றன. அடுப்புதான் மூட்டப்படவில்லை. அடுப்பை மூட்டி நீங்கள் தாம் அவரவர் ஆசைக்கும் ருசிக்கும் ஏற்பச் சமைக்க வேண்டும். சந்நியாசி யாகிய எனக்கு அவையெல்லாம் எப்படித் தெரியும்?'' என்றார் சுவாமி.

''சமைத்த உணவை எதிர்பார்த்தோம்!'' என்று கொஞ்சம் ஏமாற்றத்தோடு எல்லாரும் சொன்னார்கள்.

''நீங்கள் இப்படிச் சொல்லுவீர்கள் என்று நானும் எதிர்பார்த்தேன். இது வரை நான் உங்களுக்கு என்னவெல்

ளாமோ தத்துவங்களை எடுத்துச் சொன்னேன். அவற்றை விட இதுதான் அனுபவ பூர்வமான, சிலாக்கியமான தத்துவம். ஆண்டவன் நமக்கு நல்ல மனத்தைக் கொடுக்கிறான். நல்ல வாய்ப்புகளைத் தருகிறான். அவற்றைப் பயன் படுத்திக் கொள்ளக் கூடிய மூளையையும் சிந்தனையையும் கூடத் தருகிறான். ஆனால் அடுப்பை நீங்கள்தான் மூட்ட வேண்டும். உங்களுக்கு உகந்தனவற்றை நீங்கள் தான் சமைத்து ருசிக்க வேண்டும். அதைப்போல, வாழ்க்கையில் நல்ல பலன்களைப் பெற நாம்தான் முயற்சி செய்ய வேண்டும். ஆண்டவன் அதற்குரிய சூழ்நிலையைத்தான் கொடுப்பான். அதை விளக்கத்தான் இப்படிச் செய்தேன்'' என்றார் சுவாமி.

மூன்று தம்பதிகளும் தெளிவடைந்து நின்றார்கள்.



# 12

குரு எதைச் செய்தாலும் அதை அப்படியே சீடர்களும் செய்யக்கூடாது. குரு செய்யும் எல்லாவற்றையும் சீடர்கள் செய்யவும் முடியாது.

''உனக்கு ஏன் இவ்வளவு கோபம் வருகிறது?'' என்று சீடரிடம் கேட்டுப் பாருங்கள்; எங்கள் குருநாதரும ரொம்பக்கோபக்காரர் தான்.'' என்றுபதில்சொல்லுவார். ''அவர் பெரிய வேதக் கடலாக இருக்கிறார். சரமாரியாகப் பொழிகிறார். உங்களாலும் அப்படிச் செய்ய முடியுமா?'' என்று கேளுங்கள். ''அப்பாடியோ! அவ்வளவு திறமையும் சாதகமும் எனக்கு ஏது?'' என்று ஒதுக்கி விடுவார்கள். பின்னே, கோபத்தை மட்டும் கற்றுக் கொள்வானேன்?

தத்தாத்திரேயருக்கு மூன்று சிஷ்யர்கள் இருந்தார்கள் அவர் சொற்படி எல்லாவற்றையும் செய்வார்கள். அவருடைய சிறு பழக்க வழக்கங்களையும் அப்படியே பின்பற்றுவார்கள். அவர்களுடைய கவனமெல்லாம் இதைப்போலக் கிரியைகளில்தான் இருந்தது. அவற்றின் உள்ளர்த்தமான தத்துவங்களில் மனம் ஈடுபடவில்லை.

ஒரு நாள் தத்தாத்திரேயர் கால் நடையாகவே வெளியூருக்குப் புறப்பட்டுச் சென்றார். சிஷ்யர்களையும் அழைத்துக் கொண்டு போனார். வழியில் ஒரு கள்ளுக்கடை இருந்தது. நிறைய பேர்கள் குடித்துக் கொண்டிருந்தார்கள். தத்தாத்திரேயர் ஒரு பானைக் கள்ளை வாங்கி அப்படியே குடித்து விட்டார். ஆனால் அவருடைய நிலை சிறிதும் தடுமாறவில்லை.

சிஷ்யர்களும் கள்ளை வாங்கிக் குடித்தார்கள். 'குருநாதரே குடித்திருக்கிறார். நாம் குடித்தால் தவறில்லை.' என்று கொஞ்சம் அளவு மீறியே குடித்து விட்டார்கள். கால்கள் தடுமாறின. தொடர்ந்து பேச முடியவில்லை. நிலை தவறியவர்களாகத் தத்தாத்திரேயரைத் தொடர்ந்து வந்தார்கள். அதைக் கவனித்துத் தனக்குள் சிரித்துக் கொண்டார் குருநாதர்.

கொஞ்ச தூரம் போனதும் பெரிய உலைப் பட்டறை ஒன்று தென்பட்டது. அங்கே ஒரு கிண்ணத்தில் உருக்கிய உலோகக் குழம்பு இருந்தது. தத்தாத்திரேயர் அதை வாங்கினார். கிண்ணத்துடன் அப்படியே குடித்துவிட்டார். சிஷ்யர்களைத் திரும்பிப் பார்த்தார். அவர்கள் சாலையை அகலவாக்கில் அளந்தபடி நடந்துகொண்டிருந்தார்கள்.

"நீங்களும் குடிக்கலாமே?" என்று கேட்டார் தத்தாத்திரேயர். "என்னது? உருக்கிய உலோகத்தை குடிக்கிறதா? என்ன சொல்லுகிறீர்கள்? நாங்கள் குடி போதையில் கிடக்கலாம். ஆனால் அந்த அளவுக்கு அறிவு மழுங்கிப் போகவில்லை!" என்று தடுமாறிய வண்ணம் பதில் சொன்னார்கள் சிஷ்யர்கள்.

தத்தாத்திரேயர் சிரித்துக்கொண்டே மேலே நடந்தார். அன்று இரவு சித்தம் தெளிந்ததும் குருநாதரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள். "சுவாமி! எங்களுக்கு எதற்காக இந்தச் சோதனை!" என்று கேட்டார்கள்.

தத்தாத்திரேயர் சொன்னார்:

"நான் கள்ளைக் குடித்தேன். அது என்னை ஒன்றும் செய்யவில்லை. நான் நிலை தடுமாறிப் போகவில்லை. நான் உருக்கிய உலோகத்தையும் குடித்தேன். அதுவும் என்னை ஒன்றும் செய்யவில்லை. என்னுடைய காரியங்களில் மட்டும் நான் ஊன்றிப் போகவில்லை. என்னுடைய சிந்தை தத்துவங்களில் ஆழ்ந்து போயிருக்கிறது. அதுதான் காரணம். நான் எது செய்தாலும் அதை அப்படியே, அர்த்தம் புரிந்து கொள்ளாமல் செய்ய எண்ணுகிறீர்கள். உங்களுக்கு அதனால் ஒரு பலனும் இல்லை. உங்களால் முடியவும் முடியாது. கிரியைகள் முக்கியம் அல்ல. அதன் பொருள்தான் முக்கியம். அதுதான் உங்களுக்குப் பலன் தரும்."



# 13

என்னைப்போல ஒரு துறவி அவர். ஒவ்வொரு ஊராகக் கால் நடையாகப் போய்க் கொண்டிருந்தார். கடைசியில் ஒரு நல்ல இடத்துக்கு வந்து சேர்ந்தார். அருமையான ஆற்றங்கரை. தெளிவாக நிறைய தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. நெடுகிலும் பசுமையான வயல்கள் இருந்தன. பசுமாடுகளும் கால்நடைகளும் நிறையக் காணப்பட்டன.

'அப்படிபட்ட அவ் ஆற்றங்கரையருகில் பத்து கிராமங்கள் இருந்தன. ஆனால் அதிகமான அளவு மக்கள் இல்லை. அவர்களுக்குள் ஒற்றுமையும் இல்லை. வேலை செய்ய வேண்டும், ஊரை வளப்படுத்த வேண்டும், தானும் முன்னுக்கு வரவேண்டும் என்றெல்லாம் ஒரு லட்சியமும் இல்லை.

சாமியார் யோசித்தார். ஒவ்வொரு ஊரிலும் உள்ள முக்கியமான ஒருவரைக் கூப்பிட்டார். என்ன செய்யப் போகிறார் என்று சொல்லவில்லை. ''ஒரு முக்கியமான காரியத்துக்கு நீங்கள் உதவ வேண்டும்.'' என்று மட்டும் கேட்டார்.

''அது என்ன அப்படி முக்கியமான காரியம்?'' என்று அவர்கள் பதிலுக்குக் கேட்டார்கள்.

''ஒரு யாகம் நடத்த வேண்டும். அதற்கு நீங்கள் எல்லாரும் உதவி செய்ய வேண்டும்.'' என்றார் சாமியார்.

''யாகமா? நாங்கள் உதவி செய்வதா? என்ன விளையாடுகிறீர்கள்? எங்களுக்கு அதிகமான படிப்பறிவு கூட இல்லையே சுவாமி?'' என்று அவர்கள் தயங்கினார்கள்.

''ஒன்றும் தயங்க வேண்டாம். அதையெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன். யாகம் செய்யக்கூடிய ஞானிகளும் அறிவாளிகளும் இங்கே வந்து சேருவார்கள். நாற்பத்து ஒரு நாள் யாகம் நடக்கும். அவர்கள் கேட்பதையெல்லாம் நீங்கள் கொண்டு வந்து தரவேண்டும். அவ்வளவுதான்!'' என்றார் சாமியார். அவர்களும் ஒப்புக் கொண்டார்கள்.

ஒரு கிராமத்திலிருந்து தச்சரும் ஆட்களும் வந்தார்கள். பெரிய கூரை போட்டுப் பந்தல் அமைத்தார்கள். இன்னொரு கிராமத்திலிருந்து கட்டிட வேலைக்காரர்கள் வந்தார்கள். மண்டபமும் யாக குண்டமும் கட்டினார்கள்.

விவசாயிகள் நவதானியங்களாகக் கொண்டு வந்து கொட்டினார்கள். சாப்பாடு போட அரிசியும் பருப்பும் கொண்டு வந்து தந்தார்கள்.

பசுமாடு வைத்திருப்பவர்கள் தண்ணீர் கலக்காமல் பாலே விற்றதில்லை. இப்போது அவர்களே மாடுகளைக் கொண்டு வந்து கட்டிப் பாலும் கறந்து கொடுத்தார்கள். வாணியர் கலப்பில்லாத எண்ணெய் கொண்டு வந்து தந்தனர். நெசவுத் தறி போட்டிருப்பவர்கள் துணிகளை நெய்து கொண்டு வந்தார்கள்.

யாகம் நடந்தது. அதன் பலனாக அமோகமாக மழை பெய்தது. ஆறும் நீர் நிலைகளும் நிரம்பின. வயல்களில் செழுமை தோன்றியது.

"யாகம் செய்தபலன் இந்த ஆண்டு அமோக விளைச்சல் இருக்கப் போகிறது" என்று பெரியவர்களெல்லாம் சொன்னார்கள்.

"அதற்குக் காரணம் யாகம் இல்லை. நீங்களே தான்." என்றார் சாமியார். அவர்களுக்குப் புரியவில்லை. "நாங்களா? எப்படி" என்று கேட்டார்கள்.

"ஆமாம் யாகம் என்பது என்ன? நீங்கள் எல்லாரும் தங்களுடைய நன்மைகளை மறந்து பொது நலத்துக்காக ஒரு காரியத்தில், மனம் ஒருமித்து ஈடுபடுவதுதான். விவசாயி, வாணியர், தொழிலாளி, தச்சர், கட்டிடவேலைக்காரர் என்று அத்தனை பேரும் இங்கே ஈடுபட்டீர்கள். இத்தனை நாளும் என்ன செய்து கொண்டிருந்தீர்களோ அதையே தான் இங்கும் செய்தீர்கள். இவ்வளவு நாட்களாகத் தனித்தனியாக அவரவர் லாபத்துக்காகச் செய்து கொண்டிருந்ததை, இப்போது ஒரே இடத்தில் பொது நலத்துக்காகச் செய்தீர்கள். அப்படி உங்கள் உணர்ச்சிகள் ஒன்றி நடந்ததே யாகம். அது வெளியில் நடக்கவில்லை. உங்கள் உள்ளத்தில் நடந்தது!" என்றார் சாமியார்.

கிராம மக்கள் உண்மையை உணர்ந்தார்கள். பெரு மகிழ்ச்சி அடைந்தார்கள். அதன்பின் அவர்கள் சுபிட்சத் துடன் வாழ வழியும் பிறந்தது.

உலகமே ஒரு யக்ஞத்தில்தான் இயங்குகிறது. சூரியன் ஒளியையும் சூட்டையும் தருகிறுன். கடல் மழையைத் தரு கிறது. ஆறுகள் அந்தத்தண்ணீரைப் பரப்புகின்றன. நிலம் வளமையைத் தருகிறது. இயற்கை பல உருவங்களாக இருந்து, பலவிதமாகவும் மனிதனின் வாழ்க்கையை அமைத் துக் கொடுக்கிறது. அவை யாவும் மனிதனுக்காக ஒருமித்து செய்யும் யாகமே உலக வாழ்க்கை. அதை உணர்ந்து அந் தச் சக்திகளிடம் நன்றியறிவுடன் நாம் இருந்தால் போதும். நம்முடைய வாழ்க்கையில் மகிழ்ச்சி நிறைந்து பொங்கும்.

● ●

# 14

ஒரு பெரிய புற்றில் ஒரு பெரிய பாம்பு இருந்தது. தின மும் அது வெளியே போகும். இரையைச் சாப்பிட்டுவிட்டுத் திரும்பும். அது ஒரு புத்திசாலியான பாம்பு. அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பித்துக் கொள்ளும். அது புத்திசாலியாக இருந்ததால் வாலுக்கும் 'புத்தி' ஏற்பட்டு விட்டது. அது தன் 'வால்' தனத்தைக் காண்பிக்க ஆரம்பித்தது. அது நினைத்தது: 'ஏன் தலை காட்டுகிற பாதையில் நாம் போய்க் கொண்டிருக்கிறேம்? நாம் காட்டுகிற பாதையில் ஏன் தலை தொடர்ந்து வரக்கூடாது?'

நினைத்தவுடன் அது பாம்பை வால் பக்கமாக இழுத்துச் செல்ல ஆரம்பித்தது. தலைக்கு இது தெரியாது. வழக்கம்

போல அது தலைப் பக்கமாக இழுத்துக்கொண்டு போயிற்று. வயிறு நடுவில் அகப்பட்டுக் கொண்டது. அதற்குச் சொல்ல முடியாத வேதனை உண்டாயிற்று. வயிற்றின் வேதனை மூளைக் குத் தெரியும் அல்லவா? அதனால் தலையால் உணர முடிந்தது. வாலினால் உணர முடியவில்லை.

''ஏன் அழுகிறாய்?'' என்று கேட்டது தலை.

''நீ ஒரு பக்கம் இழுக்கிறாய். வால் இன்னொரு பக்கம் இழுக்கிறது. நான் நடுவில் அகப்பட்டுக் கொண்டு திண் டாடுகிறேன். என்ன செய்வது? அதனால்தான் அழுகிறேன்.'' என்றது வயிறு.

தலை வாலைப் பார்த்து கேட்டது. ''ஏன் இப்படிச் செய் கிறாய்? வயிறு படுகிற அவஸ்தையைப் பார்த்தாயா?''

''நீ ஒப்புக் கொண்டால் வயிறு அவஸ்தைப்பட வேண் டாம்.'' என்றது வால்.

''நான் என்ன செய்ய வேண்டும்?''

''நான் வழிகாட்டுகிறேன். நீ தொடர்ந்து பின்னால் வா!'' என்றது வால்.

''உன்னால் சிந்திக்க முடியாதே, என்னால்தானே சிந் திக்க முடியும்?'' என்றது தலை.

''பரவாயில்லை!'' என்றது வால்.

''உன்னால் பார்க்க முடியாதே? என்னால்தானே பார்க்க முடியும்; கண்கள் என்னிடம்தானே இருக்கின்றன?'' என்று மறுபடியும் கேட்டது தலை.

''அதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை. உனக்கு இஷ்டமிருந்தால் வா. இல்லாவிட்டால் நான் என் வழியே போகிறேன்!'' என்றது வால்.

தலை, பாம்பின் வயிறு படும் சங்கடத்தைப் பார்த்தது. அதற்குப் பாவமாக இருந்தது. சரியான விஷயங்களைப் பார்க்கவும் வழிகாட்டவும் தன்னால் தான் முடியும் என்று அதற்குத் தெரியும். ஆனால் என்ன செய்வது? வால் ஒப்புக் கொள்ளவில்லையே? வால் போகிற வழியில் விட்டுவிட்டது!

'எங்கேயாவது போய் வால் அடிபடும்; நசுங்கிப் போகும்; அப்புறம் புத்தி வரும். பிறகு நான் சொன்ன வழியே சரி என்று அதற்குப் புரியும். அதுவரையில் இஷ்டப் படி திரியட்டும்!' என்று வாலைத் தொடர்ந்தது.

வால் மனம் போனபடியெல்லாம் போயிற்று. அதனால் வழி பார்த்துச் செல்ல முடியவில்லை: தலை பின்புறம் இருந் தது. அதனால் வரப்போவதை அது பார்க்க இயலவில்லை. ஆனால் வழி நெடுகத் தான் தவறவிட்ட நல்ல விஷயங்களைப் பார்க்க முடிந்தது. 'அடடா! இதை அனுபவிக்கவில்லையே? இதற்குக் கொடுத்து வைக்கவில்லையே?' என்று வருத்தப் பட்டுக் கொண்டே வந்தது.

வாழ்க்கையில் நாமும் அப்படித்தான் மனத்தைஇஷ்டப் படி அலையவிடுகிறோம்; பிறகு சிரமப்படுகிறோம். அப்புறம் நாம் நழுவவிட்ட சந்தர்ப்பங்களை உணருகிறோம். ஆனால் அவற்றை நம்மால் திரும்பப் பெற முடிவதில்லை...

 

# 15

என்னுடைய வேதாந்தச் சொற்பொழிவுகளைக் கேட்க எல்லாரும் வருகிறீர்கள். அதில் சிலர் இதை ஒரு பொழுது போக்காக நினைக்கலாம். 'இந்த சின்மயானந்தர் என்ன சொல்லிவிடப் போகிறார்... என்னை எப்படி அவர் வழிபடுத்திவிட முடியும்...?' என்றும் எண்ணலாம். எனக்கு அந்த நம்பிக்கை முழுமையாக இருக்கிறது, உங்களை நான் என் வழிக்குக் கொண்டு வந்து விடுவேன். நீங்கள் என்னோடுதான் இருப்பீர்கள். எனக்கு அந்த உறுதி இருக்கிறது.

பெரிய ஹோட்டல்களில் பார்த்திருப்பீர்கள். அறையில் மேஜை மேல் ஒரு பைபிள் வைத்திருக்கும். இப்போதெல்லாம் என்னுடைய பகவத்கீதை புத்தகத்தையும் வைக்கிறார்கள். அறைக்கு வருபவர்கள் பொழுது போகாவிட்டால் அது என்ன என்று எடுத்துப் பார்த்துவிட்டு, மறுபடியும் இருந்த இடத்திலேயே வைத்துவிடுவார்கள். அவ்வளவு பெரிய புத்தகத்தை படிக்க முடியாது. படித்தாலும் கருத்துக்களை ஜீரணம் செய்து கொள்ள முடியாது.

அதனால், நான் உபநிஷதசாரத்தை ஒரு சிறுபுத்தகமாக எழுதி இருக்கிறேன். அதற்கு ஒரு நல்ல அட்டையும் கொடுத்திருக்கிறேன். கைக்கு லாவகமாக இருக்கும். தூசி தட்டலாம். தண்ணீர் வைக்கும் தம்ளரை மூடி வைக்கலாம். ரொம்ப சௌகரியமாக இருக்கும்.

நீங்கள் அதை என்னிடம் வாங்கிக் கொண்டு போகிறீர்கள். படுக்கை அறையில் ஒரு பக்கமாக மேஜை மீது வைத்து விடுகிறீர்கள். பொருத்தமான இடம்தான்.

படுக்கை அறைக்கும் உபநிஷதசாரத்துக்கும் என்ன சம்பந்தம்? இருந்தாலும் நான் உங்களை விடமாட்டேன்.

சாப்பிட்டுவிட்டு, நீங்கள் படுக்கையில் உல்லாசமாக அமர்ந்திருக்கிறீர்கள். உங்கள் இளம் மனைவி சமையலறையைத் தேய்த்துக் கழுவிக் கொண்டிருக்கிறாள். உங்கள் பொறுமையைச் சோதிக்கிறாள். 'சரக்-சரக்' என்ற சத்தம் கேட்டு நீங்கள் ''ஏய் கமலா! இங்கே வா...இன்னும் என்ன காரியம் செய்து கொண்டிருக்கிறாய்...?'' என்று சீறுகிறீர்கள். உங்கள் மனைவி அப்படியே வந்து எட்டிப் பார்க்கிறாள். உங்களுக்குச் செல்லமாக அழகு காட்டுகிறாள். அது உங்களைச் சீண்டுகிறது. முன்றானையை இடையில் செருகி இருக்கிறாள். முழங்கால்வரை கால்களின் அழகு தெரிகிறது. அது உங்கள் உணர்ச்சியைத் தூண்டி விடுகிறது. கால்மெட்டி ஒலிக்கிறது. உங்கள் வேகம் விரைவு கொள்கிறது.

''ஏய்-கம்ஆன்-க்விக்!'' என்று அவசரப் படுத்துகிறீர்கள். அவள் சிரித்துக் கொண்டே பாலை ஒரு தம்ளரில் எடுத்துக் கொண்டு வருகிறாள். ''பதினைந்து நிமிஷம் பொறுங்கள்!'' என்று சொல்லிவிட்டுப் பால் தம்ளரை அருகில் வைக்கிறாள். அதை மூட வேண்டுமே? சுற்றிலும் பார்க்கிறாள். என்னுடைய புத்தகம்தான் கிடைக்கிறது. அதை எடுத்து மூடிவிட்டுப் போகிறாள்.

நீங்கள் பாலை எடுத்து அருந்துகிறீர்கள். தம்ளரைக் கீழே வைத்ததும் அந்தப் புத்தகத்தைக் கையில் எடுக்கிறீர்கள். உங்கள் மனைவி இன்னும் வரவில்லை. பொழுது போக வேண்டுமே? அதற்காகப் புத்தகத்தை எடுத்துப் பார்க்கிறீர்கள். முதல் பக்கத்தைப் படிக்கிறீர்கள்.

நான் உங்களோடு சேர்ந்து கொண்டு விட்டேன். உங்களைக் கவர்ந்துவிட்டேன். நீங்கள் என்னோடு ஒன்றி விட்டீர்கள்!

வேலையை முடித்துவிட்டு, உங்கள் மனைவி வந்து விட்டாள், உல்லாசத்துக்கு ஏற்ற உடை அணிந்திருக்கிறாள். முகம் கழுவி உங்களுக்குப் பிரியமான மணம் உள்ள பவுடர் போட்டுக் கொண்டிருக்கிறாள். வாசனை கமழும் மல்லிகைப் பூ வைத்துக் கொண்டிருக்கிறாள்.

உங்கள் அருகே அவள் வந்து உட்காருகிறாள். நீங்கள் கவனிக்கவில்லை. அந்த மணமும் மலர்வாசமும் உங்களை எட்டவில்லை. உங்கள் தோளைப் பற்றித் தொடுகிறாள். அது உங்கள் உள்ளத்தைத் தொடவில்லை. கனிவாக அழைக்கிறாள். அது உங்களுக்குக் கேட்கவில்லை. நான் தான் உங்களுடன் பேசிக் கொண்டிருக்கிறேனே...!

''அப்படி என்ன படிப்பு...?'' என்று சிணுங்கியபடி அவள் புத்தகத்தை வாங்கி வைக்க முயலுகிறாள். நீங்கள் ஒதுங்குகிறீர்கள். ''என்னைத் தொந்தரவு செய்யாதே!'' என்று சொல்லிவிட்டுத் தீவிரமாக ஆழ்ந்து படிக்கிறீர்கள்; அவளை நீங்கள் லட்சியம் செய்யவில்லை.

உங்கள் கமலா உறங்கிவிட்டாள். அவளிடம் நீங்கள் நாடிய, அடைய ஏங்கிய இன்பம் உங்களுக்கு மறந்து விட்டது. நீங்கள் என்னுடன் இருக்கிறீர்கள். அதை விடப் பேரின்பம் ஒன்றை நான் உங்களுக்கு அறிமுகப் படுத்தி விட்டேன்.

உங்கள் அன்பு மனைவி தூங்கிவிட்டாள். நீங்கள் தூங்கவில்லை. நீங்கள் விழித்திருக்கிறீர்கள். கண்கள் மட்டும் விழித்திருக்கவில்லை உங்கள் ஆத்மாவும் விழித்துக் கொண்டு விட்டது.

● ●

# 16

அந்த மனிதனுக்கு வாழ்க்கையில் ஒரு பெரிய பிரச்சினை. அதனால், அவனுக்குக் கவலை வந்துவிட்டது. கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந் தான். அப்போது அவனுடைய நண்பன் அங்கே வந்தான்.

''ஏன் கவலைப்படுகிறாய்? உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டான் அவன். தன்னுடைய பிரச்சினையை அவனிடம் எடுத்துச் சொல்லிவிட்டு, ''என்ன செய்வது...? எனக்கு ஒரு வழியும் தோன்றவில்லை'' என்றான் அந்த மனிதன்.

இதைப் போன்ற சமயங்களில் பகவானிடம் போய் முறையிடுவது ஒன்றுதான் வழி. வா! கோயிலுக்குப் போவோம் என்று அழைத்தான் நண்பன். அந்த மனிதனுக்கு வேறு ஒன்றும் தோன்றவில்லை. ''சரி, கோயி லுக்காவது போய் வைக்கலாமே...?'' என்று கிளம்பிப் போனான்.

போகும் வழியில் ஒரு சாமியார் நடந்து வந்து கொண் டிருந்தார். அவரிடம் அவர்கள் இருவரும் விபூதிப் பிரசாதம் வாங்கி இட்டுக் கொண்டார்கள். ''நீங்கள் எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டார் சாமியார்.

''கோயிலுக்குப் போகிறோம்...'' என்றார்கள் அவர்கள்.

''சரி. நானும்கூட வருகிறேன்'' என்று சாமியார். அவர்களைத் தொடர்ந்தார். சன்னிதியில் போய் மூவரு மாக நின்று கொண்டார்கள். அந்த மனிதன் வெகுநேரம் கண்ணை மூடி பிரார்த்தனையில் ஆழ்ந்தபடி நின்றான். அது

முடிந்து பிரசாதம் வாங்கிக் கொண்டதும், வெளியே வந்து பிரகாரத்தில் அமர்ந்தார்கள்.

''என்ன வேண்டிக் கொண்டாய்...?'' என்று கேட்டார் சாமியார். அவன் தனது குறையைச் சொன்னான். ''இது தீர வேண்டும் என்று வேண்டிக் கொண்டேன். நல்லபடியாக முடிந்தால் உண்டியலில் ஒரு ரூபாய் போடுவதாக வேண்டிக் கொண்டேன்!'' என்று சொன்னான். சாமியார் சிரித்தார்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று இருவரும் கேட்டார்கள்.

''நானும் பார்க்கிறேன். ஆயிரக்கணக்கான மக்கள் கோயிலுக்கு வருகிறார்கள். ஆனால், எல்லோருமே தங்கள் சுயகாரியம் நிறைவேறத்தான் பிரார்த்தனை செய்கிறார்கள். தனக்கு வேண்டியதைத்தான் கேட்கிறார்கள். 'உலகத்துக்கு நன்மை கிடைக்கட்டும். மக்கள் நன்றாக இருக்கட்டும் என்று வேண்டிக் கொள்வாரே இல்லை. உண்டியலில் காசு போடுகிறார்கள். அதுவும் கூட அவர்கள் வேண்டிக் கொண்டதை பகவான் நிறைவேற்றி வைத்ததற்குக் கட்டணமாகத்தான் இருக்கிறது. அவர் அப்படி நிறைவேற்றி வைத்திராவிட்டால் உண்டியலில் காசு விழுந்திருக்காது!'' என்று சொல்லிச் சிரித்தார் சாமியார்.

அவர்கள் இருவரும் வெட்கித் தலைகுனிந்தார்கள். தங்கள் அறியாமை அவர்கள் இருவருக்கும் புரிந்தது. சாமியாரைப் பார்த்து, ''கோயிலுக்கு வந்தால், பகவானிடம் துன்பம் நீங்கிவிடும், என்று சொல்கிறார்களே...?'' என்று கேட்டார்கள்.

''பகவானின் கையில் ஒன்று உயர்ந்து நிற்கிறது. இன்னொன்று தாழ்ந்து காட்டுகிறது. அதன் பொருள் என்னவென்று தெரியுமா...?'' என்று கேட்டார் சாமியார்.

''தெரியும். ஒன்று அபயஹஸ்தம். அது அஞ்சாதே என்று சொல்கிறது. இன்னொன்று வரத ஹஸ்தம். அது அருள்பாலித்துக் காப்பாற்றுகிறது'' என்றான் நண்பன்.

அது ''பொதுவாக எல்லாரும் சொல்லுவது. ஆனால் நீ புரிந்துகொள்ள வேண்டிய பொருள் வேறு!'' என்றார் சாமியார்.

''அது என்ன சுவாமி...?'' என்று இருவரும் ஆவலோடு கேட்டார்கள்.

''கீழ் நோக்கிக் காட்டும் கை சொல்லுகிறது! 'உன்னுடைய பாபங்களை எனக்குக் கொடுத்துவிடு. எல்லாவற்றையும் கொடுத்தேன் என்று சொல்லி என் காலில் விழுந்துவிடு'' என்று!'

''இன்னொரு கை என்ன சொல்கிறது?''

''உன்னுடைய விதிப்படி நீ அனுபவிக்க வேண்டிய [illegible] தான் ஆக வேண்டும். [illegible] முடியாது. ஆனால் அதற்கு வேண்டிய [illegible] துன்பத்தை ஏற்றுச் சமாளிக்கக்கூடிய—மனோ [illegible] திடத்தை நான் உனக்குக் கொடுக்கிறேன். அந்தத் துணிவை அளித்து நான், நீ சரிந்துபோய்விடாமல் காப்பாற்றுகிறேன் என்று அந்தக் கை சொல்லுகிறது!''

இருவரும் பிரமித்து நின்றார்கள்.

''தேங்காய் உடைத்துவிட்டால் துயரம் உடைந்து நீங்கிவிடும் என்று நினைக்காதீர்கள். காணிக்கை போட்டுக் கடவுளின் அருளை வாங்கிவிடலாம் என்று எண்ணாதீர்கள். உங்களுடைய தற்பெருமையை, அகந்தையை, அவர் காலடியில் வைத்து, அடிமையாய் அடிபணியுங்கள். அவர் உங்களது துன்பங்களைச் சமாளிக்கும் மனோ திடத்தை உங்களுக்குக் கொடுப்பார்!'' என்றார் சாமியார்.

● ●

# 17

மாலை மணி ஐந்து. அலுவலக வேலை முடிந்து விடுகிறது. பை, டிபன் பாக்ஸ் எல்லாவற்றையும் கையில் எடுத்துக் கொண்டு, நீங்கள் புறப்படுகிறீர்கள். பஸ் நிற்குமிடத்துக்கு வந்து 'க்யூ'வில் நின்றால் ஒரு மணி நேரத்தில் உங்கள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்து விடலாம்.

'க்யூ'வில் வந்து நின்று கொண்டு, மனச் சோர்வுடன் உங்களைச் சுற்றிலும் பார்க்கிறீர்கள். உங்கள் பார்வையில் உங்களுக்குப் பழக்கமான, தெரிந்த முகம் ஒன்று தட்டுப்படுகிறது. அவர் உங்களைப் பார்த்துச் சிரிக்கிறார். நீங்களும் புன்னகை புரிகிறீர்கள். அவருக்கு உங்களை அடையாளம் தெரிகிறது. உங்களால் தெரிந்து கொள்ள முடியவில்லை. அதுதான் சென்னை நகர வாசிகளின் சுபாவம். நீங்கள் அதற்கு விலக்கில்லை,

தலையை அசைக்கிறீர்கள். 'சௌக்கியந்தானா...?' என்பது போல ஜாடையில் கேட்கிறீர்கள். அதற்குள் கொஞ்சங் கொஞ்சமாக நினைவு படுத்திப் பார்த்துக் கொள்கிறீர்கள். அவரை நீங்கள் சென்னையிலிருந்து முப்பது மைல் தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தில் சந்தித்திருக்கிறீர்கள். ஒரு பிற்பகல் வேளையில் அந்தக் கிராமத்துக்கு வேலை நிமித்தம் நீங்கள் போனபோது, அவர் உங்களுக்குச் சாப்பாடு போட்டிருக்கிறார். அவருடைய பெயர்தான் ஞாபகம் இல்லை...

பஸ் வந்து நிற்கிறது. எல்லாரும் ஏறுகிறார்கள். நீங்களும் ஏறுகிறீர்கள். அவர் உங்கள் அருகாமையில் வந்து நிற்கிறார். அவரைப் பார்த்து நீங்கள் ''முப்பது மைல்களுக்கு

''தெரியும். ஒன்று அபயஹஸ்தம். அது அஞ்சாதே என்று சொல்கிறது. இன்னொன்று வரத ஹஸ்தம். அது அருள்பாலித்துக் காப்பாற்றுகிறது'' என்றான் நண்பன்.

அது ''பொதுவாக எல்லாரும் சொல்லுவது. ஆனால் நீ. புரிந்துகொள்ள வேண்டிய பொருள் வேறு!'' என்றார் சாமியார்.

''அது என்ன சுவாமி...?'' என்று இருவரும் ஆவலோடு கேட்டார்கள்.

''கீழ் நோக்கிக் காட்டும் கை சொல்லுகிறது! 'உன்னுடைய பாபங்களை எனக்குக் கொடுத்துவிடு. எல்லாவற்றையும் கொடுத்தேன் என்று சொல்லி என் காலில் விழுந்துவிடு'' என்று!'

''இன்னொரு கை என்ன சொல்கிறது?''

''உன்னுடைய விதிப்படி நீ அனுபவிக்க வேண்டியவற்றை நீ அனுபவித்துத்தான் ஆக வேண்டும். அதன் போக்கை நான் மாற்ற முடியாது. ஆனால் அதற்கு வேண்டிய—அந்தத் துன்பத்தை ஏற்றுச் சமாளிக்கக்கூடிய—மனோ பலத்தை நான் உனக்குக் கொடுக்கிறேன். அந்தத் துணிவை அளித்து நான், நீ சரிந்துபோய்விடாமல் காப்பாற்றுகிறேன் என்று அந்தக் கை சொல்லுகிறது!''

இருவரும் பிரமித்து நின்றார்கள்.

''தேங்காய் உடைத்துவிட்டால் துயரம் உடைந்து நீங்கிவிடும் என்று நினைக்காதீர்கள். காணிக்கை போட்டுக் கடவுளின் அருளை வாங்கிவிடலாம் என்று எண்ணாதீர்கள். உங்களுடைய தற்பெருமையை, அகந்தையை, அவர் காலடியில் வைத்து, அடிமையாய் அடிபணியுங்கள். அவர் உங்களது துன்பங்களைச் சமாளிக்கும் மனோ திடத்தை உங்களுக்குக் கொடுப்பார்!'' என்றார் சாமியார்.

● ●

# 17

மாலை மணி ஐந்து. அலுவலக வேலை முடிந்து விடுகிறது. பை, டிபன் பாக்ஸ் எல்லாவற்றையும் கையில் எடுத்துக் கொண்டு, நீங்கள் புறப்படுகிறீர்கள். பஸ் நிற்குமிடத்துக்கு வந்து 'க்யூ'வில் நின்றால் ஒரு மணி நேரத்தில் உங்கள் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்து விடலாம்.

'க்யூ'வில் வந்து நின்று கொண்டு, மனச் சோர்வுடன் உங்களைச் சுற்றிலும் பார்க்கிறீர்கள். உங்கள் பார்வையில் உங்களுக்குப் பழக்கமான, தெரிந்த முகம் ஒன்று தட்டுப்படுகிறது. அவர் உங்களைப் பார்த்துச் சிரிக்கிறார். நீங்களும் புன்னகை புரிகிறீர்கள். அவருக்கு உங்களை அடையாளம் தெரிகிறது, உங்களால் தெரிந்து கொள்ள முடியவில்லை. அதுதான் சென்னை நகர வாசிகளின் சுபாவம். நீங்கள் அதற்கு விலக்கில்லை,

தலையை அசைக்கிறீர்கள். 'சௌக்கியந்தானா...?' என்பது போல ஜாடையில் கேட்கிறீர்கள். அதற்குள் கொஞ்சங் கொஞ்சமாக நினைவு படுத்திப் பார்த்துக் கொள்கிறீர்கள். அவரை நீங்கள் சென்னையிலிருந்து முப்பது மைல் தூரத்தில் உள்ள ஒரு கிராமத்தில் சந்தித்திருக்கிறீர்கள். ஒரு பிற்பகல் வேளையில் அந்தக் கிராமத்துக்கு வேலை நிமித்தம் நீங்கள் போனபோது, அவர் உங்களுக்குச் சாப்பாடு போட்டிருக்கிறார். அவருடைய பெயர்தான் ஞாபகம் இல்லை...

பஸ் வந்து நிற்கிறது. எல்லாரும் ஏறுகிறார்கள். நீங்களும் ஏறுகிறீர்கள். அவர் உங்கள் அருகாமையில் வந்து நிற்கிறார். அவரைப் பார்த்து நீங்கள் ''முப்பது மைல்களுக்கு

அப்பாலிருந்து எங்கே சென்னைக்கு வந்தீர்கள்..? ஏதாவது கல்யாணமா...?'' என்று கேட்கிறீர்கள்.

அவர் ''இல்லை'' என்று சொல்லிச் சிரிக்கிறார்.

''கிராமத்தை விட்டுவிட்டு வந்து விட்டீர்களா என்ன...?'' என்று ஆச்சரியத்துடன் கேட்கிறீர்கள்.

அதற்கு அவர். ''இல்லை. மாதம் ஒரு முறையாவது இப்படி நான் சென்னைக்குக் குடும்பத்துடன் வருவேன்'' என்கிறார்.

''எதற்கு...?'' என்று கேட்கிறீர்கள்.

அவர் ''சும்மாதான்!'' என்கிறார். இந்த 'சும்மா'வுக்கு என்ன அர்த்தம்?

''அங்கே நல்ல சாப்பாடு இல்லையா?''

''இருக்கிறதே...?''

''குடி தண்ணீரில் ஏதாவது சிரமமா?''

''இல்லையே...?''

''பால் கிடைக்கவில்லையா?''

''நிறையக் கிடைக்கிறது. மலிவாகவும் கிடைக்கிறது.''

''பின்னே ஏன் ஸார் இங்கே வந்தீர்கள்...? இங்கே நல்ல சாப்பாடு கிடைக்கவில்லை. சாப்பிட்டால் உடம்பு கெட்டுப் போகிறது. குழாயில் தண்ணீர் வருவதில்லை. வந்தாலும் ஜாக்கிரதையாகக் காய்ச்சித்தான் குடிக்க வேண்டி இருக்கிறது. பால் கலப்படமாக இருக்கிறது. நல்ல காற்று இல்லை. வெளியே போகவேண்டும் என்றால் காலாற கிராமத்தில் நடந்து போவதைப் போல இங்கு போக முடியாது. இதைப் போல பஸ்ஸில் நின்று கொண்டுதான் போக வேண்டும். இங்கே எதற்காக வருகிறீர்கள் சுவாமி...? அதுவும்

குடும்பத்துடன் வந்து ஏன் சிரமப்படுகிறீர்கள்...?'' என்று கேட்கிறீர்கள்.

அவர் சிரித்துக் கொள்கிறார். ''கிராமத்திலேயே இருந்தால் எங்களுக்கு 'போர்' அடிக்கிறது. அந்த வாழ்க்கையில் ஜீவன் இல்லை. அதனால் இங்கே கிளம்பி வந்து விடுகிறோம். சும்மாத்தான்!'' என்கிறார் மறுபடியும்.

''இங்கே வந்து என்ன செய்கிறீர்கள்?''

''மவுண்ட் ரோட்டில் மேலும் கீழுமாக நடந்து போய்க் கொண்டிருக்கிறோம். நடந்து போய்க் கொண்டிருந்தாலே போதுமே? எவ்வளவு கலகலப்பாகஇருக்கிறது...? பார்த்துக் கொண்டிருந்தாலே பொழுது போய்விடுமே...?'' என்கிறார்.

உங்களுக்குப்புரிகிறது. அவர் பொழுதுபோக வேண்டும் என்று விரும்புகிறார்—சும்மா. நீங்களும் கிராமப்பகுதிகளுக்குப் போவதுண்டு, பொழுது போவதற்காக—சும்மா...

நமக்கு நாட்டில் நிறைய இயற்கை வளம் இருக்கிறது. உழைப்பதற்கு நிறைய மக்கட் தொகை இருக்கிறது. வேலை இல்லாதவர்களும் நிறைய இருக்கிறார்கள். ஆனாலும் நமக்கு உழைக்க மனம் இல்லை. சும்மா இருந்து சாப்பிடத்தான் பெரும்பாலோர் விரும்புகிறீர்கள்.

நாட்டுக்காக இல்லாவிட்டாலும், நமக்காக, வியர்வை சிந்த உழையுங்கள். தரிசு நிலங்களைப் பசுமையான பயிர் நிலங்களாக மாற்றுங்கள். உழைப்புக்கு மதிப்பு கொடுங்கள். அதில் மனம் ஒன்றி ஈடுபடுங்கள்.

இதைத்தான் கண்ணன் கீதையில் சொல்கிறான். ஆனால், அதை அறிந்து கொள்ள நாம் புராணங்களையும், கீதையையும் தேட வேண்டியதில்லை. நமக்கு நம்முடைய வாழ்க்கையிலேயே அது நிறைந்துகிடக்கிறது.

● ●

# 18

அவர்கள் இருவரும் பக்கத்துப் பக்கத்து வீட்டில் குடி இருப்பவர்கள். ரொம்ப நாளைக்கு இருவரும் ஒற்றுமையாகத்தான் வாழ்ந்து வந்தார்கள். நடுவில் ஏதோ கொஞ்சம் கோபதாபங்கள், சில்லறைப் பொறுமைகள் வந்து புகுந்துவிட்டன.

அன்றைக்கு இரண்டு வீட்டுக்காரர்களுடைய மனைவிமார்களும் ஏகமாகச் சண்டை போட்டுவிட்டார்கள். வாய்க்கு வந்த மாதிரி பேசிக்கொண்டார்கள். பக்கத்து வீட்டுக்காரி சற்றுத் தாறுமாறாகவே திட்டிவிட்டாள். அதை முதல் வீட்டுக்காரியால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. கணவன் சாப்பிட வீட்டுக்கு வரும் வேளையில் பிழியப் பிழிய அழுது கொண்டிருந்தாள்.

கணவன் ஒரு தொழிற்சாலையில் காவல் வேலை பார்க்கிறவன். துப்பாக்கி லைசென்ஸ் வைத்திருந்தான். வீட்டிலேயே துப்பாக்கியும் இருந்தது. மனைவி அழுதுகொண்டிருப்பதைப் பார்த்து "என்ன விஷயம்?" என்று கேட்டான். மனைவி விவரங்களைக் கூறியதும் கணவனுக்கு அளவு மீறிய கோபம் வந்துவிட்டது.

துப்பாக்கியை எடுத்துக்கொண்டு நேரே பக்கத்து வீட்டுக்குப் போனான். அவனுடைய அவசரத்தையும் ஆத்திரத்தையும் பார்த்த மனைவி பதறிப் போய், "வேண்டாம். ஒன்றும் செய்துவிடாதீர்கள்!" என்று கெஞ்சியபடி பின்னாலேயே ஓடினாள். அவன் காலைப் பிடித்துக்கொண்டு கதறினாள். ஆனால் அவனை நிறுத்த முடியவில்லை. கோபம் பொங்கிவந்துவிட்டால் அடக்குவது ரொம்ப கஷ்டம்.

பக்கத்து வீட்டுக்காரர் எதிரே வந்தார். அவர் தன்னுடைய மனைவியை விட்டுக்கொடுப்பாரா? அவளுக்குப் பரிந்து அவர் பேசத் தொடங்கினர். பேச்சு வார்த்தை முற்றிப் போய் அவரும் எல்லைகடந்து பேசிவிட்டார். முதல் வீட்டுக்காரர் பொறுமை சற்றும் இல்லாமல் துப்பாக்கியை எடுத்துச் சுட்டுவிட்டார். நல்ல வேளையாக, மோசமான காயம் இல்லை. சுற்றிலும் இருந்தவர்கள் குறுக்கே புகுந்து தடுத்து விட்டார்கள்.

ஒரு பெரியவர் அந்தப் பக்கமாக வந்து கொண்டிருந்தார். அவர் அந்த மனிதனைக் கையைப் பிடித்துக் தனியாக அழைத்துக்கொண்டு போனர். ஒரு ஆலமரத் தடியில் உட்காரவைத்து, துப்பாக்கியை வாங்கித் தூர வைத்தார். அவனுடைய கோபம் சற்று ஆறி இருந்தது. ஆனலும் மனம் முழுமையாகச் சமாதானம் அடைய வில்லை.

''எந்த அளவுக்குக் கோபம் வந்தாலும் இதைப்போலச் சுடலாமா? அவன் இறந்து போயிருந்தால் என்ன ஆவது?'' என்று கேட்டார் பெரியவர்.

''சுடுவேன். ஆயிரம் தடவை வேண்டுமானலும் சுடுவேன்!'' என்றன் கணவன். இன்னும் கோபம் முழுவதும் தணிந்தபாடில்லை.

''அப்படி என்ன தவறு நடந்துவிட்டது?''

''அவன் என் மனைவியைப் பற்றி அவதூருகப் பேசி விட்டான்.''

''உன் மனைவி ஒரு பெண் தானே?''

''ஆமாம். இது என்ன கேள்வி சுவாமி?''

''அவன் ஒரு ஆண் பிள்ளை தானே?''

''ஆமாம். ஏன் இப்படியெல்லாம் கேட்கிறீர்கள்? எனக்கு ஒன்றும் புரியவில்லை.''

''தெருவில் போகும் ஒரு ஆண் பிள்ளை, ஒரு பெண்ணைப் பார்த்துத் திட்டுகிறான் என்று வைத்துக்கொள்வோம். நீ இப்படித் துப்பாக்கியால் சுடுவாயா?''

''இது என்ன கேள்வி? அவள் யாரோ? அவன் யாரோ? நான் ஏன் சுடுகிறேன்?''

''பின்னே இப்போது மட்டும் ஏன் சுட்டாய்? ஒரு பெண்ணைப் பற்றி ஒரு ஆண் தவறாகப் பேசிவிட்ட சமாசாரம் தானே இதுவும்?''

''இவள் என் மனைவி? இவளிடம் எத்தனை பிரியம் வைத்திருக்கிறேன் தெரியுமா? அவனை அப்படித் திட்டினால் என்னால் எப்படிப் பொறுக்க முடியும்? அதனால்தான் கோபம் வந்து சுட்டுவிட்டேன்.''

''உன் மனைவியிடம் உனக்குப் பிரியம் இல்லை என்று வைத்துக் கொள்வோம். அவளுடைய தொல்லையை உன்னால் சகிக்க முடியவில்லை. அவள் தொலைந்து போய் விட்டால்கூடத் தேவலை என்று உனக்குத் தோன்றுகிறது......''

''என்ன ஐயா இப்படிச் சொல்லுகிறீர்கள்?''

''வைத்துக் கொள்வோம். சொன்னதால் அப்படி ஆகிவிடுமா என்ன? விவாக ரத்து செய்து விடலாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறாய். அந்த நிலையில் இந்த மாதிரி உன் மனைவியைப்பற்றி ஒருவர் தாறுமாறாகப் பேசி விடுகிறார். அல்லது கோர்ட்டில் உன்னுடைய வக்கீல் அவளைப்பார்த்து இடைஞ்சலான கேள்விகளைப் போட்டு விடுகிறார். நீ என்ன செய்வாய்?''

அவன் ஒரு நிமிடம் யோசித்துவிட்டு ''எனக்குக் கோபமே வந்திராது. இப்படிச் செய்திருக்க மாட்டேன்'' என்று மெதுவாகச் சொன்னான்.

''அது மட்டும் அல்ல. 'எனக்குத்தான் தைரியம் இல்லை. நீயாவது துணிந்து பேசினாயே?'' என்று அவர்க

ளுடன் கை குலுக்கி இருப்பாய்! 'ஊரில் எல்லோரும் நான், மனைவியுடன் சண்டை போடுவதாகச் சொல்லுகிறீர்களே! நான் படுகிற அவஸ்தை இப்போதாவது தெரிந்ததா?' என்று வாசலில் நின்று சொல்லி இருப்பாய். அப்படித் தானே?'' என்று கேட்டார் பெரியவர்.

அவன் சிரித்து விட்டான். அவனுடைய கோபம் அடங்கிவிட்டது.

''அதுதான் அப்பா மனித இயல்பின் தத்துவம். எல்லா ருடைய மனத்திலும் அன்பு இருக்கிறது. மிகக் கொடிய வனின் மனத்திலும்கூட அது எங்கேயோ ஒரு மூலையில் துளிர்விட்டுக் கொண்டுதான் இருக்கிறது. மிகக் குரூர மான காரியத்தை ஒருவன் செய்யும்போதும், ஒரு அன்பு தான் பின்னல் நின்று தள்ளி, அவனை அப்படிச் செய்ய வைக்கிறது. மனிதன் தன் பார்வையை உள்ளே திருப்பி, அந்த அன்பை அடையாளம் கண்டுகொண்டு விட்டால் போதும்; அப்புறம் அவனுக்குக் கோபமே வராது. அவன் பண்பட்டவனாக ஆகிவிடுவான்!'' என்றார் பெரியவர்.

● ●

# 19

அவனுக்கு அது வாலிபப் பருவம். நிறைய உடற் பயிற்சிகள் செய்து பலத்தையும், அழகையும் தேடிக்கொண் டான். நன்றாகப் படித்தான். நல்ல வேலையும் கிடைத்தது. வாலிபப்பருவம், அழகு, ஆரோக்கியம், அந்தஸ்து எல் லாம் வந்து விட்டது. அடுத்தது மனிதன் எதைத் தேடு வான்? அதைத்தான் அவனும் தேடினான்.

இருவரும் சந்தித்துக் கொண்டார்கள், ஒருவரை யொருவர் காதலித்தார்கள். அது அவர்களுடைய திரு மணத்தில் முடிந்தது. கிடைக்கும் வரையில்தான் அந்த ஆசை, வேகம் எல்லாம்; கிடைத்த பிறகு மனம் திருப்தி அடைவதில்லை. தேநிலவு எல்லாம் முடிந்து குடித்தனம் செய்ய அமர்ந்தார்கள். தாம்பத்திய சுகத்தை முழு அள வுக்கு அனுபவித்தார்கள். போதவில்லை; குழந்தை இல்லையே என்று ஏக்கமாக இருந்தது.

குழந்தையும் பிறந்தது. அது ஒரு பெண் குழந்தை. 'ஆண் குழந்தை இல்லையே?' என்று ஒரு ஏக்கம் உண்டா யிற்று. தொடர்ந்து ஒரு ஆண் குழந்தையும் பிறந்தது. அத் துடன் நிற்குமா...?அப்புறம் இரண்டும் பிறந்தது. குடும்பம் பெருகிவிட்டது. செலவுகூடியது. அதற்காகக் கூடுதலாகச் சம்பாதிக்க வேண்டி இருந்தது. ஓடியாடி உழைத்து, ஒரு வேலைக்கு இரண்டுவேலையாகப் பார்த்துச் சம்பாதித்தான்.

'வாடகை வீட்டில்தானே குடி இருக்கிறோம்? நமக் கென்று சொந்தமாக ஒரு வீடு இல்லையே...?' என்று கணவன் மனைவி இருவருக்கும் குறை. சிரமப்பட்டு ஒரு வீட்டுமனை யை வாங்கினார்கள். கடன் வாங்கி, 'கியூ'வில் நின்று சிமெண்ட் வாங்கி, சிரமப்பட்டு வீட்டைக் கட்டி முடித் தான். செலவோடு செலவாக வீட்டுக்கு வேண்டிய சாத னங்கள், ஸோபா, கட்டில் எல்லாம் வாங்கிப்போட்டான். 'அப்பாடா' என்று பெருமூச்சு விட்டான்.

ஆனால், திருப்தி ஏற்பட்டதா? அது தான் இல்லை!

உடம்பு தளர்ந்துவிட்டது. சரியாகச் சாப்பிட முடிய வில்லை. இரவில் நல்ல தூக்கம் இல்லை. அதிகம் பேசினால் பட படவென்று வந்தது. 'என்னனென்வோ செய்துமுடித் தோம்; அனுபவிக்கச் சக்தி இல்லையே?' என்று மிகவும் வருத்தமாக இருந்தது.

மேலும் வயதாகி விட்டது. குழந்தைகள் பெரியவர்களாகிவிட்டார்கள். அவர்களுடைய ஆசைகள், ருசிகள் வேறு விதமாக இருந்தன. அவனுடைய உழைப்பையும் முயற்சியையும் குழந்தைகள் பாராட்டவில்லை. அவன் சொன்ன பேச்சைக் கேட்க மறுக்கத் தொடங்கினார்கள். 'பெரியவர்களாக வளர்ந்துவிட்டார்கள். 'கவலைவிட்டது. இனிமேல் நிம்மதியாக இருக்கலாம்' என்று அவனால் இருக்க முடியவில்லை. குழந்தைகளைப் பற்றிய கவலையும் பெரியவர்களைப் பற்றிய கவலையாக வளர்ந்து விட்டது.

இதற்குள் வீடு பழசாகி விட்டது. சோபா எல்லாமே பழசாகவும் மூளியாகவும் தென்பட்டன. அடிமுதல் தலைவரை ஒவ்வொன்றையும் புதுப்பிக்க வேண்டி இருந்தது. அதற்காக மேலும்உழைத்தான். இன்னும் சம்பாதித்தான், வேலையிலிருந்து ஓய்வு பெறவில்லை. எல்லாவற்றையும் ஓரளவு சரி செய்தான்.

வயது முதிர்ந்துவிட்டது. இனிமேல் பரவாயில்லை. வேலை செய்ய, வேண்டியதில்லை. எல்லாவற்றையும் அனுபவிக்கலாம். ஆனால், அவனுக்கு வயதாகி விட்டதே! அந்த சுகங்களையும்இன்பங்களையும் ஏற்க உடம்பில் சக்தி இல்லையே? பலவிதமாக ருசித்துச் சாப்பிடவும் விதம்விதமாகப் பொழுதுபோக்கவும் உடம்பில் பலமும் வீரியமும் இல்லாமல் போய்விட்டதே?

செல்வம் கூடுகிறது. பிள்ளைகள் சம்பாதிக்கத் தொடங்கிவிட்டார்கள். ஆனால் அவனை ஒதுக்கிவிடுகிறார்கள். அவர்கள் 'அப்பா! உனக்கு வயதாகி விட்டது. குடும்ப விவகாரத்தில் தலையிடாதே. பேசாமல் வேளா வேளைக்குப் போட்டதைச் சாப்பிட்டுவிட்டு ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டிரு!' என்று சொல்லுகிறார்கள். தனக்கென்று ஒரு திருப்தியை, மனஅமைதியைத்தேடி வாழ்நாள்

முழுவதும் ஓடிக் கொண்டிருந்தது வியர்த்தமானதை இப்போது அவன் புரிந்து கொள்கிறான். அதனால் தன் ஏமாற்றத்தை வெளியே காட்டிக் கொள்வதில்லை.

பொக்கை வாயைத் திறந்து சிரிக்கிறான். தன்னை வணங்கும் குழந்தைகளை, பேரக் குழந்தைகளை, 'நன்றாக இரு! சிரேயஸாக இரு!' என்று சொல்லி ஆசீர்வாதம் செய்வதில் திருப்தி அடைந்து விடுகிறான் தன் தோல்விகளையெல்லாம் மறந்து போய்விடுகிறான்.

இன்பம் கிடைக்குமென்று நாம் நம்புகிற அமைப்பில், எப்போதும் மாறிக்கொண்டே இருக்கும் பொருட்களை ஒன்று சேர்ப்பதற்காக வியர்த்துக் களைத்து விறுவிறுக்கிறோம். ஒரு விருப்பத்திலிருந்து இன்னொரு விருப்பத்துக்கு விரட்டப்படுகிறோம். ஆனால், நம்முடைய தேவை நிறைவேறுவதில்லை. அதை எப்போது உணருகிறோமோ, அப்போதுதான் தெய்வீக வாழ்க்கையில் மனம் ஊன்றுகிறது. தன்னலம் மறைகிறது. அங்கே எல்லாப் பிரச்சினைகளும், துன்பங்களும் முடிவடைகின்றன...

● ●

# 20

பிரசவத்துக்காக அந்தத் தாய் மருத்துவ மனைக்குப் போனாள். அது அவளுக்கு ஐந்தாவது பிரசவம். இந்த நாளில் கல்யாணம் செய்து கொண்டிருந்தாலும் அவள் அந்தநாளைய மனுஷி. 'இரண்டுக்கு மேல் எப்போதும் வேண்டாம்" என்பதெல்லாம் அவளுக்குத் தெரியவில்லை.

அவள் ஒருநடுத்தரக்குடும்பத்துமனைவி. வீட்டுக்காரியங்கள் அவ்வளவையும் தானே செய்வாள். குழந்தைகளைப் பெற்றுக் கொள்வதும் அவளுடைய குடும்பக் கடமைகளில் ஒன்றாகவே இருந்தது. அதனால் தனது உடல் நலம் பாதிக்கப்படுமே என்ற கவலை அவளுக்கு இல்லை. நமது குடும்பப் பெண்கள் எல்லாருமே பொதுவாக அப்படித்தான். வீட்டுக்காக உழைத்து, குழந்தைகள் பெற்று அவள்உடல்தேய்ந்து மிகவும் பலவீனமாகி விட்டது.

பிரசவத்தைக் கவனித்த டாக்டர் அம்மாள் அவள் உடம்பில் தெம்பு இல்லை என்பதைக் கண்டு கொண்டு, உடலில் பலம் இருக்கட்டும் என்று அவளுக்குச் சிறிது பிராந்தி கொடுப்பதற்கு ஏற்பாடு செய்தாள். அந்த அம்மாள் பிரசவத்துக்காக மருத்துவமனையில் நாற்பது நாட்கள் இருக்க வேண்டியிருந்தது. தினமும் இப்படியே நடந்து வந்தது.

ஆனால், அந்தத் தாய் தனக்கு என்ன கொடுக்கிறார்கள் என்பதை கவனிக்கவே இல்லை. ஒரு நாளாவது நர்ஸிடம் 'நேற்று எனக்கு ஏதோ கொடுத்தீர்களே? அதைச் சாப்பிட்டால் தெம்பாக இருக்கிறது. இன்றைக்கும் கொடுப்பீர்களா...?' என்று கேட்கவே இல்லை. அதை ஒரு மருந்தைப் போலத்தான் சாப்பிட்டு வந்தாள்.

மருத்துவ மனையில் ஓய்வில் படுத்திருந்தாலும் அவள் நினைவெல்லாம் வீட்டில் உழைப்பதையே நினைத்துக் கொண்டிருந்தது. 'டாக்டர் கொடுப்பதைச் சாப்பிட வேண்டும். அவர் கவனித்து அனுப்பினால்தான் என் உடம்பு தேறும். நான் வீட்டுக்குப்போய் என் கணவரையும், குழந்தைகளையும் கவனித்துக் கொள்ளலாம்'— இப்படியே நாற்பது நாளும் எண்ணிக்கொண்டு, வீட்டுக்குத் திரும்புவதையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

அதனால் தினமும் அவள் அருந்திய பிராந்தி அவள் உடலில் ஓர் பழக்கமாக ஒட்டவில்லை. வீட்டுக்குத் திரும்-

பியவள் வழக்கம்போலத் தனது வேலைகளைக் கவனிக்க ஆரம்பித்துவிட்டாள். 'டாக்டர் தினமும் ஏதோ கொடுப்பார். அது என்ன என்று நர்ஸிடம் கேட்டு, எனக்கு வாங்கித் தருகிறீர்களா...?' என்று கணவரிடம் கேட்கவேஇல்லை. அந்த ஞாபகமே அவளுக்கு இல்லை.

டீன் ஏஜ் பெண் ஒருத்தி, பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவள். வாலிபர்களுடன் பழக்கம் வைத்துக்கொண்டாள். அப்பாவுக்கு நிறைய பணம் இருந்தது. அவளுக்கென்று தனி கார் இருந்தது. தனியாக பாங்கில் கணக்குஇருந்தது. அவள் எவ்வளவு செலவு செய்தாலும் அதைக் கேட்பவர் யாரும் இல்லை.

வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமை பார்ட்டி நடக்கும். 'பிக்னிக்' என்று வெளியே போவார்கள். குஷியாகப் பொழுதைக் கழிப்பார்கள். அங்கே சுவையான உணவு கிடைக்கும். கூடவே மதுவகைகளும் கிடைக்கும். முதலில் கொஞ்சம் ருசிக்காகச் சாப்பிட்டுப் பார்த்தாள். அப்புறம் அந்தப்பழக்கம் பிடித்துக் கொண்டுவிட்டது.

பழக்கம் பலமாக முற்றியது. 'எப்போது ஞாயிற்றுக் கிழமை வரும்? எப்போது பார்ட்டிக்குப் போகலாம்...5 எங்கே 'பிக்னிக்' குப் போகலாம்...?' என்று ஏங்க ஆரம்பித்துவிட்டாள்.

பரீட்சை வந்துவிட்டது. அவளால் வெளியே போக முடியவில்லை. ஆனால், அந்தப் பழக்கத்தையும் விடமுடியவில்லை, திருட்டுத்தனமாக வாங்கி வைத்துக் கொண்டு வீட்டிலேயே குடிக்க ஆரம்பித்தாள்.

அவளுக்குக் கலியாணமாயிற்று. அங்கேயும் அந்தப் பழக்கத்தை விட முடியவில்லை. கணவன் கண்டித்துக் திருத்த முயன்றான். அவனால் அது முடியவில்லை. கடைசியில் விவாகரத்து செய்துவிட்டான். அவளுடைய வாழ்க்கையே பாழாகிவிட்டது.

முதலாவது பெண்ணின் செயலில் தன்னலம் இல்லை பிறருக்குத் தொண்டு செய்வதற்காகவே, குழந்தைகளுக்கும் கணவனுக்கும் உழைத்து உதவி செய்யவே அவள் தன்னைக் காத்துக் கொண்டாள். அதனால் மருந்தாக அதை ஏற்றுக் கொண்டாள். அது அவளைப் பழக்கமாகப் பற்றி ஆழ்த்தி விடவில்லை.

இரண்டாவது பெண், ஓர் ஆசையால், சுயநலத்தால் அதை அருந்த ஆரம்பித்தாள். எனக்கு' என்ற உணர்வுதான் அதற்குக் காரணம். அதனால் அந்தப்பந்தம் அவளைப் பலமாக அமுத்தி விட்டது. சுயநலத்துக்காக எதைச் செய்தாலும். அதை நாம் நமக்குச் சாதகமாக, ஒரு சாதனையாக ஏற்றுக் கொள்ள முடியாது. அதுவே பெரிதாகி நம்மை அதன் வலையில் வீழ்த்திவிடும். பேராசையும், போகமும், பந்த பாசங்களும் பெருகி நம்மையே நாம் இழந்து விடுவோம்.



# 21

நமக்குத் தேவையானவற்றைப் பேசுகிறோம். எழுதியும் படித்தும் காட்டுகிறோம். இப்படியெல்லாம் செய்யாமலேயே, ஜாடையிலேயே மௌனமாகப் புரியவைப்பதும் உண்டு. அதற்குப் பெயர்தான் முத்திரைச் சாஸ்திரம். அதிலே பண்டிதர்கள் உண்டு. அப்படித் திறமை பெற்றவர்கள் அபூர்வமாகத்தான் இருப்பார்கள்.

அறிவிற் சிறந்த ஓர் அரசன் அந்த நாட்டை ஆண்டு கொண்டிருந்தான். எல்லா விதமான கலைகளையும் அவன் ஆதரித்தான் கவிஞர்கள், பாடகர்கள், கலைஞர்கள், பண்டிதர்கள் எல்லாரும் அவனுடைய சபையை அலங்கரித்தார்கள். அவனுடைய சபையில் பயனுள்ள வாதங்கள் பலவும் நடக்கும். மக்கள் திரளாகக் கூடி அவற்றைக் கவனிப்பார்கள்.

பக்கத்து நாட்டில் ஒரு பண்டிதர் இருந்தார். அவர் முத்திரை சாஸ்திரத்தில் ரொம்பக் கெட்டிக்காரரர். அந்தக் கலையில் அவருடன் போட்டி போட்ட பலரையும் அவர் தோற்கடித்திருக்கிறார்; அவருடன் விவாதம் செய்ய எல்லாரும் பயப்படுவார்கள்.

ஒரு நாள் இந்தப் பண்டிதர் அரசனுக்குச் சொல்லி அனுப்பினார். ''நான் உங்கள் சபைக்கு வந்து என்னுடைய திறமையைக் காட்ட விரும்புகிறேன். அரசவைப் பண்டிதர்களுடன் வாதாட விரும்புகிறேன். நீங்கள் எல்லாக் கலைகளிலும் வல்லவர்களைச் சபையில் வைத்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். என்னுடன் முத்திரை சாஸ்திரப்படி வாதாட ஒருவரை நீங்கள் ஏற்பாடு செய்யவேண்டும். இல்லை என்றால் உங்கள் பண்டித சபை முழுமையானது அல்ல என்று தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டும்!'' என்று குறித்து அனுப்பினார்.

அரசனுக்குக் குறிப்பு கிடைத்தது. அரசனுக்குக் கவலை உண்டாயிற்று. அப்படிப்பட்ட விற்பன்னர்கள் அவனுடைய சபையில் இல்லை, ஆனால், அதை வெளியே சொன்னாலும தோல்வியை ஒப்புக் கொண்டதாகும். அதனால் பண்டிதர்களை அழைத்து ஆலோசனை நடத்தினான். 'அரசனே! நாம் யாரைத் தயார் செய்தாலும் அந்தப் பண்டிதரை ஜெயிக்க முடியாது. அதனால், ஒரு அனுபசாலியை அதைப்போல வேடம் போட்டுக் கொள்ளச் செய்து

அழைத்து வருவோம். நடப்பது நடக்கட்டும். அவன் தோற்றுப் போனாலும் கவலைப்பட வேண்டியதில்லை'' என்று எடுத்துரைத்தார்கள் அந்தப் பண்டிதர்கள்.

பல ஆண்டுகள் ஆடு மேய்த்து அனுபவப்பட்ட ஓர் இடையனைத் தேர்ந்தெடுத்து இந்த நாடகத்துக்காகத் தயார் செய்தார்கள். அவனை லட்சணமாக அலங்காரம் செய்து மேடையில் அமரச் செய்தனர். முத்திரை சாஸ்திரப் பண்டிதரும் வந்து சேர்ந்தார். அவரை சகல மரியாதைகளுடன் வரவேற்று, உட்கார வைத்தார்கள். இரண்டு பண்டிதர்களும் ஒருவரையொருவர் பார்த்தபடி அமர்ந்து வாதத்தைத் தொடங்கினார்கள்.

முத்திரை சாஸ்திரப் பண்டிதர் கையை உயர்த்தி ஒரு விரலைக் காட்டினார். ஆட்டிடையனுக்கு ஒரு கண் சரி இல்லை. அவன் உற்றுப் பார்த்துவிட்டுக் கையை உயர்த்தி இரண்டு விரல்களைக் காட்டினான். முத்திரை சாஸ்திரப் பண்டிதர் உற்சாகத்துடன் கையை உயர்த்தி மூன்று விரல்களைக் காட்டினார்! இடையன் கொஞ்சங்கூடத் தயங்காமல் கையை உயர்த்தி எல்லா விரல்களையும் மூடி முஷ்டியை ஆட்டிக் காட்டினான்.

முத்திரை சாஸ்திரப் பண்டிதர் உடனே எழுந்து அவன் காலில் விழுந்து வணங்கினார். பிறகு கண்ணில் நீர் பெருக அவனை அணைத்துக் கொண்டார். தன் தோல்வியை ஒப்புக் கொண்டு, அரசனை வெகுவாகப் பாராட்டினார், அரசனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அந்தப் பண்டிதரைச் சகல மரியாதைகளுடன் பல்லக்கில் அனுப்பி வைத்தான். பல்லக்கில் ஏறும்போது, அவரிடம் ''இந்த வாதத்தில் நீங்கள் கண்டறிந்தது என்ன? அதை நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்று கேட்டான்.

''உங்களுடைய பண்டிதர் பெரிய ஞானி. ஒரு விரலைக் காட்டி நான கடவுள் ஒன்றே என்று கூறினேன. பண்டிதரோ இரண்டு விரல்களைக் காட்டி 'ஜீவாத்மா-பரமாத்மா

இரண்டு உண்டு' என்று கூறினார். நான் மூன்று விரல்களைக் காட்டி 'ஜீவாத்மா—பரமாத்மா— ஈசுவரன்— என மூன்று உண்டு' என்று சொன்னேன். அவரோ எல்லா விரல்களையும் மூடி முஷ்டியைக் காட்டி, ஐக்கியமாகிவிட்ட பிறகு எல்லாம் ஒன்றே என்று உணர்த்தி விட்டார்?'' என்று கூறி விடை பெற்றுக் கொண்டார்.

சபைக்கு வந்து சேர்ந்த அரசன் இடையனை வரவழைத்தான். ''அவர் காட்டிய ஜாடையை நீ எப்படிப் புரிந்து கொண்டாய்?பதிலுக்கு ஏன் அப்படிக் காட்டினாய்?'' என்று கேட்டான்.

''அவர் ரொம்ப புத்திசாலியாக இருக்கலாம். ஆனால், என்னை அவமானப்படுத்த எண்ணினார். என் பலத்தைக் காட்டினேன். பயந்து ஓடிப்போய் விட்டார்! முதலில் ஒரு விரலைக்காட்டி, எனக்கு ஒரு கண் பொட்டை என்பதைக கேலி செய்தார். நான் இரண்டு விரலைக் காட்டி அது இரண்டு கண்களுக்குச் சமானம் என்று புரிய வைத்தேன். ''நம் இருவருக்கும் சேர்ந்துதான் மூன்று கண்களா என்று சொல்வதுபோல அவர் மூன்று விரல்களைக் காட்டினார். நான் மிகுந்த கோபம் அடைந்தேன். 'முஷ்டி'யை உயர்த்திக் காட்டி 'மூக்கை உடைத்து விடுவேன்' என்று சாடை காட்டினேன். அவர் பயந்து போய் என் காலில் விழுந்து விட்டார்.'' என்றான் இடையன்.

அரசன் பண்டிதர் சொன்னதை எடுத்துக் கூறினார். எல்லாரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். இடையனுக்கு நிறையச் சன்மானங்களும் கிடைத்தது.

''மனிதர்களாகிய நாம் பல காரியங்களைச் செய்கிறோம். அவற்றில் வெற்றிகளும் கிடைக்கின்றன. உடனே நாம் பிரமாதமாகச்சாதித்துவிட்டதாக எண்ணிப்பெருமைப் படுகிறோம். ஆனால், இவற்றுக்கெல்லாம் பின்னணியாக இருப்பது மிகப்பெரிய சக்தி. அதை உணர்ந்து நடக்காத

வரையில், நம்முடைய வெற்றியும், அதற்காக நாம் பெருமைப் படுவதும் இடையன் பெருமைப்பட்டதைப் போலத் தான் இருக்கும்!''



# 22

அந்த அரசனுக்கு வேட்டையாடுவதில் ரொம்பப் பிரியம். நம் எல்லாருக்குமே ஒவ்வொரு விதமான ஆசை இருக்கிறது அல்லவா? அதைப்போல அந்த அரசனுக்கு வேட்டையாடுவதில் கொள்ளை ஆசை. தன் மந்திரியுடன் அவன் காட்டுக்குப் போனன். அங்கே ஒரு முனிவரைக் கண்டான்.

''சுவாமி! என்னை ஆசீர்வதியுங்கள். எனக்குப் பயன்படும்படியாக ஏதாவது ஒரு புத்திமதி கூறுங்கள்'' என்று அவரை வணங்கி மிகவும் வினயமாகக் கேட்டான். அவர் புன்சிரிப்புடன் அவனுக்குப் பிரசாதம் கொடுத்து விட்டு, ''மகனே! நீ எந்தக் காரியத்தைச் செய்தாலும், ஒருமுறை அதன் விளைவுகளைத் தீர யோசிக்க வேண்டும். யோசித்து, உன் மனத்துக்கு அது சரி என்று தோன்றினல் மட்டுமே செய்ய வேண்டும்'' என்று கூறினர்.

அரசன் மறுபடியும் அவர் காலடியில் விழுந்து வணங்கினான். முனிவரின் காலடியில் நூறு பொற்காசுகளை வைத்து விட்டுத் திரும்பினன். மந்திரி இதைக்கவனித்துக்கொண்டே இருந்தார். 'என்ன இது? இந்த அரசன் இவ்வளவு ஏமாளியாக இருக்கிறனே...? இந்த எளிய யோசனையைக் கூறிய

தற்கா நூறு பொற்காசுகள்...?" என்று எண்ணினார். அரச னுக்கு மந்திரி நினைத்துக் கொண்டிருந்தது புரிந்து விட்டது.

அரண்மனைக்குத் திரும்பியதும் அந்த முனிவர் கூறிய வாசகத்தைக் கல்லில் செதுக்கித்தனது அறையில் கண்ணிற் படும்படி பதிக்கச் செய்தான். 'இதைக் கல்லில் செதுக்கி வேறு வைக்க வேண்டுமா...? இந்தஅரசனின் அறியாமை யைப் புரிந்து கொள்ளவே முடிவதில்லை' என்று எண்ணிக் கொண்டான் அந்த மந்திரி.

சில நாட்கள் கழிந்தன.

அரசனுக்குத் திடீரென்று கடுமையான வயிற்றுவலி உண்டாயிற்று. அரசனுடைய பிரதம மருத்துவரை அழைத்து வந்தார்கள். அவர் சோதித்துப் பார்த்து விட்டு, மறுபடி மருந்து கொண்டுவருவதாகச் சொல்லிப் போனார். அவர் மருந்து கொண்டு வந்தபோது, அரசனின் அறையில் யாருமே இல்லை. அரசன் கண்மூடிப் படுத்திருந்தான்.

சுற்றும், முற்றும் பார்த்துவிட்டு, மருந்தில் ஒரு பகுதியை ஒரு கோப்பையில் எடுத்துக் கொண்டு, அதில் ஒரு பொடியைக் கலந்து எடுத்துக் கொண்டு வந்தார் மருத்து வர். நிமிர்த்து பார்த்தார். அவருடைய கண்களில் அந்த வாசகம் தென்பட்டது.

"நீ எந்தக் காரியத்தைச் செய்தாலும் அதற்கு முன் அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளை ஒருமுறை யோசித்துப் பார். யோசித்து, உன் மனத்துக்கு அது சரி என்று தோன் றினால் மட்டுமே நீ அந்தக் காரியத்தைச் செய்யவேண்டும்."

மருத்துவர் கொஞ்ச நேரம் யோசித்தார். பிறகு கையி லிருந்த மருந்தைக் கொட்டி விட்டார். கோப்பையை நன்றாகச் சுத்தம் செய்துவிட்டு, மீண்டும் மருந்தை எடுத்துக் கொண்டு வந்து அரசனிடம் கொடுக்க முற்பட்டார். அரசன் கெட்டிக்காரன். அவ்வளவையும் கண்களை மூடியபடி கவனித்துக் கொண்டே இருந்தான்.

"நிறுத்துங்கள்! முதலில் எதையோ கலந்து எடுத்தீர்கள். பிறகு அதைக் கொட்டினீர்கள். மறுபடியும் எதையோ கலந்து கொண்டு வந்தீர்கள். என்ன விஷயம்...? உண்மையைச் சொல்லுங்கள்! இல்லாவிட்டால் தலையை வாங்கிவிடுவேன்!" என்று மிரட்டினான்.

மருத்துவர் நடு நடுங்கிப் போனார். அரசனின் காலில் விழுந்து மன்னிக்கும்படி வேண்டினார். "மன்னித்தேன் என்று சொன்னால்தான் எழுந்திருப்பேன்" என்று கூறிப் பிடிவாதமாக அப்படியே விழுந்து கிடந்தார். அரசன் அவரை மன்னித்து உண்மையை வரவழைத்தான்.

"உங்களுடைய சேனாபதி உங்களைக் கொன்று ராஜ்ஜியத்தை எடுத்துக் கொள்ளத் திட்டம் போட்டிருக்கிறார். அந்தக் காரியத்தை எளிதாக முடிக்க என் உதவியை நாடினார். நோய் வாய்ப்பட்டிருக்கும் உங்களுக்கு விஷம் கலந்து கொடுத்து உங்கள் உயிரை முடித்துவிட்டால் எனக்கு ஏராளமான செல்வத்தைப் பரிசாகக் கொடுப்பதாகக் கூறினார். முட்டாளான நானும் அதை ஏற்று அப்படியே செய்வதாக ஒப்புக் கொண்டேன்.

இங்கே வந்து, மருந்தில் விஷம் கலந்து எடுத்துக் கொண்டபோது, என் கண்களில் இங்கே இருந்த வாசகம் தென்பட்டது. நான் செய்வதாக இருந்த இந்த குற்றம் வெளிப்பட்டு விட்டால் என்ன ஆகும்? செல்வம் கிடைக்கலாம். ஆனால் என் உயிரே போய்விடுமே? இதை நினைத்துப் பார்த்தேன். அதைத் தூரக் கொட்டிவிட்டு மருந்தைக் கலந்துகொண்டு வந்தேன்" என்று சொல்லிப் புலம்பினார் மருத்துவர்.

அரசன் மந்திரியை வரவழைத்தான். சேனாபதியைக் கைது செய்ய உத்தரவிட்டான். நடந்ததை மந்திரியிடம் விளக்கமாகக் கூறினான். "அன்று அந்த வாசகத்தை அலட்சியமாக எண்ணினீர்களே...? இன்று அது என் உயிரையே காத்திருப்பதைப் பார்த்தீர்களா...?" என்று கேட்டான். மந்திரி வெட்கப் பட்டுத் தலையைக் குனிந்து கொண்டார்.

பெரியோர்களின் வாக்கு கேட்க எளிமையானதாக இருக்கும். ஆனால் அதன்படி நாம் வாழ்க்கையை நடத்தினால் விளைவுகள் பிரமாதமானதாக இருக்கும். பெரியோர்கள் பழரசத்தை பிழிந்து கொடுக்க மாட்டார்கள். பழத்துக்கே காரணமான விதையைத்தான் கொடுப்பார்கள். அதை நட்டுச் செடியாக்கி பழத்தைத் தோற்றுவித்துப் பலனைப் பெறுவது நம்முடைய கடமை.



# 23

மகாராஷ்டிரத்தின் பிரபலமான அரசர்களை நினைவு படுத்திக் கொண்டால் நம்முடைய மனத்தில் சத்ரபதி சிவாஜியின் ஞாபகம்தான் தலைதூக்கி நிற்கும். தாயிடமும் மக்களிடமும் அவர் கொண்ட அன்பு அளவில்லாதது. அதே சமயம் அவருடைய மதப்பற்றும் தெய்வபக்தியும் நிகரில்லாதது. ஆனால் அவரும் நம்மைப் போல ஒரு மனிதர் தானே! ஹூம்! என்னைப் போல யார் உண்டு? என்னைப் போலச் சேவை செய்யக் கூடிய பெருமை வேறு யாருக்கு உண்டு?' என்று கொஞ்சம் கர்வம் அவருக்கும் ஏற்பட்டது. அப்போது அவரைச் சந்திக்க என்னைப் போல ஒரு சாமியார் வந்து சேர்ந்தார்...

ஒரு பெரிய கோட்டை உருவாகிக் கொண்டிருந்தது. பெரிய பெரிய கற்களை வைத்துக் கோட்டையின் சுவர்களை எழுப்பிக் கொண்டிருந்தார்கள். அந்த இடத்தில் சிவாஜி நின்று, தானே வேலை வாங்கிக் கொண்டிருந்தார். ஆட்களை விரட்டிச் சுறுசுறுப்பாக வேலை செய்யத் தூண்டிக் கொண்

டிருந்தார். அந்த இடத்துக்கு வந்து சேர்ந்தார். சுவாமி ராம்தாஸ். ''ஜெய் ஜெய் ரகுவீர சமர்த்தா'' என்று ஒரு குரல் எழுப்பினார். அந்தக் குரலில் இருந்த கம்பீரம் சத்ர பதியை மெய்சிலிர்க்க வைத்தது.

சிவாஜி உடனே அங்கே ஓடிவந்தார். சாமியாருக்கு எதிரே கைகட்டி வாய் புதைத்து நின்றார். கமண்டலமும் பிட்சை பாத்திரமுமாக நின்றவரின் பாதங்களைத் தொட்டு வணங்கினார். ''அரசனே! என்ன செய்து கொண்டிருக்கிறாய்? நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்று கேட்டார் ராம்தாஸ்.

சிவாஜிக்குக் கொஞ்சம் கர்வம் ஏற்பட்டது. ''சுவாமி, அரசனாக இருப்பது லேசுப்பட்ட காரியம் இல்லை! அதுவும் இந்து அரசனாக இருப்பதைப் போலச் சிரமமான காரியம் வேறு ஏதும் இல்லை. இன்று இந்தியாவை மொகலாய சாம்ராஜ்யம் பரவிப் பிடித்துக் கொண்டிருக்கிறது. இந்துக்கள் கஷ்டப்படுகிறார்கள். அவர்களைக் காப்பாற்றத் தான் நான் பாடுபடுகிறேன். நான் மட்டும் அவர்கள் சார்பில் எதிர்க்குரல் கொடுக்காவிட்டால், இந்துக்கள் என்றோ அடையாளம் தெரியாமல் போயிருப்பார்கள்!'' என்று பெருமையுடன் சொன்னார் சிவாஜி.

''அப்படியா? அதற்கும் நீங்கள் இப்போது செய்து கொண்டிருக்கும் காரியத்துக்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டார் ராம்தாஸ்,

''என்ன இப்படிக் கேட்கிறீர்கள் சுவாமி? நான் பெரிய கோட்டை ஒன்றை எழுப்பிக் கொண்டிருக்கிறேன். மொகலாயர்கள் படையெடுத்து வந்தால் இதுபோன்ற கோட்டைகள் தாம் நமக்குப் பாதுகாப்பாக இருக்கும். இங்கிருந்து தான் பகைவர்களைத் தாக்க முடியும். நான் மட்டும் இது போன்ற கோட்டைகளை உருவாக்கி இராவிட்டால் இந்த இந்துக்களைக் காப்பாற்றப் போவது யார்?'' என்று கேட்

டார் சிவாஜி. அவருக்கு ஏற்கனவே கொஞ்சம் விசாலமான, அழகான மார்பு உண்டு. இறுமாப்பினால் அது இன்னும் கொஞ்சம் அதிகமாக விசாலமாயிற்று!

நடுப்பகல் நேரமாயிற்று. சுவாமிக்குப் பிட்சை அளிக்கச் சத்ரபதி சிவாஜி, அவரை அழைத்துக் கொண்டு போனார். அரண்மனையில் சுவாமியைச் சகல மரியாதைகளுடனும் வரவேற்றார்கள். அமருவதற்கு அரியாசனம்போட்டார்கள். சாப்பாட்டுக்கு அறுசுவை விருந்துக்கு ஏற்பாடு செய்தார்கள். ஆனால் சுவாமியோ சிறுபலகை ஒன்றில் அமர்ந்து நித்திய பூஜைகளை முடித்துக் கொண்டு கனிவகைகளையும் கொஞ்சம் பாலையும் மட்டும் சாப்பிட்டார்.

'சிவாஜி மிகவும் நல்லவர். நேர்மையாகவே அரசாளுகிறார். ஆனால் அவருடைய மனத்தையும் அகம்பாவம் என்ற பிசாசு பிடித்துக் கொண்டிருக்கிறது. இதை எப்படியாவது விரட்ட வேண்டும்!" என்று எண்ணிக் கொண்டார் ராம்தாஸ்.

"சுவாமி! கொஞ்சநேரம் படுத்திருந்து சிரமபரிகாரம் செய்து கொள்ளுங்களேன். நான் போய் வேலையைக் கவனிக்கிறேன்!" என்றார் சிவாஜி. தூங்குகிற சுவாமியா அவர். அவருடைய மனம் தான் விழிப்புடன் இருக்கிறதே? "இல்லை, இல்லை. நானும் உன்னுடன் வருகிறேன்" என்று கிளம்பிவிட்டார்.

வேலை செய்யும் இடத்தில் பெரிய கற்களைப் புரட்டிப் போட்டு உடைத்துக் கொண்டிருந்தார்கள். சிவாஜி அவர்கள் அருகில் நின்று விரட்டி வேலை வாங்கிக் கொண்டிருந்தார். சுவாமிஜியும் அருகில் போய் நின்று கொண்டார். ஒரு கல்லைச் சம்மட்டியால் அடித்து இரண்டாகப் பிளந்தான் அந்தக் கூலியாள். பிளந்த கல்லிலிருந்து ஒரு தேரை தாவி வெளியே ஓடிற்று.

''அரசனே! உன்னுடைய ஆட்சியில் தேரைக்கும் கூடநீ பாதுகாப்பு அளித்திருக்கிறுய். பத்திரமான இடம் கொடுத்திருக்கிறுய், மற்றவர்கள் கண்ணுக்கோ. பாம்பின் வாய்க்கோ அகப்பட்டிருந்தால் என்ன ஆகி இருக்கும்? நீ இருந்ததால் அல்லவோ இதைக் காப்பாற்ற முடிந்தது?'' என்று கூறிப் புன்னகை செய்தார் ராம்தாஸ்.

சிவாஜி மிகவும் புத்திசாலி. அவருடைய அகந்தை தற்காலிகமாக விளைந்த பலவீனம் தான். சுவாமிஜி தனக்கு உணர்த்தும் மிகப் பெரிய உண்மையை உடனே தெரிந்து கொண்டார். கண்ணில் நீர் ததும்ப அவர் காலில் விழுந்து வணங்கினுர். ''சுவாமி! புரிந்து கொண்டேன். கல்லினுள் தேரைக்கும் கருப்பையில் உயிர்க்கும், உணர்வும் பாது காப்பும் அளித்துக் காப்பாற்றுகிறுர் கடவுள். என்னைப் போன்றவர்கள் சிறு வடிகால்களாக அந்த அருள் வெள்ளம் பாய்வதற்கு உதவுகிறுர்கள். இனிமேல் நான் இதைப் போல அகந்தைக்கு ஆளாகமாட்டேன்'' என்று உணர்ச்சி ததும்பும் குரலில் கூறினுர்.

ஆண்டவனின் கருணை எல்லை இல்லாதது. எளியவர் களைக் காக்க அது தானுகவே பொங்கிப் பாய்ந்து செல்லு கிறது. ஒரு மனிதன் தனக்கு எவ்வளவோ செய்து கொள்ள லாம். ஆனுல் பிறருக்குச் சிறு உதவியைச் செய்வதற்குக் கூட சக்தி இருக்க வேண்டும்; சந்தர்ப்பம் நேரவேண்டும்; இறைவனின் அருளால் மனப்பக்குவம் ஏற்பட வேண்டும். அப்போது தான் இறைவனின் அருள் அவன் மூலமாக மற்றவர்களுக்குக் கிடைக்கும் பேறு ஏற்படும் 'தான்' என்ற அகம்பாவம் ஏற்பட்டால், இந்த வடிகால் தன்னுலே அடை பட்டுப் போய்விடுகிறது!

# 24

பழுத்த சிவ பக்தனாக ஓர் அரசன் இருந்தான். அரசன் என்றால் எவ்வளவோ கவலைகள் இருக்கும். நாள் முழுவதும் அதற்காக ஓடியாடிப் பாடுபட்டுக் கொண்டிருப்பான். அதற்கு நடுவில் கொஞ்ச நேரம் கிடைக்கும். அப்போது அவசரமாக வந்து கொஞ்ச நேரம் பூஜை செய்துவிட்டுப் போவான்!

ஒவ்வொரு ஆண்டும் சிவராத்திரியை ஒட்டி அவனுடைய நாட்டில் மிகப் பெரிய திருவிழா ஒன்று நடக்கும். மக்களெல்லாம் அப்போது சிவபூஜையில் ஈடுபட வேண்டும் என்பது அரசனுடைய கட்டளை. அரசனும் கோவிலுக்குப் போய்வருவான். பெரியோர்களை வரவழைத்து அவர்களுக்கு நிறைய சன்மானங்கள் கொடுப்பான். ஆடலும் பாடலுமாக ஆடம்பரமாக இருக்கும்.

அந்த ஆண்டும் சிவராத்திரியை ஒட்டித் திருவிழா நடந்தது. அரண்மனைக்கு அருகில் அரசன் வந்துபோக சௌகரியமாக ஒரு சிறு சிவன்கோவிலும் கட்டப்பட்டது. மிக ஆடம்பரமாக அதற்குப் பாலாபிஷேகம் நடந்தது. அரசனே அதை முன்னின்று நடத்தினார். குடிமக்கள் அவனுடைய சிவபக்தியை மெச்சிப்பாராட்டினார்கள்.

அன்று இரவு படுக்கப்போகுமுன் அரசன் தன்னுடைய சாதனையெல்லாம் நினைத்துக் கொண்டான். 'என்னைவிடச் சிறந்த பக்தன் வேறு யாரும் இருக்கவே முடியாது!' என்று எண்ணியபடி தூங்கி விட்டான். கனவில் ஈசன் தோன்றினார்.

''சுவாமி! உங்களுக்காக நான் இவ்வளவு முயற்சிகள் எடுத்திருக்கிறேன். இவ்வளவு வேலைகளுக்கும் நடுவில் பூஜைக்கு நேரம் ஒதுக்கி இருக்கிறேன். நிறைய சன்மானங் கள் கொடுத்துப் பெரியோர்களை ஆதரித்து, அவர்கள் மூலமாக நாடெங்கும் சிவபக்தி தழைக்க உதவி இருக்கி றேன். என்னைவிடத் தங்களிடம் சிறப்பாக பக்தி செலுத்து பவர் வேறு யார் இருக்க முடியும்?'' என்று அவரிடம் அரசன் கொஞ்சம் கர்வத்துடன் கேட்டான்.

''ஒருவன் இருக்கிறான்!'' என்று பதில் வந்தது.

அரசன் திடுக்கிட்டுப் போனான். ''அது யார் என்று தெரிந்து கொள்ளலாமா சுவாமி? பெரிய புலவனா இன்னொரு அரசனா? தங்களைப் பற்றிப் புகழ் பரப்பும் வித மாக ஊர் ஊராகச் சென்று பாடும் நாயன்மாரா?'' என்று கேட்டான்.

அப்படி ஒன்றும் இல்லை. அவன் எழுதப் படிக்கத் தெரி யாத ஒரு விறகு வெட்டி. அவனைப் பார்க்க வேண்டுமானால் உன்னுடைய நாட்டின் வட எல்லையில் இருக்கும்காட்டுக்குப் போ! அங்கே குளத்துக்கு அருகில் குடிசை ஒன்றில் அவன் குடி இருக்கிறான். நேரே போய்ப் பார்த்தால் நான் கூறியது மெய் என்று புரிந்து கொள்வாய்!'' என்று கூறிவிட்டு ஈசன் மறைந்து விட்டார்.

அரசன் கண் விழித்து எழுந்தான். உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டிற்று. அவனுடைய படாடோபமான பூஜைகள் அனைத்தும் வீணாகிவிட்டனவே? இறைவன் அவற் றுக்கு மதிப்புத்தர வில்லையே? இதை எண்ண எண்ண அவ னுக்குத் தாபம் பொங்கி வந்தது. அவனால் தூங்க முடிய வில்லை. விடிவதற்கு முன்பே மாறுவேடம் அணிந்து, குதிரை யில் ஏறித் தனியாகவே நாட்டின் வட எல்லையை நோக்கிப் புறப்பட்டுவிட்டான். காட்டை அடைந்து, குளத் தின் கரையை அவன் அடைந்தபோது, மாலை நேரமாகி இருட்டத் தொடங்கி விட்டது. குடிசையில் யாரும் இல்லை. அரசன் காத்துக் கொண்டிருந்தான்.

விறகு வெட்டி வேலையை முடித்துக் கொண்டுவந்தான். குடிசையில் யாரோ அமர்ந்திருப்பதைப் பார்த்து மிகுந்த பணிவுடன் வணங்கினுன். அரசனுக்குக் கொடுப்பதற்கு அவனிடம் ஏதும் இல்லை. என்ன செய்வது என்று எண்ணித் திகைத்தவனுய், அரசனிடம் ''தாங்கள் யார்...? எங்கு வந்தீர்கள்...?'' என்று கேட்டான்,

''உங்களுடைய சிவபக்தியைப் பற்றிக் கேள்விப்பட்டேன். அதனுல் நேரே வந்து தரிசித்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்'' என்று அரசன் பதில் சொன்னுன்,

''அப்படியா...? நான் ஒன்றும் பெரிதாகச் செய்வதில்லையே? எனக்குச்சிவபக்திஉண்டு. ஆனுல், பூஜைசெய்யத் தெரியாது. விறகு வெட்டும் நேரம் முழுவதும் சிரமம் தெரியாமல் இருக்கச் 'சிவசிவ' என்று சொல்லிக் கொண்டே இருப்பேன்'' என்றுன் விறகுவெட்டி.

''கோயிலுக்குப் போவதுண்டா?'' என்று கேட்டான் அரசன்.

''இந்தக் காட்டில் கோவில் ஏது? வெகுதூரம் போனுல் கிரமத்தில் கோயில்ஒன்று இருக்கிறது. அதில் என்னை நுழைய விடமாட்டார்கள். அதனுல் தூரத்தில் நின்றுபார்த்து ஈசனை நினைத்துக்கொள்வேன்'' என்றுன் விறகுவெட்டி.

''தான தருமம் ஏதும் செய்வதுண்டா?'' என்று அரசன் கேட்டான்.

''எனக்குக் கிடைப்பதே சொற்பம். அதில் தருமம் செய்ய வகை ஏது? என்னுடைய செலவுபோகச் சிரமப்பட்டுக் கொஞ்சம் மிச்சப்படுத்தி, வாரம் ஒருமுறை கஞ்சி காய்ச்சி, ஏழைகள் சிலருக்கு ஊற்றுவேன். அந்த வேளை நான் பட்டினி கிடந்து விடுவேன். அவர்களுக்கு வயிறு நிறைந்ததே எனக்கு ஆனந்தமாக இருக்கும்!'' என்றுன் விறகு வெட்டி.

அரசன் அவனுடைய காலில் விழுந்து கும்பிட்டான். பொற்காசுகளைப் பரிசாகக் கொடுத்தான், விறகு வெட்டி அதை ஏற்கவில்லை. ''எனக்கு இவற்றால் என்ன பலன்! இவற்றைத் தகுதி வாய்ந்தவர்களுக்கு, ஏழைகளுக்குச் செலவிடுங்கள். எனக்கு இறைவன் கொடுத்ததேபோதும்!'' என்று கூறி விட்டான்.

அரசன் தன்னடக்கம் பெற்று ஊர் திரும்பினான்.

இறைவன் உங்கள் உள்ளத்திலேயே இருக்கிறான். அதை மதித்து ஒழுக்கத்துடன் வாழ்வதும்; ஏழை எளியவர்களிடம் அன்போடு நடந்து கொள்வதும்தான் உண்மையான பூஜை. அப்படி வாழ்பவருக்கு, அது எப்படிப் பட்ட வாழ்க்கையானாலும், திருப்தியும், மன அமைதியும், மதிப்பும் கிடைத்து விடும்.

'கர்மங்களாலேலோ, ஆடம்பரமான பூஜைகளாலேலோ, செல்வத்தினாலோ இறைவனை அணுக முடியாது. அகம்பாவத்தையும், தற்பெருமையையும் கைவிட்டால்தான் இறைவனை அடைய முடியும்'—இது பெரியோர் வாக்கு.

## 25

நல்ல மழை பெய்துகொண்டிருந்தது. தாத்தா கட்டிலில் உட்கார்ந்து கொண்டிருந்தார். மூன்று குழந்தைகள் கோபு, சந்திரன், கௌரி—விளையாட வெளியே போக முடியாமல், வந்து சுற்றிலும் உட்கார்ந்து கொண்டார்கள். ''தாத்தா... தாத்தா...!—கதை சொல்லு!'' என்று கேட்டார்கள்.

''இன்றைக்கு நான் கதை சொல்லமாட்டேன். நீங்கள் தான் சொல்ல வேண்டும். அதிலும் நம்பமுடியாத பொய்க் கதையாக இருக்கவேண்டும். யாருடைய கதையில் மிகப் பெரிய பொய் இருக்கிறதோ அவர்களுக்குப் பரிசுகொடுக்கப் போகிறேன்'' என்ருர் தாத்தா.

''பொய்யா...?'' அது எப்படி என்றே எங்களுக்குத் தெரியாதே! பொய் சொன்னல் அடிப்பேன் என்று அம்மா சொல்லியிருக்கிருள். அதனல் பொய் சொல்லவே எங்க ளுக்குத் தெரியாது!'' என்ருர்கள் குழந்தைகள்.

''ஏன் பொய் சொல்லக்கூடாது என்று அம்மா உங்க ளிடம் சொன்னளோ?'' என்று கேட்டார் தாத்தா. ''எங் களுக்குத் தெரியாது!'' என்று குழந்தைகள் தலையை ஆட்டி ஞர்கள். ''சரி! இன்றைக்கு நான் உங்களுக்குத் தெரிய வைக்கிறேன். நல்லது! அதற்கு முன்னல் நான் 'சாம்பி ளு'க்கு உங்களுக்கு ஒரு பொய்க்கதை சொல்லுகிறேன். கேட்டுவிட்டு அப்புறம் நீங்களும் சொல்லுங்கள்!'' என்ருர் தாத்தா.

''ஆகட்டும்!'' என்று குழந்தைகளும் உற்சாகமாகத் தலையை ஆட்டினர்கள்.

''ஒரு வயலில் ஒரு குருடன், ஒரு ஊமை, ஒரு நொண்டி மூன்றுபேரும் வேலை செய்துகொண்டிருந்தார்கள். அப்போது அங்கே ஒருமுயல் ஓடுவதைப்பார்த்தார்கள். முதலில் பார்த் தவன் குருடன். 'பிடி...பிடி... !' என்றுகத்தியவன் ஊமை. ஓடிப்போய் பிடித்தவன் நொண்டி. பிடித்த பிறகு பார்த் தால் அது வெள்ளைச் சுண்டெலியாகஇருந்தது. வீட்டுக்குப் போவதற்கு வண்டியை இழுக்க உபயோகப்படும் என்று அதைப் பத்திரமாகக் கூடையில் போட்டுக்கொண்டார் கள்!'' என்ருர் தாத்தா. குழந்தைகள் சிரித்தார்கள்.

கோபு தன்னுடைய கதையைச் சொன்னான். ''நாங்கள் பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தோம். வெயில் தாங்க முடியாமல் நான் என் புத்தகத்தைத் தலைக்குமேல் வைத்துக்கொண்டிருந்தேன். இரண்டு புறாக்கள் அப்போது தலைக்குமேல் பறந்து வந்தன. அவை வானத்தில் சந்திரனைப் பார்த்து மல்லாந்து கொண்டன. அப்போது அவற்றின் வாயிலிருந்து தேன் சிந்திற்று. அந்தத் தேன் என் புத்தகத்தின் மேல்விழுந்து நிறைந்தது. வீட்டுக்கு வந்ததும் அதை அள்ளி அள்ளிக் குடித்தேன்!'' என்று முடித்தான். எல்லாரும் கைத்தட்டி அவனை உற்சாகப்படுத்தினார்கள்.

அடுத்தது சந்திரனின் பங்கு. அவன் ரொம்ப நேரம் யோசித்துப் பிறகு தன் கதையைச் சொன்னான். ''ஒரு நாள் எங்கள் வீட்டுப் பசுவைக் காணவில்லை. அம்மாவுக்கு ரொம்பக் கவலை வந்துவிட்டது. ஊர் முழுவதும் சுற்றிப் பார்த்துத் தேடினார். எங்கேயும் காணோம். பிறகு நாங்கள் படுத்துக் கொண்டுத் தூங்கி விட்டோம். இரவு நல்ல மழை பெய்தது. எங்கள் படுக்கை அறையில் தண்ணீர் நிறைய ஒழுகிற்று. ஏனென்று தெரியவில்லை. அம்மா கூரைமேல் ஏறிப் பார்த்தாள். பசுமாடு அங்கே ஓடுகளைச் சாப்பிட்டுக்கொண்டிருந்தது! அம்மா பசுமாட்டை விரட்டினாள். அது தண்ணீர்க் குழாய்க்குள் புகுந்து கீழே இறங்கி வந்துவிட்டது. அப்புறம் அதை எங்கள் படுக்கையில் பக்கத்தில் படுக்க வைத்துக் கொண்டு தூங்கினோம்!'' என்று முடித்தான் சந்திரன். சிறுபையன் சந்திரனுக்கு இவ்வளவு பொய் சொல்லத் தெரிகிறதே என்று எல்லாருக்கும் ஆச்சரியம்! அடுத்தது கௌரி சொல்லத் தொடங்கினாள்.

''ஓடுகிற பல்லியை நீங்கள் பிடிக்க வேண்டும். அதற்கு ஒரு ஆமையின் முதுகில் உட்கார்ந்து கொண்டு கூரையில் பறந்து ஏறவேண்டும். பிடித்த பின் கையைக் காற்றில் துடைத்துக்கொள்ள வேண்டும். அப்போது உங்கள் கால்

''அதற்குப் பெயர் படிக்காரம்! பார்க்கக் கற்கண்டைப் போல் இருக்கும். ஆனால் ருசி இனிப்பாக இருக்காது. பொய்யும் அதுபோலத்தான்! பார்க்க உண்மையைப் போலவே இருக்கும். ஆனால் அதற்கு உண்மையினால் விளையும் நன்மை கிடைக்காது. உண்மையை எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் மனத்தில் வைத்துக் கொள்ளலாம். பொய்யை ஜீரணிக்கவே முடியாது. வெகு சீக்கிரம் அதை—நீங்கள் துப்பிவிட்டு வந்ததைப்போல—வெளியிட்டே ஆக வேண்டும்! இப்போது தெரிகிறதா? ஏன் உங்கள் அம்மா பொய் சொல்லக் கூடாது என்று சொன்னாள். என்பதைப் புரிந்து கொண்டீர்களா?'', என்று கேட்டார் தாத்தா. பிறகு உள்ளே போய் மூன்று கற்கண்டுக் கட்டிகளைக் கொண்டு வந்து மூவருக்கும் கொடுத்தார்.

● ●

# 26

கிருபால் என்ற குடியானவனுக்கு நிலத்தில்வேலை இல்லாதபோது விறகு வெட்டுவதுதான் தொழில். இப்போது காஸ் அடுப்பு, மின்சார அடுப்பு எல்லாம் வந்துவிட்டது. விறகு இருந்தால்தான் சமையல் செய்ய முடியும் என்று இருந்த காலம் அது. விறகு வெட்டியே ஒருவன் சௌகரியமாக ஜீவனம் செய்ய முடியும்.

கிருபால் போதுமான அளவு சம்பாதித்துக் கொண்டு வந்து கொடுத்தான். ஆனால் அவனுடைய மனைவி ப்ரீதி அவ்வளவு கெட்டிக்காரி அல்ல. வீட்டில் எந்தப் பகுதியும் சுத்தமாக இராது. அவள் சரியாக உடை அணிந்துகொள்ள மாட்டாள். சமையலறையில்கூட எல்லாம் சிந்திக் கிடக்

தலைமயிரில்படும். தலையில் நிறையக் கூந்தல் வளரும். ஆனால் நீங்கள் பிடிப்பது பெண் பல்லியாக இருக்கவேண்டும். ஆண்பல்லியாக இருந்தால் தலை வழுக்கையாகிவிடும்!'' என்றான் கௌரி. தாத்தா வாய்விட்டு உரக்கச் சிரித்தார்.

ஏனென்றால் அவருக்குத் தலை வழுக்கை!

தாத்தா கட்டிலிலிருந்து இறங்கி உள்ளேபோய் பெட்டியைத் திறந்து எதையோ எடுத்துக்கொண்டு வந்தார். குழந்தைகளிடம் அதைக் காட்டினார். மூன்று பெரிய கற்கண்டுக் கட்டிகள்

''நீங்கள் மூவருமே நன்றாகப் பொய் சொன்னீர்கள் அதுவும் சந்திரன் சொன்னது மிகப் பெரிய பொய். அதனால் அவனுக்கு பெரியது!'' என்று சொல்லி மூன்று கட்டிகளையும் மூவரிடமும் கொடுத்தார். பிறகு ''இப்போது இன்னொரு போட்டி. வாயில் அடக்கி வைத்துக்கொண்டு மிகுந்த நேரம் யார் சாப்பிடுகிறீர்களோ, அவர்களுக்கு நான் ஒரு பொம்மை பரிசாகக் கொடுப்பேன்!'' என்றார் தாத்தா.

மூன்று குழந்தைகளும் வாயில் போட்டுக் கொண்டார்கள். அவர்களுடைய முகம் கோணிக் கொண்டது. கன்னம் சுளித்தது. இரண்டு நிமிடங்களுக்கு மேல் அவர்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. வேகமாக ஓடிப்போய் துப்பிவிட்டுத் திரும்பினார்கள்.

''தாத்தா! தாத்தா! எங்களை ஏமாற்றி விட்டீர்களே? நீங்கள் கொடுத்தது கற்கண்டு இல்லை. அது வேறு ஏதோ ஒன்று! கடுமையாகப் புளிக்கிறதே?'' என்று கேட்டார்கள்.

''நான் கற்கண்டு என்று சொல்லவில்லையே! நீங்களாக ஏன் அப்படி நினைத்துக் கொண்டீர்கள்?'' என்று கேட்டார் தாத்தா.

''பின்னே அது என்ன?'' என்று மூவரும் கேட்டார்கள்.

''அதற்குப் பெயர் படிக்காரம்! பார்க்கக் கற்கண்டைப் போல் இருக்கும். ஆனால் ருசி இனிப்பாக இருக்காது. பொய்யும் அதுபோலத்தான்! பார்க்க உண்மையைப் போலவே இருக்கும். ஆனால் அதற்கு உண்மையினால் விளையும் நன்மை கிடைக்காது. உண்மையை எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் மனத்தில் வைத்துக் கொள்ளலாம். பொய்யை ஜீரணிக்கவே முடியாது. வெகு சீக்கிரம் அதை—நீங்கள் துப்பிவிட்டு வந்ததைப்போல—வெளியிட்டே ஆக வேண்டும்! இப்போது தெரிகிறதா? ஏன் உங்கள் அம்மா பொய் சொல்லக் கூடாது என்று சொன்னாள். என்பதைப் புரிந்து கொண்டீர்களா?'', என்று கேட்டார் தாத்தா. பிறகு உள்ளே போய் மூன்று கற்கண்டுக் கட்டிகளைக் கொண்டு வந்து மூவருக்கும் கொடுத்தார்.



# 26

கிருபால் என்ற குடியானவனுக்கு நிலத்தில்வேலை இல்லாதபோது விறகு வெட்டுவதுதான் தொழில். இப்போது காஸ் அடுப்பு, மின்சார அடுப்பு எல்லாம் வந்துவிட்டது. விறகு இருந்தால்தான் சமையல் செய்ய முடியும் என்று இருந்த காலம் அது. விறகு வெட்டியே ஒருவன் சௌகரியமாக ஜீவனம் செய்ய முடியும்.

கிருபால் போதுமான அளவு சம்பாதித்துக் கொண்டு வந்து கொடுத்தான். ஆனால் அவனுடைய மனைவி ப்ரீதி அவ்வளவு கெட்டிக்காரி அல்ல. வீட்டில் எந்தப் பகுதியும் சுத்தமாக இராது. அவள் சரியாக உடை அணிந்துகொள்ள மாட்டாள். சமையலறையில்கூட எல்லாம் சிந்திக் கிடக்

கும். யாராவது கேட்டால் ''எங்களை யார் பார்க்கிறார்கள்? எப்படியோ இருந்துவிட்டுப் போகிறோம்!'' என்று அவள் சமாதானம் சொல்லிவிடுவாள். கிருபால் எவ்வளவோ முயன்று பார்த்தான். அவனுடைய மனைவியைத் திருத்த முடியவில்லை.

அன்று அவன் காட்டுக்குப் போனான். விறகு வெட்டி முடித்த பிறகு ஆற்றில் நன்றாக அமிழ்ந்து குளித்தான். அப் போது அவன் கையில் ஏதோ தட்டுப் பட்டது. அதைத் துழாவி எடுத்தான். அது ஒரு தங்க மோதிரம்! ஆசையு டன் அதை விரலில் போட்டுக் கொண்டு தடவிக் கொடுத் தான். உடனே அவனுக்கு முன்னால் ஓர் ஒளி உருவம் தோன்றிற்று. அதிலிருந்து ஒரு தேவதை வெளியே வந் தது.

''உனக்கு எது வேண்டுமோ கேள்! உன் ஆசை நிறை வேறும்'' என்றது தேவதை. அவனுக்குப் பேச்சே வர வில்லை! என்ன கேட்பது என்றும் தெரியவில்லை. வாழ்க் கையில் அவன் ஆசைப்பட்ட பலவிஷயங்கள் ஞாபகத்துக்கு வந்தன. எதை முதலில் கேட்பது என்று தெரியாமல் விழித் தான். கடைசியில் ''இன்று இரவு என் மனைவியையும் கேட்டுவிட்டு வருகிறேன். நான் எதற்காக ஆசைப்படுகி றேனோ அதைக் கொடுங்கள்!'' என்றான்.

''உன் ஆசை எதுவானாலும் அதை எங்கிருந்தும் எப் போதும் நீ கேட்கலாம். அதற்காக நீ இங்கே மறுபடி வர வேண்டியதில்லை!'' என்றது தேவதை. சொல்லிவிட்டு மறைந்து போய்விட்டது.

கிருபால் நேரே வீட்டுக்கு ஓடினான். மனைவியிடம் விஷ யத்தைச் சொன்னான். அவளுக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. இருவரும் உட்கார்ந்து என்னென்னவோ திட்டம் போட்டார்கள். சாப்பிடும்போதும் படுக்கப் போகும்போதும் இதே யோசனைதான். கடைசியில் காலை யில் எழுந்து பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டு தூங்கி விட்டார்கள்.

கிருபால் நடுநிசியில் விழித்துக்கொண்டான். அவனுக்கு அந்த யோசனை வந்துவிட்டது. அவனால் தூங்க முடியவில்லை. படுக்கையில் படுத்தபடி புரண்டு கொண்டிருந்தான். பிறகு எழுந்திருந்து ஏதாவது வேலை செய்யலாம் என்று எண்ணினான். வெட்டிக்கொண்டு வந்த மரத்தைச் செதுக்க நினைத்து சிற்றுளியைத் தேடினான். அது கிடைக்கவில்லை. எங்கேயோ அது மறைந்து கொண்டிருந்தது. 'எங்கே இருக்கிறது என்று தெரியவில்லையே? இந்த வீடே ஒரு கண்ணாடி வீடாக இருந்தால் எப்படி இருக்கும்? எதையும் உடனே கண்டுபிடித்து விடலாமே?' என்று எண்ணிக் கொண்டே தூங்கிப்போய் விட்டான்.

காலையில் அவர்கள் கண் விழித்தபோது ஒரே பிரகாசமாக இருந்தது. மேலே ஆகாயமும், மரங்களும் தெரிந்தன. வெளியே பக்கத்தில் உள்ள மக்கள் வந்து சூழ்ந்து நின்றுகொண்டு வேடிக்கைப் பார்ப்பது தெரிந்தது. சூரிய வெளிச்சம் உள்ளே புகுந்து கொண்டிருந்தது. ப்ரீதிக்கு ரொம்ப வெட்கமாகப் போயிற்று. அவசர அவசரமாகப் படுக்கையிலிருந்து எழுந்து உடைகளைச் சரிசெய்து கொண்டாள். உள்ளே போய் தன்னைச் சரிப்படுத்திக் கொள்ள முயன்றாள். ஆனால் மறைவிடம் எதுவும் இல்லை!

கிருபால் இரவு தான் எண்ணியதை மீண்டும் நினைத்துப் பார்த்தான். வாய்விட்டு உரக்கச் சிரித்தான். தேவதையின் அருள் கிடைத்துவிட்டது. அவன் விரும்பியதை தேவதை கொடுத்துவிட்டது. கைவிரலைப் பார்த்தான். மோதிரம் மாயமாக மறைந்துவிட்டது! சிரித்துக் கொண்டே காலை உணவை முடித்துக்கொண்டு விறகு வெட்டப்போய் விட்டான்.

தேவதை மறுபடியும் தோன்றி "உனக்குத் திருப்திதானே?" என்று கேட்டது. "அம்மா தேவதே! என்னுடைய பழைய வீட்டையும் எளிய வாழ்க்கையையும் மீண்டும் கொடு. அதுவே எனக்குப் போதும்." என்றான் கிரு

தலைமயிரில்படும். தலையில் நிறையக் கூந்தல் வளரும், ஆனால் நீங்கள் பிடிப்பது பெண் பல்லியாக இருக்கவேண்டும். ஆண்பல்லியாக இருந்தால் தலை வழுக்கையாகிவிடும்!'' என்றாள் கௌரி. தாத்தா வாய்விட்டு உரக்கச் சிரித்தார்.

ஏனென்றால் அவருக்குத் தலை வழுக்கை!

தாததா கட்டிலிலிருந்து இறங்கி உள்ளேபோய் பெட்டியைத் திறந்து எதையோ எடுத்துக்கொண்டு வந்தார். குழந்தைகளிடம் அதைக் காட்டினார். மூன்று பெரிய கற்கண்டுக் கட்டிகள்

''நீங்கள் மூவருமே நன்றாகப் பொய் சொன்னீர்கள் அதுவும் சந்திரன் சொன்னது மிகப் பெரிய பொய். அதனால் அவனுக்கு பெரியது!'' என்று சொல்லி மூன்று கட்டிகளையும் மூவரிடமும் கொடுத்தார். பிறகு ''இப்போது இன்னொரு போட்டி. வாயில் அடக்கி வைத்துக்கொண்டு மிகுந்த நேரம் யார் சாப்பிடுகிறீர்களோ, அவர்களுக்கு நான் ஒரு பொம்மை பரிசாகக் கொடுப்பேன்!'' என்றார் தாத்தா.

மூன்று குழந்தைகளும் வாயில் போட்டுக் கொண்டார்கள். அவர்களுடைய முகம் கோணிக் கொண்டது. கன்னம் சுளித்தது. இரண்டு நிமிடங்களுக்கு மேல் அவர்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. வேகமாக ஓடிப்போய் துப்பிவிட்டுத் திரும்பினார்கள்.

''தாத்தா! தாத்தா! எங்களை ஏமாற்றி விட்டீர்களே? நீங்கள் கொடுத்தது கற்கண்டு இல்லை. அது வேறு ஏதோ ஒன்று! கடுமையாகப் புளிக்கிறதே?'' என்று கேட்டார்கள்.

''நான் கற்கண்டு என்று சொல்லவில்லையே! நீங்களாக ஏன் அப்படி நினைத்துக் கொண்டீர்கள்?'' என்று கேட்டார் தாத்தா.

''பின்னே அது என்ன?'' என்று மூவரும் கேட்டார்கள்.

''அதற்குப் பெயர் படிக்காரம்! பார்க்கக் கற்கண்டைப் போல் இருக்கும். ஆனால் ருசி இனிப்பாக இருக்காது. பொய்யும் அதுபோலத்தான்! பார்க்க உண்மையைப் போலவே இருக்கும். ஆனால் அதற்கு உண்மையினால் விளையும் நன்மை கிடைக்காது. உண்மையை எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் மனத்தில் வைத்துக் கொள்ளலாம். பொய்யை ஜீரணிக்கவே முடியாது. வெகு சீக்கிரம் அதை—நீங்கள் துப்பிவிட்டு வந்ததைப்போல—வெளியிட்டே ஆக வேண்டும்! இப்போது தெரிகிறதா? ஏன் உங்கள் அம்மா பொய் சொல்லக் கூடாது என்று சொன்னாள். என்பதைப் புரிந்து கொண்டீர்களா?'' என்று கேட்டார் தாத்தா. பிறகு உள்ளே போய் மூன்று கற்கண்டுக் கட்டிகளைக் கொண்டு வந்து மூவருக்கும் கொடுத்தார்.



## 26

கிருபால் என்ற குடியானவனுக்கு நிலத்தில்வேலை இல்லாதபோது விறகு வெட்டுவதுதான் தொழில். இப்போது காஸ் அடுப்பு, மின்சார அடுப்பு எல்லாம் வந்துவிட்டது. விறகு இருந்தால்தான் சமையல் செய்ய முடியும் என்று இருந்த காலம் அது. விறகு வெட்டியே ஒருவன் சௌகரியமாக ஜீவனம் செய்ய முடியும்.

கிருபால் போதுமான அளவு சம்பாதித்துக் கொண்டு வந்து கொடுத்தான். ஆனால் அவனுடைய மனைவி ப்ரீதி அவ்வளவு கெட்டிக்காரி அல்ல. வீட்டில் எந்தப் பகுதியும் சுத்தமாக இராது. அவள் சரியாக உடை அணிந்துகொள்ள மாட்டாள். சமையலறையில்கூட எல்லாம் சிந்திக் கிடக்

கும். யாராவது கேட்டால் ''எங்களை யார் பார்க்கிறுர்கள்? எப்படியோ இருந்துவிட்டுப் போகிறோம்!'' என்று அவள் சமாதானம் சொல்லிவிடுவாள். கிருபால் எவ்வளவோ முயன்று பார்த்தான். அவனுடைய மனைவியைத் திருத்த முடியவில்லை.

அன்று அவன் காட்டுக்குப் போனுன். விறகு வெட்டி முடித்த பிறகு ஆற்றில் நன்ருக அமிழ்ந்து குளித்தான். அப் போது அவன் கையில் ஏதோ தட்டுப் பட்டது. அதைத் துழாவி எடுத்தான். அது ஒரு தங்க மோதிரம்! ஆசையு டன் அதை விரலில் போட்டுக் கொண்டு தடவிக் கொடுத் தான். உடனே அவனுக்கு முன்னுல் ஓர் ஒளி உருவம் தோன்றிற்று. அதிலிருந்து ஒரு தேவதை வெளியே வந் தது.

''உனக்கு எது வேண்டுமோ கேள்! உன் ஆசை நிறை வேறும்'' என்றது தேவதை. அவனுக்குப் பேச்சே வர வில்லை! என்ன கேட்பது என்றும் தெரியவில்லை. வாழ்க் கையில் அவன் ஆசைப்பட்ட பலவிஷயங்கள் ஞாபகத்துக்கு வந்தன. எதை முதலில் கேட்பது என்று தெரியாமல் விழித் தான். கடைசியில் ''இன்று இரவு என் மனைவியையும் கேட்டுவிட்டு வருகிறேன். நான் எதற்காக ஆசைப்படுகி றேனே அதைக் கொடுங்கள்!'' என்ருன்.

''உன் ஆசை எதுவானுலும் அதை எங்கிருந்தும் எப் போதும் நீ கேட்கலாம். அதற்காக நீ இங்கே மறுபடி வர வேண்டியதில்லை!'' என்றது தேவதை. சொல்லிவிட்டு மறைந்து போய்விட்டது.

கிருபால் நேரே வீட்டுக்கு ஓடினுன். மனைவியிடம் விஷ யத்தைச் சொன்னுன். அவளுக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. இருவரும் உட்கார்ந்து என்னென்னவோ திட்டம் போட்டார்கள். சாப்பிடும்போதும் படுக்கப் போகும்போதும் இதே யோசனைதான். கடைசியில் காலை யில் எழுந்து பார்த்துக் கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டு தூங்கி விட்டார்கள்.

கிருபால் நடுநிசியில் விழித்துக்கொண்டான். அவனுக்கு அந்த யோசனை வந்துவிட்டது. அவனால் தூங்க முடியவில்லை. படுக்கையில் படுத்தபடி புரண்டு கொண்டிருந்தான். பிறகு எழுந்திருந்து ஏதாவது வேலை செய்யலாம் என்று எண்ணினான். வெட்டிக்கொண்டு வந்த மரத்தைச் செதுக்க நினைத்து சிற்றுளியைத் தேடினான். அது கிடைக்கவில்லை. எங்கேயோ அது மறைந்து கொண்டிருந்தது. 'எங்கே இருக்கிறது என்று தெரியவில்லையே? இந்த வீடே ஒரு கண்ணாடி வீடாக இருந்தால் எப்படி இருக்கும்? எதையும் உடனே கண்டுபிடித்து விடலாமே?' என்று எண்ணிக் கொண்டே தூங்கிப்போய் விட்டான்.

காலையில் அவர்கள் கண் விழித்தபோது ஒரே பிரகாசமாக இருந்தது. மேலே ஆகாயமும், மரங்களும் தெரிந்தன. வெளியே பக்கத்தில் உள்ள மக்கள் வந்து சூழ்ந்து நின்றுகொண்டு வேடிக்கைப் பார்ப்பது தெரிந்தது. சூரிய வெளிச்சம் உள்ளே புகுந்து கொண்டிருந்தது. ப்ரீதிக்கு ரொம்ப வெட்கமாகப் போயிற்று. அவசர அவசரமாகப் படுக்கையிலிருந்து எழுந்து உடைகளைச் சரிசெய்து கொண்டாள். உள்ளே போய் தன்னைச் சரிப்படுத்திக் கொள்ள முயன்றாள். ஆனால் மறைவிடம் எதுவும் இல்லை!

கிருபால் இரவு தான் எண்ணியதை மீண்டும் நினைத்துப் பார்த்தான். வாய்விட்டு உரக்கச் சிரித்தான். தேவதையின் அருள் கிடைத்துவிட்டது. அவன் விரும்பியதை தேவதை கொடுத்துவிட்டது. கைவிரலைப் பார்த்தான். மோதிரம் மாயமாக மறைந்துவிட்டது! சிரித்துக்கொண்டே காலை உணவை முடித்துக்கொண்டு விறகு வெட்டப்போய் விட்டான்.

தேவதை மறுபடியும் தோன்றி "உனக்குத் திருப்திதானே?" என்று கேட்டது. "அம்மா தேவதே! என்னுடைய பழைய வீட்டையும் எளிய வாழ்க்கையையும் மீண்டும் கொடு. அதுவே எனக்குப் போதும்." என்றான் கிரு

பால். ''அப்படியே ஆகட்டும்!'' என்று சொல்லிவிட்டு தேவதை மறைந்து விட்டது. மாலையில் அவன் வீட்டுக்கு வந்தபோது அவனுடைய வீடு முன்போல ஆகி இருந்தது. உள்ளே போய்ப் பார்த்தான். எல்லாம் நறுவிசாக அடுக்கப் பட்டிருந்தன. வீடு வெகு சுத்தமாக இருந்தது! அவன் மனைவிக்கு நல்ல புத்தி வந்துவிட்டது.

''ஜாக்கிரதை! வீட்டை இப்படியே வைத்துக்கொள். இல்லாவிட்டால் மறுபடியும் கண்ணாடி வீடாக மாறிவிடும். அப்புறம் உன்னால் சமாளிக்க முடியாது'' என்று சொல்லிச் சிரித்தான் கிருபால். மனைவியைப் பாராட்டி அன்புடன் அணைத்துக்கொண்டான்.

நாம் எல்லாரும் வாழ்க்கையில் தவறு செய்கிறோம். ஆனால் அதைப் பொருட்படுத்துவதில்லை. 'யாருக்குத் தெரியும்?' என்று எண்ணி மறைத்துக் கொள்கிறோம். ஆனால் நம்முடைய வாழ்க்கையும் கண்ணாடி வீடாக மாற முடியும். நம்முடைய பலவீனங்கள் அப்போது வெட்ட வெளிச்சமாகி விடும். வெட்கப்பட்டு திருந்த வேண்டி இருக்கும்! அப்படி ஒரு அவசியம் இல்லாமலே நம்முடைய மனத்தையும் வாழ்க்கையையும் சுத்தமாக வைத்துக் கொள்ள முயலுவோம்.

● ●

## 27

இராமர் பதினான்கு ஆண்டுகள் காட்டுக்குப் போன போது இலட்சுமணன் அவருக்குத் துணையாக இருந்து அவரை இரவு பகலாகக் காவல் காப்பது என்று விரதம்

எடுத்துக் கொண்டான். அதேபோலக் காட்டில் அவர் களுடைய பர்ணசாலைக்கு வெளியில் நின்று அவன் காவல் காப்பது வழக்கம். இரவு முழுவதும் தூங்கவே மாட்டான். ஒவ்வொரு நாளும் அவன் இப்படிச் செய்தது நித்திரா தேவிக்கு வேடிக்கையாக இருந்தது.

ஒரு நாள் இரவு அவள் இலட்சுமணன் முன் பிரசன்ன மானாள். அவளுடைய அழகிய தோற்றத்தில் லட்சுமணன் மனம் கலங்கவில்லை. ''இரவு நேரத்தில் என்னை வந்தடை யாத மனிதர்களே இல்லை. நீ மட்டும் ஒதுங்குகிறாயே?'' என்று கேட்டாள் நித்திராதேவி. ''நீ யார்? ஏன் இப்படிப் பேசி என்னை வசீகரிக்க முயலுகிறாய்? உனக்கு என்ன வேண்டும்!'' என்று கேட்டான் இலட்சுமணன்.

''நான் தான் நித்திராதேவி. காட்டுக்கு வந்ததிலிருந்து நீ இரவில் தூங்குவதையே விட்டு விட்டாய்! ஒரு நாளா வது உன்னைத் தூங்க வைத்து விட வேண்டும் என்று நான் பார்க்கிறேன். முடியவே இல்லை. இன்று ஒரு நாள் மட்டும் நீ எனக்காகக் கண்ணயரக் கூடாதா''? என்று கேட்டாள் நித்திரா தேவி.

''தேவி! நான் இராமரை இந்தப் பதினான்கு ஆண்டு களும் காவல் புரிந்து காப்பாற்றுவது என்ற விரதத்துடன் வந்திருக்கிறேன். என்னை மன்னியுங்கள். இராமர் வன வாசம் முடிந்து நாடு திரும்பி அரச பீடத்தில் அமரட்டும். நீங்கள் என்னை வந்தடையலாம். அது வரை பொறுத்திருங் கள்'' என்று இலட்சுமணன் கேட்டுக் கொண்டான். நித்திரா தேவியும் அவனுக்குத் தூங்காவரத்தை அளித்துவிட்டுத் திரும்பிப் போய் விட்டாள்.

பதினான்கு ஆண்டுகள் வனவாசம் முடிந்தது. இராவ ணனைக் கொன்று விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்துவிட்டு இராமர் அயோத்தியாபுரிக்கு திரும்பி விட் டார். வசிஷ்டர் குறித்துக கொடுத்த நாளின்படி பட்டா

பிஷேகம் ஏற்பாடாயிற்று. அரச சபை கூடிற்று. இலட்சக் கணக்கான மக்கள்கூடி மகிழ்ந்தார்கள். மங்களவாத்தியங் முழங்க இராமர் சீதாதேவியுடன் அரியாசனத்தில் அமர்ந் தார்.

சபையின் முன் வரிசையில் இலட்சுமணன் உட்கார்ந் திருந்தான். அவனுக்குத் தூக்கம் கண்ணை மறைக்கத் தொடங்கிற்று. 'என்ன இது? இந்த நேரத்துக்காகப் பதினன்கு ஆண்டுகள் காத்திருந்தேனே? என்ன ஆயிற்று? ஏன் என்னால் கண்களை விழித்துப் பார்க்க முடியவில்லை?' என்று திகைத்தான் லட்சுமணன். அவன் காதருகே ஓர் இரகசியக் குரல் கேட்டது. "நான் தான் நித்திராதேவி! இலட்சுமணு, நான் கொடுத்த வரத்தை வாங்கிக் கொண்டு போக வந்திருக்கிறேன்!" என்று கூறினுள் நித்திராதேவி. "நான் உன்னை அதிக நேரம் தொந்தரவு செய்யவில்லை. எனக்காக ஐந்து நிமிடங்கள் தூங்கு போதும்! உன்னை விட்டு நான் ஓடிவிடுகிறேன்" என்று கூறிச் சிரிக்கத்தொடங் கினுள். அதைக் கேட்டு இலட்சுமணனும் வாய்விட்டுச் சிரிக்கத் தொடங்கினுன். தூக்கத்தில் அவன் அப்படிச்செய்த தால், தான் என்ன செய்கிருேம் என்பதை அவனுல் உணர முடியவில்லை.

இலட்சுமணன் சிரித்ததும் நிசப்தமாக எல்லாரும் கவனித்துக் கொண்டிருந்த பெரிய சபையில் சலசலப்பு ஏற் பட்டது. அதன் காரணம் புரியாமல் எல்லாரும் அவன் அமர்ந்திருந்த திசையையே திரும்பிப் பார்த்தார்கள். ஆனுல் அவனுக்கு ஏதும் புரியவில்லை. அவன் நித்திராதேவியின் அணைப்பில் அல்லவா இருந்தான்!

இராமர் அந்தச் சிரிப்பைக் கவனித்தார். ஓ! இலட்சு மணன் நம்மைப் பார்த்துத்தான் சிரிக்கிருன் போலிருக்கிறது. இராவணன் கவர்ந்து சென்ற தேவியை நான் அரியாசனத் தில் அமர்த்தியது அவனுக்குக் கேலியாக இருக்கிறது போலும்!' என்று எண்ணிக் கொண்டார்.

சீதா தேவியும் அதைக் கவனித்தாள். 'கவர்ந்து செல்லப்பட்டு, இராவணனின் சிறையில் இருந்த நான், நாடாளும் ஆசை கொண்டு திரும்பி வருவது நியாயம் இல்லைதான்; என் பேராசையைக் கண்டுதான் இலட்சுமணன் சிரிக்கிறான்' என்று நினைத்தாள்.

இலட்சுமணன் சிரிப்பதைப் பார்த்த கைகேயியோ 'அன்று நான் இராமனைக் காட்டுக்கு அனுப்பி பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவைக்க முயன்றேன். அது நடைபெறவில்லை. பதினான்கு ஆண்டுகளும் தன் மரவுரி தரித்தே பாதுகையைப் பூஜை செய்து வந்தான். இன்று இராமன் அரியாசனம் அமருகிறான். என் தோல்வியைக் கண்டுதான் இலட்சுமணன் சிரிக்கிறான்' என்று சிந்தனையில் ஆழ்ந்தாள்.

முன்புறம் அமர்ந்திருந்த வசிஷ்டர் 'அன்று நான்தான் பட்டாபிஷேகத்துக்கு முகூர்த்தம் குறித்துக் கொடுத்தேன். அது நடக்கவில்லை! மறுபடி இன்று நான் முகூர்த்தம்குறித்து நடத்தி வைக்க வந்திருக்கிறேன். என் நைப்பாசையைக் கண்டுதான் இலட்சுமணன் சிரிக்கிறான்' என்று தலையைக் குனிந்து கொண்டார்.

அருகிலிருந்த மந்திரி 'இராமர் வனவாசம் போய்ச் சிரமப்பட்டபோது உதவ நானோ மக்களோ போகவில்லை. இன்று பட்டாபிஷேகம் என்றதும் கூடி மகிழவும் விருந்து சாப்பிடவும் வந்து விட்டோம். இதைத்தான் இலட்சுமணன் பரிகாசம் செய்கிறான்' என்று எண்ணிக் கொண்டார்.

சபை முழுவதும் ஓய்ந்து விட்டது. இதைக் கண்ட இராமருக்குக் கோபம் உண்டாயிற்று. எழுந்து வந்து இலட்சுமணனை உலுக்கி ''என்ன ஆயிற்று இலட்சுமணா? காரணத்தைச் சொல்லு! ஏன், சிரிக்கிறாய்!'' என்று கேட்டார். ஐந்து நிமிடங்கள் கழிந்து விட்டன. நித்திராதேவி ஓடி விட்டாள். இலட்சுமணன் கண் விழித்து நடந்ததைச்

சொல்லி மன்னிப்பு கேட்டுக் கொண்டான். அவர் காலில் விழுந்து வணங்கினான்.

இராமருக்கும் வருத்தம் உண்டாயிற்று. "தம்பீ இலட்சுமணா! உன்னை விடப் பெரிய தியாகி யார்? நீ பட்ட சிரமத்தினால் அல்லவா இன்று நான் சௌக்கியமாக இருக்கிறேன்? தவறாக எண்ணி விட்டேன். பொறுமை இழந்ததற்கு என்னை மன்னித்துவிடு." என்று கூறிவிட்டு இலட்சுமணனையும் கூட அழைத்துக் கொண்டு போய் அரியாசனத்தில் அமர்ந்தார்.

அறிஞர்களும் பெரியவர்களும் நிறைந்த அந்த சபையிலும் கூட இலட்சுமணனின் சிரிப்பு கலக்கத்தை ஏற்படுத்தி விட்டது. ஒவ்வொருவரும் ஒரு அர்த்தத்தைக் கற்பித்துக் கொண்டார்கள். ஸ்ரீராமச்சந்திரனும் வசிஷ்டரும் கூட இதற்கு விலக்கில்லை. உலகத்தை நாமும் அப்படித்தான் பார்க்கிறோம். எது நேர்ந்தாலும் அதில் நாம் செய்த தவறின் பிம்பத்தையே பார்க்கிறோம். நம்முடைய குற்றங்கள் உண்டாக்கும் மனக்கலக்கத்திலிருந்து நாம் விடுபட முடிவதில்லை. பாரபட்சமற்ற நிலையில் வாழ்பவன் மட்டுமே உலகத்தின் சூழலில் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பிக்கிறான்.

● ●

# 28

ரொம்ப நாளைக்கு முன்பு தமிழ் நாட்டை ஒட்டிய பகுதிகள் பெரிய காடாக இருந்து வந்தன. அங்கே வாதாபி, இல்வலா என்ற இரு சகோதரர்கள் வசித்து வந்தார்கள்.

அவர்கள் இருவரும் காட்டின் வழியாக நடந்து செல்லும் மனிதர்களைக் கொன்று தின்று வந்தார்கள்.

அவர்கள் கொலை செய்வதே ஒரு விநோதமாக இருக்கும். இல்வலா ஒரு பிராமணனைப் போல வேடம் தரித்துக் காட்டின் வழியே செல்லும் யாத்திரீகனை அணுகுவான். ''எங்கள் வீட்டுக்கு வரவேண்டும். உணவு உட்கொண்டு பசியாற வேண்டும்!'' என்று பணிவுடன் அழைப்பான். அவர்களும் தடையின்றி ஒப்புக் கொள்வார்கள். அந்த நாளில் காட்டுவழியில் உணவு கிடைப்பதே மிகவும் சிரமம். அதனால் யாராவது சாப்பிட அழைத்தால் உடனே ஒப்புக் கொண்டு விடுவார்கள். வீட்டுக்கு அவர்கள் வந்து சேர்ந்ததும், அவர்களை நீராடச் சொல்லிவிட்டு இல்வலா, வாதாபியையே கொன்று அவனை உணவாகச் சமைத்துவிடுவான். யாத்திரீகன் அந்த உணவைச் சாப்பிட்டு முடிந்ததும் ''வாதாபி! வெளியே வா!'' என்று இல்வலா அழைப்பான். அவனும் வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து விடுவான். அப்படி உயிர் பெற்றுவர வாதாபிக்கு ஒருவரம் இருந்தது.

அப்படி இறந்து போன மனிதனின் மாமிசத்தை உணவாகச் சமைத்து வாதாபி, இல்வலா இருவரும் சாப்பிடுவது வழக்கம். இப்படித் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கவே, இவர்கள் செய்யும் அக்கிரமத்தைப் பற்றிய இரகசியம் வெளியே பரவிட்டது, காட்டில் இருந்த முனிவர்கள் இதற்கு ஒரு விமோசனம் வேண்டும் என்று எண்ணி அகத்திய முனிவரிடம் போய் வணங்கினர்கள். அகத்தியர் பெரிய முனிவர். கடலையும் மலையையும்கூட அவரால் அடக்கி ஆளமுடியும். அகத்தியர், அவர்கள் சொன்னதையெல்லாம் கேட்டுக் கொண்டார். புன்னகையுடன் ''ஹரி ஓம்— ஹரி ஓம்'' என்று சொல்லிக் கொண்டார்.

விந்தியமலையின் உயரம் வளர்ந்து கொண்டே வந்தது. அதனால் அதை அடக்கி நிறுத்த வேண்டிய அவசியம் ஏற்

பட்டது. தென்னிந்தியப் பகுதியில் சமபாரம் கிடைக்க வேண்டும் என்று சிவபெருமான் அகத்தியரை விந்தியமலைப் பகுதிக்குப் போகுபடிக் கேட்டுக்கொண்டார். அப்படியே விந்தியமலையை அடக்கும் பொறுப்பை அகத்தியரிடம் சிவபெருமான் ஒப்புவித்தார்.

அகத்தியர் வட இந்தியாவிலிருந்து நடந்து வந்தார். விந்தியமலை அடி பணிந்து படுத்து அவருக்கு வழி விட்டது. அகத்தியர் அதன் மேல் ஏறி நடந்தார். அப்படிச் செல்லும் போது "நான் மீண்டும் திரும்பி வரும்வரை இப்படியே இரும்!" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். முனிவரின் சாபத்துக்குப் பயந்து விந்தியமலை நிமிரவே இல்லை. அகத்தியர் அப்புறம் திரும்பவே இல்லை. விந்தியமலை—அப்படியே அடங்கிப் படுத்துவிட்டது.

அகத்தியர் காட்டுவழியே வந்து கொண்டிருந்தார். முனிவர்கள் ஓடி வந்து மீண்டும் தமது கோரிக்கையை அவர்களிடம் தெரிவித்தார்கள். "நான் பார்த்துக் கொள்கிறேன். பயப்படாதீர்கள்!" என்று சொல்லி அனுப்பினார். அகத்தியர் காட்டுவழியில் பாதிதூரம் வந்ததும், இல்வலா அவர் எதிரே ஓர் அந்தணன் உருவில் தோன்றினான். "எங்கள் வீட்டுக்கு வந்து உணவு உட்கொண்டு ஆசிர்வதிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். அகத்தியரும் ஒப்புக்கொண்டு அவன் வீட்டுக்கு வந்தார்.

"மகா முனிவரே! நீராடிவிட்டுப் பூஜை செய்து கொண்டிருங்கள். அதற்குள். நான் சமையலை முடிக்கிறேன்" என்றான் இல்வலா. "அப்படியே ஆகட்டும்" என்று சிரித்தபடியே சொல்லிவிட்டு ஆற்றுக்கு நீராடப் போனார் அகத்திய முனிவர். வழக்கம் போல இல்வலா வாதாபியைக் கொன்று உணவாகச் சமைத்து முடித்தான். அகத்தியர் நடுப்பகல் நேரத்துக்குப் பசியுடன் வந்துசேர்ந்தார். அவரை அமரச் செய்து விதம் விதமான உணவைப் பரிமாறினான் இல்வலா.

அகத்தியருக்கு அது என்ன என்பது தெரியும். நிதான மாகவே அவ்வளவையும் சாப்பிட்டு முடித்தார். சாப்பிட்டு முடிந்ததும் ''நான் சிரமபரிகாரம் செய்து கொள்கிறேன்'' என்று சொல்லிவிட்டு வாசல் திண்ணையில் போய் அமர்ந்து கொண்டார். கையை வயிற்றின் மேல் வைத்துத் தடவிய படியே ''ஹரி ஓம்— ஹரி ஓம்— வாதாபி ஜீரணமா கட்டும்!'' என்று சொல்லிவிட்டார் அகத்தியர். உள்ளே இருந்த இல்வலாவின் காதில் இது விழவில்லை.

வேலையை முடித்துக் கொண்டு வாசலுக்குவந்தான் இல்வலா. தேஜஸுடன் இருந்த முனிவரைப் பார்த்து அவன் நாவில் நீர் ஊறியது. அன்று நல்ல விருந்து கிடைக் கும் என்று எண்ணிக் கொண்டான். முனிவரின் காலில் விழுந்துவணங்கி எழுந்து ''வாதாபி! ஓ வாதாபி! வெளியே வா'' என்று கூவினன். ஏதும் நடைபெறவில்லை. அகத்தி யர் சாந்தமாக அவனைப் பார்த்து ''உனக்கு எந்த வாதாபி வேண்டும். உன் தம்பி வாதாபி ஏற்கனவே என் வயிற் றில் ஜீரணமாகிவிட்டானே!'' என்று சொன்னர்.

இல்வலா விஷயத்தைப் புரிந்து கொண்டான். அந்த மகாமுனிவர் சாபம் கொடுத்தால் தானும் எரிந்து சாம் பலாகி விடுவோம் என்று உணர்ந்து கொண்டான். அவர் காலில் விழுந்து ''என்னை மன்னிக்க வேண்டும். நான் செய்த தெல்லாம் தவறு'' என்று கூறிக்கெஞ்சினன். நான் உன்னை மன்னிக்கிறேன், ஆனல் நீ, இனி இது போலச் செய்யவே கூடாது. திருந்தியவனக வாழவேண்டும். இந்தக் காட்டிலி ருந்து ஓடிவிட வேண்டும்'' என்று கூறினர்.

''அப்படியே செய்கிறேன். இனியாரையும் கொல்ல மாட்டேன்'' என்று கூறி மன்னிப்புக் கேட்டுக் கொண்டு இல்வலா அந்தக் காட்டை விட்டு ஓடி விட்டான்.

'இல்வலா' என்ற சொல்லுக்கு 'நல்ல பண்புகள் இல் லாதவன்— சஞ்சலமான மனம் கொண்டவன்' என்பது பொருள். 'வாதாபி' என்ற செல்லுக்கு 'உயிரைக் குடிப்

பவன்' என்று பொருள். வாழ்க்கையில் நாம் நம்மை உணராமல் வழிதவறிக் காட்டில் செல்லும் போது, சஞ்சலமான மனம் நம்மை நன்மையின் அழிவுக்கான வழிக்கு அழைத்துச் செல்லுகிறது. அதில் கிடைக்கும் இன்பங்கள் சுவையாக இருந்தாலும், கடசியில் அந்த இன்பமே நம்மை நல்வழிப் பட முடியாமல் அழித்து விடுகிறது. அகத்தியரைப்போன்ற ஞானிகள் இப்படி ஏமாறுவதில்லை. தங்கள் ஞானிசக்தியால் சஞ்சலமடையும் மனத்தை அடக்கி, தங்களை அழிக்க முற்படும் சக்தியையே ஜீரணம் செய்து விடுகிறார்கள். அவர்களை மயக்கி அடக்க வந்த மாயையும் இருந்த இடம் தெரியாமல் ஓடிப் போய் விடுகிறது!



## 29

ஒரு நல்ல அரசன் ஏழைகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டும். அப்படி அக்கறை கொண்ட ஓர் அரசன். ஒரு சமயம் நெசவாளிகள் தறிபோட்டு நெய்து கொண்டிருந்த இடத்துக்குப் போனான். அங்கே ஒரு கிழநெசவாளி தறியில் நெய்து கொண்டிருந்தான். அவன் அருகில் ஓர் அழகான பெண் அமர்ந்து நூலைச் சுற்றிக் கொண்டிருந்தாள். அரசன் கிழவனைப் பார்த்து "இந்தப் பெண் யார்?" என்று கேட்டான். தகப்பனுக்குப் பெருமை பிடிபடவில்லை, "இவள் தான் என் மகள் ராமப்பியாரி. அவள் வேகமாக நூல் திரிக்கக் கூடியவள் வைக்கோலை எடுத்து அவள் திரித்தாலும்கூட அவை பவுன் இழைகளாக வெளிவரும்!" என்று பதில் சொன்னான்.

''அப்படியா? அழகும் சாமர்த்தியமும் உள்ள இந்தப் பெண் என்னோடு வரட்டும். அவளை என் மருமகளாக ஆக்கிக் கொள்ள விரும்புகிறேன்'' என்றான் அரசன். கிழவனுக்கு ஒன்றும் புரியவில்லை. ஏதோ சொல்லப்போகத் தன் மகளை இப்படி அனுப்பிவிடும்படி ஆயிற்றே என்று மிகுந்த கவலையுடன் அவளை வழியனுப்பி வந்தான். பெற்றோரை வணங்கி விட்டு அந்தப் பெண் ஸ்ரீராமனைத் தியானம் செய்தபடியே புறப்பட்டாள்.

அரண்மனையை அடைந்ததும் அரசன் அந்தப் பெண்ணை ஓர் அறையில் வைத்துப் பூட்டிவிட்டான் அந்த அறையில் நிறைய வைக்கோல் அடைக்கப்பட்டது. மூன்று ராட்டை களும் வைக்கப்பட்டிருந்தன. ''நாளைக் காலைக்குள் நீ இவற்றைத் தங்க இழைகளாக நூற்றுக் காட்ட வேண்டும். நாளைக் காலை நான் வந்து இந்த அறையைத் திறந்து பார்ப்பேன். உன் தகப்பன் சொன்னபடி நடக்கா விட்டால் நீ உயிர் தப்ப முடியாது!'' என்று ஆணையிட்டுவிட்டு அரசன் போய்விட்டான்.

அவள் பகல் முழுவதும் அழுது கொண்டிருந்தாள். வைக்கோலை எப்படி தங்க இழைகளாக மாற்றுவது? தன் தந்தை வீண் பெருமையால் கூறிய பொய்யை எண்ணி மிகவும் வருந்தினாள். ஸ்ரீராமனை எண்ணி அவன் அருளே துணை என்று நம்பிப்பிரார்த்தனை செய்து கொண்டிருந்தாள் இரவு முழுவதும் பிரார்த்தனையிலேயே கழிந்தது. எதுவுமே நடைபெறவில்லை. வைக்கோல் மூட்டைகள் அப்படியே இருந்தன. 'சரி காலையில் அரசன் வந்து பார்ப்பான். பொய் சொன்னது தெரிந்ததும் என்னைச் சிரச்சேதம் செய்ய உத்தர விட்டு விடுவான். இனி உயிர் தப்ப வழியில்லை' என்று எண்ணிக்கொண்டு. அந்த முடிவுக்குத் தயாரானாள் ராமப்பியாரி.

விடியற்காலை நேரம். அந்த அறைக்கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டது, ராமப்பியாரி பயந்து கொண்டே

எழுந்து கதவைத் திறந்தாள். வெளியே வந்திருப்பது ராணுவ வீரனாகத்தான் இருக்கும் என்று அவள் எண்ணினாள். ஆனால் வெளியே நின்றதோ மூன்று அவலட்சணமானப் பெண்கள். அவர்கள் ஒருத்திக்குக் கால் அகலமாக இருந்தது. இன்னொருத்திக்குக் கட்டை விரல் பெரிதாக இருந்தது. மூன்றாவது பெண்ணுக்கு உதடு தடித்துத் தொங்கிக் கொண்டிருந்தது!

''யார் நீங்கள்? என்ன வேண்டும்?'' என்று கேட்டாள் ராமப்பியாரி. ''நாங்கள் உன்னைக் காப்பாற்ற வந்திருக்கிறோம். பொழுது நன்றாக விடிவதற்குள் இந்த வைக்கோலை நூற்றுத் தங்க இழைகளாக மாற்றிவிடுகிறோம்'' என்றார்கள். ராமப்பியாரி அவர்களை உள்ளே நுழைய அனுமதித்தாள். அவர்கள் உள்ளே அமர்ந்து அவ்வளவு வைக்கோலையும் தங்க இழைகளாக நூற்று வைத்துவிட்டுப் போய்விட்டார்கள்! காலையில் அரசன், இளவரசனுடன் வந்து சேர்ந்தான். அவனால் தன் கண்களை நம்பவே முடியவில்லை. மருமகளின் சாமர்த்தியத்தை எண்ணி ஆச்சரியப்பட்டுப் போனான். ஆயினும் அவளை மீண்டும் சோதிக்க விரும்பினான் அறையை மீண்டும் வைக்கோலால் நிறைத்து வைக்கச் சொன்னான். ''நாளைக் காலைக்குள் இவற்றைத் தங்க இழைகளாக நூற்று வைத்துவிடு. நாளை மறுநாள் உனக்கும் இளவரசனுக்கும் கல்யாணம்!'' என்று சொல்லிவிட்டான். இளவரசன் அந்த அழகியைப் பார்த்தான். 'எவ்வளவு அழகான பெண்! இவள் தங்க இழைகளை நூற்காவிட்டாலும் பரவாயில்லை. இவளுடைய இளமைக்கும் அழகுக்குமே இவளைக் கட்டாயம் மணந்து கொள்வேன்' என்று இளவரசன் தீர்மானித்துக் கொண்டான்.

மீண்டும் இரவு வந்தது தொடர்ந்து ஸ்ரீராமனைத் தியானம் செய்து கொண்டிருந்தாள் அந்தப் பெண். மறுபடி அந்த மூன்று பெண்களும் வந்தார்கள். வைக்கோல் பொன்னிழைகளாக மாறிற்று. கடமையை முடித்துக் கொண்டு அவர்கள் புறப்பட்டார்கள். ராமப்பியாரி அவர்

கள் காலில் விழுந்து வணங்கினாள். "என் உயிரைக் காப்பாற்றினீர்கள். எனக்கு வளமான வாழ்வு கொடுத்திருக்கிறீர்கள் எனக்கு உங்களிடம் திருப்பிக் கொடுக்க எதுவுமே இல்லையே?" என்று மனம் உருகிச் சொன்னாள்.

"பயப்படாதே. நீ விரும்பினால் எங்களுக்கு ஓர் உதவி செய்யலாம். உன் திருமணத்துக்கு நாங்கள் மூவரும் வருகிறோம். நீ எங்களை வரவேற்று அரசருக்கும், இளவரசருக்கும் உன் பெரியப்பாவின் பெண்கள் என்று சொல்லி அறிமுகம் செய்து வை! நாங்கள் விருந்து சாப்பிட்டுவிட்டுப் போகிறோம்!" என்று அவர்கள் சொன்னார்கள். ராமப்பியாரி தயங்காமல் ஒப்புக் கொண்டாள்.

மறுநாட் காலை அரசன் வந்தான். அவளுடைய திறமையை மெச்சினான். கொடுத்த வாக்குப்படி அவளை மருமகளாக ஏற்கத் துணிந்து, திருமணத்துக்கும் ஏற்பாடு செய்து விட்டான். திருமணம் பிரமாதமாக நடந்தது பல தேசத்து அரசர்களும், அரசிகளும் வந்திருந்தார்கள் பிரமாதமாகவே வரவேற்பு நடந்து கொண்டிருந்தபோது அந்த மூன்று பெண்களும் அங்கே வந்து சேர்ந்தார்கள். அரசனுக்கு அவர்களைப் பார்க்கவே அருவருப்பாக இருந்தது. இவர்கள் யார்...?" என்று ராமப்பியாரியிடம் கேட்டான். கொடுத்த வாக்குபடி அவளும், இவர்கள் என் பெரியப்பாவுக்குப் பிறந்தவர்கள். என் சகோதரிகள்!" என்று அறிமுகப் படுத்தினாள். அவ்வளவு அவலட்சணமான பெண்கள் அவளுடைய சகோதரிகளாக இருக்கமுடியும் என்று அவனால் நம்பவே முடியவில்லை! "காலும், உதடும், கட்டைவிரலும் ஏன் இவ்வாறு அவலட்சணமாக ஆகிவிட்டன?" என்று அவர்களைக் கேட்டான். "என்ன செய்வது? ஓயாமல் வைக்கோலை நூற்று ஒருத்தியின் கட்டைவிரலும் நூலை நாக்கில் தொட்டுத்திரித்து இன்னொருத்தியின் உதடும், காலால் கட்டையை அழுத்தித் தறிபோட்டு மூன்றுமவளின் காலும் இப்படி உருமாறிவிட்டன. ராமப்

பியாரி இந்த மூன்றையுமே செய்யத் தெரிந்தவள். அவள் எப்படி ஆகப் போகிருளோ...?'' என்று அவர்கள் சொன்னுர்கள்.

அரசனுக்கு ஒரே கவலையாகப் போய் விட்டது. இன்றையிலிருந்து ''நீ அரசாளப் பிறந்தவனின் மனைவி. தப்பித் தவறி நீருற்பு வேலைக்குப் போகக்கூடாது'' என்று உத்தரவு போட்டுவிட்டான். அவளை இக்கட்டிலிருந்து தப்பித்த மகிழ்ச்சியுடன் அந்த மூன்று பெண்களும் திரும்பிப் போய் விட்டார்கள்.

தன்னலம் மறந்து சுயலாபத்தைத் தியாகம் செய்வது வைக்கோலிலிருந்து தங்க இழையை நூற்பது போலாகும். தொடர்ந்த தியானமும் கூறிய அறிவும் இருந்தால், அவலட்சணமான மானுட ஆசைகளும்கூட இறைவனை அடையவே உதவுகின்றன. அப்படி ஒரு ஞானமும், சித்தியும் கிட்டிய பிறகு, மானுட ஆசைகளுக்கு இடமில்லாமல் போய் விடுகிறது. பரப்பிரும்மத்துடன் ஒன்றிய திருமணமும், அதன் பிறகு கவலைகளே இல்லாத இடமும் கிடைத்துவிடுகின்றன.

● ●

## 30

தேவதத்தன் என்ற பக்தன் தீவிரமாக நாராயணு பூஜை செய்பவன். அவனிடம் பக்தி என்ற செல்வம் அளவு கடந்து இருந்தாலும், வாழ்வதற்குத் தேவையான செல்வம் இருக்கவில்லை. அதனால் அவனுடைய குடும்பம் வறுமையால் வாடிக்கொண்டிருந்தது. அவன் தினந்தோறும்

விஷ்ணு சகஸ்ரநாமம் சொல்லிஅர்ச்சனை 'செய்வது வழக்கம் அவன் மனைவிக்கு அவன் மீது ரொம்ப கோபம். அதனால், அவளும் தினமும் அவனிடம் தம் குறைகளை முறையிட்டு ஒரு சகஸ்ரநாம அர்ச்சனை செய்வது வழக்கம்.

தினமும் இதைக் கேட்டுவிட்டுக் கங்கை நதியில் நீராடப் போவான். தேவத்தன். அங்கே நதியில் நீராடிப் பிறகு விஷ்ணு சகஸ்ரநாமம் சொல்லுவான். விஷ்ணுவின் பிம்பம் செய்து, வீட்டிலிருந்து கொண்டுவந்த சந்தனத்தை அதன் மீதுத் தடவி பூஜை செய்வான். அன்று கோபம் தாங்க மாட்டாமல் தேவத்தனின் மனைவி சுமித்திரா சந்தனத்தை எடுத்து ஒளித்து வைத்துவிட்டாள். எங்கு தேடியும் அது கிடைக்கவில்லை. அதனால் அடுப்பிலிருந்த கரியின் சாம்பலை மடியில் கட்டிக் கொண்டு, தேவத்தன் கங்கை நதிக்கரைக்கு வந்து சேர்ந்தான்.

கங்கையில் நீராடிவிட்டு, விஷ்ணுவின் சகஸ்ரநாமத்தைச் சொல்லியபடி பிம்பத்தைச் செய்து வைத்தான். பிறகு அதன் முகத்தில் தான் கொண்டு வந்திருந்த கரியைப் பூசினான். பூஜை செய்ய ஆரம்பித்தான்.

வைகுண்டத்தில் நாராயணனுடன் அமர்ந்து லஷ்மி தேவி பேசிக் கொண்டிருந்தாள். திடீரென்று விழுந்து, விழுந்து சிரிக்கத் தொடங்கினாள். நாராயணனுக்கு அதன் காரணம் புரியவில்லை." தேவி! எதற்காக இப்படிச் சிரிக்கிறாய்?" என்று கேட்டார்.

"சுவாமி! தாங்களோ நீலமேகசியாமள வண்ணன் அதுவே தங்களுக்கு ஓர் அழகும் ஆகும். இன்று அது போதாது என்று கரியையும் அள்ளி முகத்தில் பூசிக் கொண்டீர்களோ. ஏன் தங்கள் முகம் இப்படிக் கறுத்து விட்டது!" என்று கூறி ஒரு தாம்பளத்தில் நீரை நிறைத்து பகவானிடம் காட்டினாள். அதில் தனது முகத்தைப் பார்த்த நாராயணன் யோசனையில் ஆழ்ந்தார்.

''என்ன யோசிக்கிறீர்கள்? யார் செய்த வேலை இது?'' என்று கேட்டாள் லஷ்மிதேவி.

''என்னுடைய பக்தன் செய்த வேலைதான். அவனுக்கு என்னிடம் பக்தி அதிகம். தினந்தோறும் சந்தனத்தைப் பூசி என்னை மகிழ்விப்பான். ஏழையான அவனுக்கு இன்று கரிப்பொடிதான் கிடைத்தது. அதையே பூசிவிட்டான். ஆனால், பக்தியுடன் செய்த பணிவிடை அல்லவா? அதுவும் என்னை வந்து அடைந்துவிட்டது!'' என்றார்.

''சுவாமி! இப்படிப்பட்ட பக்தனை நீங்கள் துன்பப்பட விடலாமா? உடனே போய் அவனுக்குச் செல்வத்தை அளித்துக் காப்பாற்றுங்கள்'' என்றுவேண்டிக் கொண்டாள் லஷ்மிதேவி!

''வேண்டாம் தேவி! நான் செல்வத்தைக் கொடுத்தால் உடனே அவன் உன்னைப்பூஜிக்க ஆரம்பித்துவிடுவான். செல்வம் கிடைத்தவர்கள் நாராயணனைப் பூஜிப்பதில்லை. செல்வத்துக்குரிய தேவதையான லஷ்மியைத்தான் பூஜிக்கிறார்கள்'' என்று சொன்னார் பகவான். தேவி அவரை விடவில்லை. வற்புறுத்திப் பூலோகத்துக்கு அனுப்பி வைத்தாள்.

தேவதத்தன் வீட்டுவாசலில் நூற்றுக் கணக்கான பசுக்களை ஓட்டிக் கொண்டு வந்தான் ஒரு இடையன். அவனுடைய முகம். கண்கள் கரேல் என்று இருந்தன. கையில் ஒரு புல்லாங்குழலை ஏந்தி அதை ஊதியபடி வந்தான் அந்த இடையன்.

''நீ யார்? எதற்கு இங்கே வந்தாய்? உனக்குப் பிச்சைபோடக்கூட என்னிடம் ஒன்றும் இல்லை.'' என்று கோபத்துடன் கூறினாள் சுமித்ரா.

''அம்மா என் பெயர் கேசவன். நான் கங்கை நதிக் கரையிலிருந்து வருகிறேன். அங்கே உன் கணவர் தேவதத்

தனைப் பார்த்தேன். அவரிடம் நான் ஒரு பந்தயம் கட்டித் தோற்றுவிட்டேன். அதனால் தோற்றதுக்கு ஈடாக இந்தப் பசுக்களை இங்கே விட்டுச் செல்லுகிறேன். அவர் வந்தால் கேசவன் என்ற இடையன் இந்தப் பசுக்களை அனுப்பி வைத்ததாகச் சொல்லி விடுங்கள்!'' என்று சொன்னான் அவன்.

''கொஞ்சநேரம் இருந்து நீயே அவரிடம் சொல்லி விட்டுப் போகலாமே'' என்றாள் சுமித்ரா.

''அம்மா! எனக்கு அதற்கு நேரமில்லை. நீங்களே சொல்லி விடுங்கள். முடிந்தால் மறு உதவியாக நீங்கள் எனக்கு ஒன்று செய்யலாம்'' என்று இழுத்தாற்போலச் சொன்னான் கேசவன்.

''சொல்லு! என்ன உதவியானாலும் செய்கிறேன். நீ இவ்வளவு பெரிய செல்வத்தைக் கொடுத்திருக்கிறாய்?'' என்று பூரிப்புடன் சொன்னாள் சுமித்ரா.

''உங்கள் கணவர் என் முகத்தில் பூசிய கரியை நீக்கி விட்டு மறுபடி சந்தனம் பூசவேண்டும் என்று கேட்டுக் கொண்டதாகச் சொல்லுங்கள். இதுவே கேசவனின் வேண்டுகோள்!'' என்று கூறிவிட்டு அவன் போய்விட்டான்.

மாலை நேரம். உஞ்சவிருத்தி பஜனை செய்து அரிசியுடன் வீடு திரும்பினான் தேவதத்தன். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. வீட்டில் செல்வம் களைத்ததும்பி நின்றது. அவனுடைய மனைவியும் குழந்தைகளும் புத்தாடை அணிந்திருந்தனர். வீட்டைச் சுற்றி நூற்றுக் கணக்கான பசுக்கள் கூடிநின்றன.

'என்ன இதெல்லாம்? எப்படி இவை வந்தன?'' என்று கேட்டான் தேவதத்தன். மனைவி நடந்ததைச் சொன்னாள். கடைசியாக ''ஏன் அவனுடைய முகத்தில் சந்தனத்துக்குப் பதிலாகக் கரியைப் பூசினீர்கள்? உங்களுக்குச் சரிவர

நடந்து கொள்ளவே தெரியவில்லையே?" என்று கடிந்து கொண்டாள்.

தேவதத்தனுக்கு உண்மை புரிந்தது. அப்படியே தெருவில் "நாராயணா! நாராயணா...!" என்று கத்தியப்படி ஓடத் தொடங்கினான். தெருக்கள் மறைந்தன. ஊர் பின் தங்கிவிட்டது. கானகம் வந்து விட்டது. தேவதத்தன் ஓடிக் கொண்டே இருந்தான். கடைசியில் களைப்பு மேலிட்டுக் கீழே விழுந்து விட்டான்.

அவன் மூர்ச்சை தெளிந்து எழுந்த போது, அந்தக் கானகத்தில் இருட்டில் ஜோதிவெள்ளமாய் ஒளி பெருகிற்று. பகவான் நாராயணன் அவனுக்குத் தரிசனம் கொடுத்தார். தேவதத்தனின் கண்களில் நீர் பெருகிற்று.

"சுவாமி! நான் செய்த அபசாரத்துக்கு என்னை மன்னிக்கவேண்டும் கரிபூசியவன் இல்லத்துக்கு எழுந்தருளி ஐசுவரியத்தைக் கொடுத்தீர்களே? எவ்வளவு பெரிய பாக்கியம். ஆயினும் ஒரு சிறு சந்தேகம். உங்களைத் தினமும் சகஸ்ரநாம அர்ச்சனை சொல்லிப் பூஜிக்கும் ஏழைக்கு நீங்கள் தரிசனம் தரவில்லை. உங்களைத் தினமும் திட்டும் என் மனைவிக்கு முதலில் தரிசனம் கொடுத்தீர்களே...? அது எப்படி...?" என்று கேட்டான் தேவதத்தன்.

"உன் மனைவி என்னை நாடவில்லை. என்னுடைய அருளாகச் செல்வத்தைத்தான் நாடினாள். அதனால் அவளுக்கு நூற்றுக்கணக்கான பசுக்களை அளிக்கும் இடையனாகத்தான் தோன்றித் தரிசனம் கொடுத்தேன். நீயோ அந்தச் செல்வத்தை லட்சியம் செய்யவில்லை. என்னைத் தேடிக் கொண்டு தேசம் தெரியாமல் ஓடிவந்தாய். அதனால் உனக்கு மங்கள ரூபத்தில் தரிசனம் கொடுக்கிறேன். அவள் தினந்தோறும் என்னைத் திட்டுவாள். அது என்னைப் பாதிக்கவில்லை. ஆனால் பரம பக்தனை நீ ஒரு

நாள் என் முகத்தில் கரியைப் பூசிவிட்டாய், அதை என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அதனாலேயே ஓடி வந்தேன்!'' என்றார் பகவான்.

தேவதத்தன் அதன்பின் நெடுநாள் சௌக்கியமாக, பரமபக்தனாக வாழ்ந்து பெருமாளின் திருவடியை அடைந்தான்.

நாம் எதை நாடுகிறோமோ அதற்கேற்றபடிதான் பகவானின் அருளும் கிடைக்கிறது. அதனால் நம்முடைய ஆசைகள் நேர்மையானதாக இருக்க வேண்டும். கெட்டவர்கள் தவறு செய்யலாம். ஆனால், நல்லவர்கள் சிறிதளவு பிசகுவதையும் பகவான் விரும்புவதில்லை.

● ●

# 31

பண்டித திருபுவன் என்பவர் மிகச் சிறந்த அறிவாளி. ஜோதிட சாஸ்திரத்தில் அவர் மிகவும் கெட்டிக்காரர். சாதாரணமாக எல்லாரும் கைரேகையைப் பார்த்துத்தான் பலன் சொல்லுவார்கள். திருபுவன் மண்டை ஓட்டில் உள்ள லிபியைக் கூடப் படித்துப் பொருள் சொல்லி விடுவார்!

ஒருநாள் அவர் கடற்கரை ஓரமாக நடந்து போய்க் கொண்டிருந்தார். அலைகள் அவர் கால்களில் வந்து மோதின. அங்கே ஒரு மண்டை ஓடும் கிடைத்தது. திருபுவன் பிரமித்துப் போனார். ஆவலோடு அதை எடுத்துப்

பார்த்தார். மண்டை ஓட்டில் இருந்த லிபி அவருக்குப் புரிந்தது. ஆர்வத்துடன் அதைப் படிக்க ஆரம்பித்தார்.

'இவனுடைய வாழ்க்கை மிகவும் கடினமானதாக இருக்கும். பிறவியிலிருந்தே கடுமையான வறுமையினால் சிரமப்படுவான். பெரும் குற்றங்களைச் செய்து சிறை தண்டனை அனுபவிப்பான். கடைசியில் கடலில் மூழ்கி இறந்து போவான். அப்புறமும் ஏதாவது விளைவு ஏற்படும்!'

இவ்வாறு படித்ததும், திருபுவன் திகைத்துப் போனார். ஆயுட்காலத்தில் ஒருவனுடைய அனுபவங்களை அவர் புரிந்து கொண்டு கூறியதுண்டு. ஆனால், இறந்த பிறகு ஏற்படும் விளைவு என்ன? ஒருவன், தான் இறந்த பிறகும் எப்படி ஒரு விளைவுக்குக் காரணமாக இருக்க முடியும்? இருந்தாலும் ஜோதிடத்தில் நம்பிக்கை கொண்ட அவருக்கு அதை மறுக்க மனம் வரவில்லை.

சுற்று முற்றும் பார்த்தார். யாருமே இல்லை. குனிந்து அந்த மண்டை ஓட்டை எடுத்து மூட்டையில் கட்டிக் கொண்டார். நேரே வீட்டுக்குப் போய் விட்டார். அவருடைய வீடு ஆற்றங்கரையில் இருந்தது. வீட்டைச் சுற்றி ஓர் அழகானத் தோட்டம் இருந்தது. திருபுவன் அந்த மண்டை ஓட்டை இரகசியமாக ஒரு மரப்பொந்தில் மறைத்து வைத்துவிட்டு, ஆற்றில் நீராடி விட்டுத் திரும்பி விட்டார்.

சில நாட்கள் கடந்தன. திருபுவன் அந்த மண்டை ஓட்டு விவகாரத்தை மறந்து விட்டார். ஒரு நாள் அவர் வேலை விஷயமாக வெளியூர் போக வேண்டியதாயிற்று. அங்கே அவருக்கு அந்த ஞாபகம் ஓய்வு நேரத்தில் மனத்தில் தோன்றிற்று. 'விளைவு ஏற்படுவது இருக்கட்டும். அது பத்திரமாகவாவது இருக்குமா...?' என்று எண்ணினார்.

ஊருக்குத் திரும்பியதும் முதற்காரியமாக அதைப் பார்த்து விடுவது என்று முடிவு செய்து கொண்டார்.

விடியற்காலை நேரத்திலேயே எழுந்து தோட்டத்துக்குப் போனார். சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே போனார் அந்த மரத்தடிக்குப் போய் பொந்தில் கை விட்டுப் பார்த்தார். அங்கே அந்த மண்டை ஓடு பத்திரமாக இருந்தது. ஒரு பெரு மூச்சு விட்டு, அதை அங்கேயே வைத்துவிட்டு ஆற்றில் நீராடி விட்டுத் திரும்பிவிட்டார். கண் விழித்துக் கொண்ட அவருடைய மனைவி இதையெல்லாம் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவர் என்ன செய்கிறார் என்று அவளுக்குப் புரியவில்லை. மறுபடியும் அவர் அப்படிச் செய்யும் போது கூர்ந்து கவனிப்பது என்று தீர்மானித்துக் கொண்டாள்.

இரண்டு மாதங்கள் கடந்தன. மறுபடி திருபுவன் ஊருக்குப் போக வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஒரு வாரம் அவர் ஊரில் இருக்கமாட்டார். அதனால் மனைவியை ஜாக்கிரதையாக இருக்கும்படி சொல்லி விட்டுப் போனார். போகுமுன் அவருக்கு அந்த மண்டை ஓட்டைப் பற்றிய நினைவு வந்தது. மனைவி மூட்டைக் கட்டிக் கொண்டிருக்கும் போது, இரகசியமாகத் தோட்டத்துக்குப் போய் மரப் பொந்தில் கையை விட்டுப் பார்த்தார். அது பத்திரமாக இருந்தது. நிம்மதியுடன் திரும்பி வந்து மூட்டையை எடுத்துக் கொண்டு புறப்பட்டார். எல்லாவற்றையும் அவருடைய மனைவி கவனித்துக் கொண்டிருந்தாள். அவர் ஊருக்குப் போனதும் விடியற்காலையிலேயே அவளும் தோட்டத்துக்குப் புறப்பட்டாள்.

சாலை முழுவதும் ஒவ்வொரு மரமாகச் சோதனைப் போட்டாள். கடைசியில் ஒரு மரத்தின் பொந்தில் அந்த மண்டை ஓடு இருப்பது அவளுக்குத் தெரிந்தது. அது எப்படி அங்கே வந்தது? அவர் ஏன் அதைப் பத்திரமாக வைத்துக் கொண்டு பார்க்கிறார்? ஏன் அவளுக்குத் தெரியா

மல் இரகசியமாகப் பார்க்கிறார்! அந்த மண்டை ஓட்டை அவள் வீட்டுக்கு எடுத்து வந்தாள். அதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

கடைசியில் அவள் அதை ஒருவிதமாக ஊகித்துக் கொண்டாள். 'அவருக்கு ஒரு காதலி இருந்திருக்கிறாள். அவளுடன் அவர் உறவு வைத்துக் கொண்டிருந்திருக்கிறார். ஒருநாள் அவள் இறந்துவிட்டாள். பிறகு அவளுடைய மண்டை ஓட்டை அவர் பத்திரமாகக் கொண்டு வந்து வைத்திருக்கிறார். தினமும் அவளுடைய ஞாபகமாக அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்'—இவ்வாறு முடிவு செய்ததும் அவளுக்குப் பொறாமையினால் உடல் படபடத்தது. ஆத்திரத்துடன் அந்த மண்டை ஓட்டைப் பெரிய பாறாங்கல்லில் வைத்து உடைத்து நொறுக்கிப் பொடி செய்து விட்டாள். அந்தப் பொடியை சிறு மூட்டையாகக் கட்டி ஆற்றில் எறிந்து விட்டாள். பிறகு நீராடி விட்டு வீட்டுக்குத் திரும்பி வந்துவிட்டாள்.

ஊரிலிருந்து திருபுவன் திரும்பி வந்தார். வழக்கம் போல அவருக்கு அந்த மண்டை ஓட்டின் ஞாபகம் வந்தது. தோட்டத்துக்குப் போய் தேடிப் பார்த்தார். அங்கே அதைக் காணோம்! அவருக்கு மனக் குழப்பம் உண்டாயிற்று. மண்டை ஓட்டை யார் எடுத்துக் கொண்டு போக முடியும்? எதற்காக...? அவருக்கு ஒன்றும் புரியவில்லை.

அன்று இரவு தூங்காமல் படுக்கையில் அமர்ந்து அதைப் பற்றியே யோசனை செய்து கொண்டிருந்தார். அவளுடைய மனைவி மெதுவாக அவரிடம் வந்து உட்கார்ந்து கொண்டாள். ''நீங்கள் என்ன யோசிக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும்!'' என்றாள். அவருக்கு வியப்பு உண்டாயிற்று. ''நீ என்ன சொல்லுகிறாய்...?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

அவருடைய மனைவி நடந்ததைச் சொன்னாள். ''நான் உங்களுக்கு எல்லா சுகமும் அளிக்கவில்லையா? எதற்காக

எனக்குத் துரோகம் செய்தீர்கள்...? யார் அந்தப் பெண்...? அதையாவது எனக்குச் சொல்லுங்கள். இல்லாவிட்டால் ஆற்றில் விழுந்து உயிரை விட்டு விடுவேன்!'' என்று கண்ணீர் விடத் தொடங்கினாள்.

திருபுவன் சிரிக்க ஆரம்பித்தார். மனைவிக்குப் பதில் சொல்லக்கூடத் தோன்றவில்லை. 'மண்டை ஓட்டில் எழுதி இருந்தது உண்மைதான். ஏதாவது ஒரு விளைவு ஏற்படும் என்று எழுதியிருந்ததும் மெய்தான். எவ்வளவோ படித்தத் தன்னைப் போன்ற ஒருவர் இப்படி புத்திகெட்டுப்போய் அந்த மண்டை ஓட்டை, வீட்டுக்குக் கொண்டு வந்ததும், அப்புறம் அதைப்பற்றிக் கவலைப்பட்டதும் எவ்வளவு மதியீனமான செயல்? அப்படி ஒரு விளைவுக்கு அவரே காரணமாகி விட்டாரே? குடும்பத்தில் ஒரு சிறுகலகமே விளைந்து விட்டதே?'

''நீங்கள் எனக்குப் பதில் கூறவில்லை. நான் எண்ணியது உண்மைதான். இனி நான் உயிர் வாழ்ந்து பயனில்லை!'' என்று கூறி அழ ஆரம்பித்தாள், அவருடைய மனைவி. திருபுவன் அவளுக்கு ஆறுதல் கூறித் தேற்றினார். பிறகு நடந்தது முழுவதையும் அவளுக்கு எடுத்துச் சொன்னார். அவளும் சமாதானம் அடைந்தாள்.

''மண்டை ஓடு ஒரு ஆணுடையதா, பெண்ணுடையதா என்று உனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டார் திருபுவன்.

''பொறாமை என் கண்களை மறைத்து விட்டது. அதனால் நான் ஆழ்ந்து சிந்திக்கக்கூட இல்லை'' என்று கூறி விட்டுத் தலையைக் குனிந்து கொண்டாள் அவருடைய மனைவி.

உபயோகமில்லாத பொருள்களும், அற்பமான இன்பங்களும்கூட நம்மை எப்படியோ கவர்ந்து இழுத்துக் கொள்கின்றன. அவற்றில் நம்மையறியாமல் ஈடுபட்டு வரும் போது, அனாவசியமான கவலைகளை நாமே விலைக்கு வாங்கிக் கொண்டுவிடுகிறோம்.

● ●

# 32

இமாலயத்தின் முடியில் ஒரு ராட்சதன் அமர்ந்து கடுந்தவம் செய்து கொண்டிருந்தான். சிவபெருமானின் பக்தனான அவன் பல ஆண்டுகளாக அப்படி உணவும் உறக்கமும் இல்லாமல் தவம் செய்து கொண்டிருந்தான். மனத்தை சிவபெருமானின் மீது அசையாமல் செலுத்தித் தவம் செய்து கொண்டிருந்த அந்த ராட்சதனின் பெயர் பஸ்மாசுரன்.

ஒரு நாள் சிவபெருமான் அவன் முன்பு திரிசூலமும் கையுமாக, ஜோதி மயமாகத் தோன்றினார். அவருடைய செஞ்சடையையும் புலித்தோல் உடையையும் திருநீறணிந்த மேனியையும் பார்த்துக் கண்கள் கூச எழுந்து நின்று வணங்கினான் பஸ்மாசுரன். 'சிவ—சிவ' என்ற நாமத்தைத் தவிர வேறு எதையும் அவனால் சொல்ல முடியவில்லை.

''உன்னுடைய தவம் எனக்கு அளவிலாத மகிழ்ச்சியைத் தருகிறது. உனக்கு எந்த வரம் வேண்டுமானாலும் கேள். நான் தருகிறேன்'' என்று சிவபெருமான் சொன்னார். ''நான் மிகப் பெரிய தபஸ்வியாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் நான் எதைக் கேட்டாலும் கொடுப்பதாகச் சிவபெருமான் சொல்லுவாரா?'' என்று எண்ணிக் கொண்டான் பஸ்மாசுரன். அந்தக் கணத்திலேயே அவனுடைய மனதில் பெருமை தோன்றிவிட்டது.

''நான் எதைத் தொட்டாலும் அது உடனே எரிந்து சாம்பலாகும்படி ஒரு வரம் தாங்கள் கொடுத்தருள வேண்டும்'' என்று கேட்டான் பஸ்மாசுரன்.

''அப்பா! இவ்வளவுதூரம் தவம் செய்த பிறகும் உன்னுடைய அசுர புத்தி மாறவில்லையே? சரி உன் விருப்பப் படியே வரம் கொடுக்கிறேன்!'' என்று சற்றும் யோசிக்காமல் சொல்லி விட்டார் சிவபெருமான்.

''சிவபெருமானே! தாங்கள் எனக்கு வரம் அருளி விட்டீர்கள். ஆனால் அது பலிக்கிறதா என்று நான் எப்படிச் சோதிப்பது...? இங்கே பனிபடர்ந்த மலைகள்தாம் இருக்கின் றன. சுற்றிலும் எந்த மனிதப் பிராணியும் இல்லை. நீங்கள் மறைந்து விட்டால் மறுபடி பலநூறு ஆண்டுகளுக்கு உங்களை நான் தரிசிக்கவே முடியாது. அதனால் தாங்கள் கொடுத்த வரத்தை இங்கேயே இப்போதே சோதனை செய்து பார்க்க விரும்புகிறேன். தங்களுடைய சிரத்தி லேயே நான் என்னுடைய கையை வைத்துப் பார்க்கப் போகிறேன்'' என்றான்.

சிவபெருமானை அழித்துவிட்டால் அப்புறம் தன்னை மிஞ்சுபவர்கள் யாரும் இருக்க முடியாது என்ற எண்ணம் அந்த ராட்சதனுக்கு தோன்றிவிட்டது. அவன் தனது தலையில் கையை வைத்து விட்டால் அப்புறம் தான் தப்பிக்க முடியாது என்ற கலக்கமும் சிவபெருமானுக்கு உண்டாகி விட்டது. அந்த இடத்திலிருந்து ஓடத் தொடங்கினார். மலையும், ஆறுகளும், காடுகளும் பின்னால் மறைய அவர் ஓடவும், பஸ்மாசுரனும் அதே வேகத்தில் பின் தொடர்ந்து வரத் தொடங்கினான்.

இந்த வேடிக்கையான காட்சியை வைகுந்தத்திலிருந்து நாராயணன் பார்த்துக் கொண்டிருந்தார். முன்பின் யோசி யாமல் ஒரு வரத்தைக் கொடுத்து விட்டுப் பிறகு அவனி டமே சிவபெருமான் சிக்கிக் கொண்டு அவதிப்படுவதைப் பார்த்தார். தான் குறுக்கிட்டால்தான் அவரைக் காப்பாற்ற முடியும் என்று எண்ணிப் பூமிக்கு இறங்கி வந்தார்.

சிவபெருமான் ஒரு மலையின் பின்புறம் மறைந்து கொள்ள, பஸ்மாசுரனுக்கு முன்பு அழகு மிகுந்த பெண்ணின்

வடிவமாக, மோகினியாகத் தோன்றினார் நாராயணன். ஓடிக் கொண்டிருந்த பஸ்மாசுரனின் பார்வை அந்தப் பெண்ணின் மீது விழுந்தது. கால்கள் ஓட மறுத்தன. அங்கேயே நின்று அவளைப் பார்வையாலேயே விழுங்கி விடுவதைப் போலப் பார்த்தான். அவன் மனத்தில் ஆசை பொங்கிற்று. பல ஆண்டுகளாகப் பெண்ணாசையையே மறந்து வாழ்ந்த அவனு டைய உள்ளத்தில் மோக அலைகள் பொங்கி எழுந்தன. மோகினியை அடைந்து அனுபவித்துவிட அவன் உடல் துடித்தது!

"பேரழகியே! உன் பெயர் என்ன? நான் உலகத்திலே யே மிகப்பெரிய ராட்சதன். என்னால் அழிக்க முடியாதது எதுவும் இல்லை. என்னை நீ மணம் செய்து கொள்ளு கிறாயா...?" என்று ஆவலோடு கேட்டான் பஸ்மாசுரன்.

மோகினி கலகலவென்று சிரித்தாள் "ஐயா! நீர் பார்க்க மிகவும் அழகாக இருக்கிறீர். பலசாலியாகவும் இருப்பீர் போலிருக்கிறது. உம்மை அடைய எனக்கும் ஆசைதான். ஆனால், என்னைப் போலப் பிற அழகிகளையும் உமது மனம் நாடலாம். அப்படியானால் என்னை மணந்து கொண்டு விட்டு, என்னை அடிமையாக்கி விட்டு, நீர் போய்விட்டால் நான் என்ன ஆவது...?" என்றாள் மோகினி.

"நான் ஒருக்காலும் அப்படிச் செய்ய மாட்டேன். என்னை நீ நம்பு. உன்னை மட்டுமே அடைய எனக்கு ஆசை. என் மீதே ஆணையிட்டுச் சொல்லுவேன்" என்றான் பஸ்மா சுரன்.

"உமது பேச்சை நான் நம்ப முடியாது. ஆணையிடுபவர் கள் தமது தலையில் கையை வைத்துச் சத்தியம் செய்ய வேண்டும். நீர் அப்படிச் செய்வீரா?" என்று கேட்டாள் மோகினி. பெண்பித்து கொண்ட அசுரன் சற்றும் யோசிக்க வில்லை. தன்னுடைய தலையின் மீதேகையைவைத்து சத்தியம்

செய்யத் தொடங்கினான். அவன் பேச்சை முடிக்கும் முன்னரே சாம்பலாகி அழிந்து போனான்!

பஸ்மாசுரன் தன்னைத் பின் தொடர்ந்து வரவில்லை என்பதை அறிந்து கொண்ட சிவபெருமான் திரும்பிவந்து அந்தக் காட்சியைப் பார்த்தார். நாராயணன் தன்னைக் காப்பாற்றியதையும் புரிந்து கொண்டார். மோகினி வடிவத்தில் இருந்த நாராயணன் புன்னகை செய்தபடி மறைந்து போனார். சிவபெருமான் தன்னைக் காப்பாற்றிய நாராயணனைப் போற்றியபடி மறைந்து விட்டார்.

இது எல்லாருக்கும் தெரிந்திருக்கக் கூடிய கதைதான். ஆனால், இதில் ஒரு தத்துவம் இருக்கிறது. மனிதனுக்கு இருக்கக் கூடிய பகுத்தறிவு ஒவ்வொன்றையும் பார்த்துத் தெரிந்து கொண்டு அறிய விரும்புகிறது. தான் அப்படிப் பிரித்துப் பார்த்துப் பகுத்து அறியாத ஒன்றை மனிதன் நம்புவதில்லை. இப்படிப் பகுத்தறியும் முயற்சியே பஸ்மாசுரன்.

தன்னை இயக்கும் பிரும்மத்தையே 'கடவுள் எங்கே...?'' என்று கேட்டுச் சோதித்துப் பார்க்க அந்தப் பகுத்தறிவு முயலுகிறது. ஆனால் இப்படிச் செய்யும் மானுட முயற்சியே பரம் பொருள் கைக்கெட்டாமல் மறைவதற்கும் வழியாகி விடுகிறது.

''நான் யார்...?'' என்று கேட்டபடி தன்னுள்ளேயே அந்தச் சோதனையைத் திருப்பி, தன்னையே ஆராய முயன்றால் மனிதனின் உள்ளத்தில்இருக்கும் மாயை மறைந்து போகும். அகந்தையும் அகன்றுவிடும். பரப்பிரும்மத்தைத் தன்னிடமே உணரும் ஞானம் பிறக்கும்.

இதை எடுத்துச் சொல்லுவது தான் பஸ்மாசுரனின் கதை...

● ●

# 33

இமயமலையின் பனிப்படர்ந்த சிகரங்களின் அடியில், அமைதியான காடுகள் சூழ்ந்த பகுதியில்பெரும் முனிவர்கள் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அழகிய சிறு குடில்களில் எளிமையான வாழ்க்கை நடத்தி வந்தார்கள். மலர்கள், காய்கறி, பழங்கள், தேன் இவற்றையே எளிய உணவாகக் கொண்டு எந்தக் குழப்பமும் இல்லாமல் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் யாரும் தனக்கென்று எதையும் தேடிக்கொண்டதில்லை. பிறருக்காகவே வாழ்ந்து ஞான மார்க்கத்தைக் காட்டிக் கொண்டிருந்தார்கள்.

அப்படி ஓர் ஆசிரமத்தில்இருந்தவர் மகாத்மா சிவோகம். அவர் தன்னுடைய சீடர்களுக்கு அநுபவ பாடமாகத்தான் அறிவுரை வழங்குவது வழக்கம். ஒருமுறை அப்படி ஒரு பாடத்தை அவர் அநுபவ மார்க்கமாக அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்தார். அதை அப்புறம் அவர்களால் மறக்கவே முடியவில்லை.

அன்று அவர்களுக்கு மகாத்மா சொல்லிக் கொடுத்த பாடம் பரம்பொருள் எல்லாருடைய இதயத்திலும் குடி இருக்கிறார் என்பது. அதைப் புரிந்து கொண்டால் ஒரு வருக்கொருவர் வேற்றுமை காட்டாமல் பேரன்புடன் தொடர்பு கொண்டு வாழ்வார்கள் என்பதுதான் அவர் கூறிய தத்துவம்.

''எது எல்லாவிதமான மகிழ்ச்சியையும் உண்டு பண்ணுகிறதோ, எது நமக்கு இயற்கையான சுய உணர்வைத் தருகிறதோ, எது உலகத்தின் சாதாரண எல்லைகளைக் கடந்த அபூர்வ விஷயமாகப் பரிமளிக்கிறதோ, அதுவே

நமது அறிவின் எல்லையாக உணரக்கூடிய பிரும்மம். அந்த மிக உயர்ந்த நிலை என்னுள்ளேயே அடங்கி இருக்கிறது.

''எது தன்னுடைய சிறு பகுதியாலும் எல்லாரையும் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தக் கூடியதோ, எது தான் ஒளி வீசி எல்லாவற்றையும் ஒளிமயமாக்குகிறதோ, எது தன் மூலம் எல்லாவற்றையும் பார்க்கக்கூடிய தீர்க்கமான பார்வையை அளிக்கிறதோ, அதுவே சாசுவதமான, எல்லாவற்றிலும் மேலான பிரும்மம். அது என்னுள்ளேயே இருக்கிறது.

''எது முடிவற்றதோ, எது எங்கும் பரவக்கூடியதோ, எது எல்லாவற்றுக்கும்காரணமாகவும், எல்லா ஆசைகளையும் கடந்ததாகவும் விளங்குகிறதோ, பற்றில்லாத ஒருவன் அடையக்கூடியதாகவும் ஆனால், எந்த உருவமும் இல்லாததாகவும் எது விளகுகுகிறதோ, அதுவே பிரும்மம். அது நானே என்பதை உணர்ந்துகொள்.''

—இப்படிச் சொல்லி முடித்தார் முனிவர். சீடர்கள் அதைப் படித்துக் கொண்டார்கள். ஆனால் புரிந்து கொள்ள வில்லை என்பதை அவரால் தெரிந்து கொள்ள முடிந்தது. ஏனென்றால், இவ்வளவு கூறிய பிறகும் அவர்களிடையே போட்டியும் பொறாமையும் இருந்தது. ஒருவரையொருவர் கோபித்துக்கொண்டு, சண்டை போட்டுக் கொண்டார்கள்.

'சரி, இவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும்' என்று எண்ணிக்கொண்டார் மகாத்மா சிவோகம். ''குழந்தைகளே. நாளைக் காலையில் நீராடியதும் எல்லாரும் இங்கே வந்து சேருங்கள், உங்களுக்கு அறுசுவையுடன் கூடிய பிரமாதமான விருந்து காத்திருக்கும்!'' என்று சொல்லி விட்டார். அவர்களுக்கெல்லாம் ஒரே சந்தோஷம்! வழக்கமாகப் பச்சைக் காய் கறிகளையும், கனிகளையுமே சாப்பிட்டு வந்த அவர்களுக்கு, வகை வகையாகச் சமைத்த உணவு கிடைப்பதென்றால் எப்படி இருக்கும்?

மறுநாள் குறித்த நேரத்துக்கு எல்லாரும் ஆவலோடு வந்து சேர்ந்து விட்டார்கள். முனிவர் அவர்களை இரண்டு வரிசையாக, எதிரும் புதிருமாக உட்கார வைத்தார். இலை கள் போடப்பட்டு உணவும் பரிமாறப்பட்டது. நாவில் நீர் ஊற அவ்வளவு பேரும் மகாத்மாவின் உத்தரவுக்காகக் காத் துக் கொண்டிருந்தார்கள். ''நீங்கள் எல்லாருமே இப் போது உணவு அருந்தலாம். ஆனால், அதற்கு முன்பு நீங்கள் ஒரு சிறு காரியம் செய்யவேண்டும்!'' என்றார் முனிவர். பொறுமை இழந்த எல்லாரும் அவரையே கவனித்தார்கள். ஆளுக்கு ஒரு நீளமான மரக்கட்டையைக் கொடுத்தார் முனிவர். அதை ஒவ்வொருவருக்கும் வலது கையை ஒட்டி னாற்போல வைத்துத் தானே நீளமான கயிற்றினால் இறுக் கிக் கட்டி விட்டார். எல்லாருக்கும் கட்டி முடித்த பின்பு அவர் அவர்களிடம், ''இப்போது நீங்கள் எல்லாருமே சாப்பிட ஆரம்பிக்கலாம்!'' என்று சொன்னார்!

அவ்வளவு பேரும் 'திரு திரு' வென்று விழித்தார்கள், கையை மடக்க முடியாமல் கட்டிவிட்ட பிறகு, எப்படி உணவை எடுத்து வாயில் போட்டுக் கொள்வது? முனிவர் வேண்டுமென்றே சோதிக்கிறாரா அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. குழப்பத்துடன் அவரையே திரும்பிப் பார்த் தார்கள்.

அவர்களுடைய கலக்கத்தை உணர்ந்தவராகத் திரும்பிப் பார்த்து வாய்விட்டுச் சிரித்தார் மகாத்மா. ''குழந்தைகளே நீங்கள் ஒவ்வொருவரும் அவரவர் கையினாலேயே அவரவர் வாயில் போட்டுக் கொள்ள வேண்டுமா என்ன? அப்படிச் செய்வதில்தானே சிரமம்? ஒரு மாறுதலுக்காக ஒவ்வொரு வரும் தன் இலையில் இருப்பதை எதிரில் இருப்பவனுக்கு எடுத்து ஆசை தீர ஊட்டுங்களேன்! எல்லாருக்கும் உணவு கிடைத்துவிடும். தான் தனக்காக ஒன்றும் செய்துகொள்ள வில்லை என்ற மகிழ்ச்சியும் கிடைத்துவிடும்'' என்றார்.

சீடர்கள், குழப்பம் தெளிந்தார்கள். மளமளவென்று ஒருவருக்கு மற்றவர் உணவு அளிக்கத் தொடங்கினார்கள். எல்லாருக்குமே மனநிறைவு உண்டாயிற்று. எல்லாருக்கும் வயிறு நிறைந்தது. உணவருந்தி முடித்த பிறகு எல்லாரும் முனிவரின் காலில் விழுந்து வணங்கினார்கள்.

''நான் சொன்ன தத்துவத்தை நீங்கள் யாவரும் உணர வேண்டும் என்றுதான் இப்படிச் செய்தேன். இப்போது தெரிந்து கொண்டீர்களா? எல்லா கைகளும் அவனுடையவைதாம். உணவு அருந்தும் வாய் எல்லாமே அவனுடையவைதான். அதை நாம் புரிந்து கொள்வதில்தான் நமக்கு மனத்திருப்தி கிடைக்கும். 'பரப்பிரும்மா நித்யம் ததேவா ஹமாஸ்மி!''' என்று கூறி முடித்தார் மகாத்மா.



# 34

ஒரு பெரிய காட்டில் சிங்கம் ஒன்று குடி இருந்தது. மழைக்கு சௌகரியமாக அது இரவு வேளையில் ஒரு குகையில் வந்து புகுந்து கொள்ளும். மழைக்கு ஒதுங்கும் காட்டெருமையோ, காட்டுப் பன்றியோ அதன் பிடியில் சிக்கிக் கொள்ளும். அந்த இடத்திலேயே சௌகரியமாகச் சிங்கம் தனது உணவை முடித்துக் கொள்ளும்.

ஒரு நாள் சிங்கம் காடு முழுவதும், பகல் பூராவும் அலைந்து திரிந்தது. எந்த மிருகமும் அதன் பிடிக்கு அகப்படவில்லை. சிங்கம் உறுமி, கர்ஜனை செய்து பார்த்தது.

கொஞ்சம் வெளியே எட்டிப் பார்த்த மிருகங்களையும் அந்தக் கர்ஜனை பயமுறுத்தி உள்ளே அனுப்பி விட்டது!

எந்த இரையும் கிடைக்கவில்லை. மாலை நேரமாகி விட்டது. சிங்கம் கடும்பசியுடன் திரும்பிவந்தது. அதற்கு ஒரு யோசனை தோன்றியது. குகைக்குள் ஒளிந்து கொண்டு விட்டால், இரவு நேரத்தில் அங்கே வந்து தங்க நினைக்கும் மிருகம் அதன் பிடியில் அகப்பட்டுக் கொண்டுவிடும். சிங்கத் தின் பசி தீர்ந்து போகும்! இப்படி ஒரு திட்டத்துடன் சிங்கம் குகைக்குள் புகுந்து மறைந்து படுத்துக் கொண்டது.

அந்தக் குகையில் ஒரு வயதான நரி வந்து தங்கிப் போவது வழக்கம். அன்று இரவும் அங்கே படுக்க எண்ணி அந்த நரி வந்துசேர்ந்தது. குகையின் வாயிலுக்கருகில் மண்ணில்சிங்கத்தின் காலடிகள் பதிந்திருப்பதை நரி உணர முடிந்தது. சிங்கம் ஒரு வேளை உள்ளே இருக்குமோ என்று அதற்குச் சந்தேகம். அதனால் உள்ளே சிங்கம் இருப்பதைச் சோதித்துப் பார்க்க ஒரு தந்திரம் செய்தது.

குகையினுள் நுழையாமல் வெளியே நின்றபடி, "குகையே! சௌக்கியம்தானா! நான் தினமும் வந்தவுடன் வாய்விட்டுச் சத்தம்போட்டு என்னை உள்ளே வா என்று சொல்லுவாயே...?" என்று நரி கேட்டது. உள்ளே இருந்த சிங்கத்தின் காதில் இந்தச் சத்தம் விழுந்தது. ஆனால் அது வாயைத் திறக்கவில்லை. 'நரி உள்ளே வரட்டும். பிறகு பார்த்துக் கொள்ளலாம்!' என்று அமைதியாக வாயை மூடிக் கொண்டு ஒளிந்து படுத்திருந்தது. கிடைக்கப்போகும் உணவை எண்ணி அதற்கு வயிற்றில் பசி கிள்ளிற்று. நாவில் நீர் ஊறிற்று.

நரிக்கு இன்னும் சந்தேகம் தீரவில்லை. இரண்டாவது தடவையாக "குகையே! ஏன் இன்னும் பேசாமல் இருக் கிறாய்? நீயும் நானும் ஒருவரையொருவர் அழைத்துப் பேசிக் கொள்வதுதானே வழக்கம்? நீ சத்தம் போட மறுத்தால்

நான் உள்ளே வந்து தங்குவது உனக்கு விருப்பம் இல்லை என்பது அர்த்தம். எனக்கு வேறு இடம் இருக்கிறது. நான் போய் விடட்டுமா...?'' என்று கேட்டது.

உள்ளே இருந்த சிங்கம் 'ஏதேது? நாம் இனியும் பேசாமல் இருந்தால் நிலைமை முற்றிலும் முற்றிப் போய்விடும் போல இருக்கிறது. நரி உள்ளேயே வராமல் வேறு எங்கேயாவது போய் விட்டால் என்ன செய்வது...? நாம் உள்ளே படுத்திருப்பதால் குகை பயந்து கொண்டு சத்தம் போடாமல் இருக்கிறதோ என்னவோ...? அதற்குப் பதிலாக நாமே போட்டு வைக்கலாம்!' என்று தீர்மானம் செய்து பெரிதாக ஒரு கர்ஜனை செய்துவிட்டு ''உள்ளே வா நரியே! என் நண்பனே! உனக்காக நான் காத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றது.

வெளியே காத்துக் கொண்டிருந்த நரிக்கு உள்ளே இருப்பது யார் என்று உறுதியாகி விட்டது. மேலேபேசினால் சிங்கம் வெளியே வந்து அடித்து விடப் போகிறதே என்று வாயையே திறவாமல் நழுவி ஓடி போய் விட்டது!

''உன் மனத்தில் ஏதும் இல்லாமல் இருக்கட்டும். அங்கே நான் வந்து இருந்து கொள்வேன்!'' என்கிறார் நாராயணன். ஆனால் நம்முடைய மனத்தில் எப்போதும் பேராசையும் அகம்பாவமும் நிறைந்து கிடக்கிறதே! அதைச் சோதிப்பதற்கு ஆண்டவன் தந்திரம் நிறைந்த உலக ஆசைகளை, மோக மாயைகளை அனுப்பி வைக்கிறான். அவை தெரிந்ததுமே நம்முடைய மனத்தில் இருக்கும் பலவீனமான உணர்ச்சிகள் பதிலுக்கு எழுந்து கூச்சல் போடுகின்றன. நாராயணனின் அருள் கிடைக்காமலே போய் விடுகிறது! நம்முடைய மனத்தில் இருக்கும் வீண் ஆசைகளும் வறட்டு ஜம்பமும் நம்மைத் தொடர்ந்து வாட்டிக் கொண்டே இருக்கின்றன!

● ●

# 35

பராசரரின் புதல்வரான பகவான் வியாசர்தான் வேதங்களை எழுதி வைத்தவர். அதனால்தான் அவருக்கு. வேத வியாசர் என்ற பெயர் ஏற்பட்டது.

வியாசர் அபாரமான ஞானமும், சிறந்த ஞாபகசக்தியும் உடையவர். மகாபாரதக் கதை முழுவதையும் அவர் சிந்தனையில் உருவாக்கி வைத்து விட்டார். அவ்வளவையும் அவர் எழுதியாக வேண்டி இருந்தது. ஆனால், அவ்வளவு பெரிய இதிகாசத்தை எழுதிக் கொடுக்கக் கூடியவர் யார்? இந்தக் கேள்விக்குப் பதில் கிடைக்கத் தியானத்தில் அமர்ந்தார் வேத வியாசர்.

பிரும்மா வியாசருக்கு முன் பிரசன்னமானார். ''மகாபாரதம் முழுவதையும் எழுத நினைக்கிறேன். எனக்கு எழுதிக் கொடுத்து உதவக்கூடியவர் யார்...? என்று பிரும்மாவிடம் கேட்டார் வியாசர். ''மகாகணபதியைவேண்டிப் பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள். அவர் உங்களுக்கு உதவுவார்'' என்று சொல்லிவிட்டுப் பிரும்மா மறைந்து விட்டார்.

மகாகணபதி முதற் கடவுள். எந்தக் காரியத்தையும் விக்கினமில்லாமல் முடிக்க உதவுபவர். முதலும் முடிவுமாக நிற்பவர். எல்லாருமே எந்தக் காரியத்தையும் விக்கினமில்லாமல் முடிக்க அவரைத்தான் வேண்டிக் கொள்வார்கள். இந்த மிகப் பெரிய பணியை முடிக்கவும் வேதவியாசர் விநாயகரையே வேண்டிக் கொண்டார்.

''பிறவி இல்லாதவரும், முழுமையானவரும், முடிவில்லாதவரும், ஒருவராயும் ஆனவர் மகாகணபதி. மகா

ஆத்மாவாகவும் வேறுபாடு இல்லாதவராகவும் ஆசையை வென்றவராகவும் விளங்குபவர் அவரே. ஞானம் கிடைக்கவும் முயற்சிகளில் வெற்றி பெறவும் அவரையே வணங்குவோம். எல்லா குணங்களுக்கும் நாயகனாகவும், ஆனந்த ரூபனாகவும், ஓங்கார வடிவமாகவும் விளங்குபவர் விக்னேசுவரர், அவரை நான் வணங்குகிறேன்!'' என்று கூறிப் பிரார்த்தனை செய்தார் வேத வியாசர்.

விநாயகர் அவருக்குத் தரிசனம் கொடுத்ததும், ''நான் எழுதவிருக்கும் மகாபாரதத்துக்குத் தாங்களே எழுத்தாணி கொண்டு எழுதி உதவ வேண்டும். இது மிகப் பெரிய காவியம். இதை எழுத வல்லவர் வேறு யாரும் இல்லை'' என்று வேண்டிக் கொண்டார் வேத வியாசர்.

மகாகணபதி புன்னகை செய்தார். ''உம்முடைய பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டு வரம் அருளுகிறேன். ஆனால், ஒரே ஒரு நிபந்தனை. எந்த நிலையிலும் என்னுடைய எழுத்தாணி நிற்கவே கூடாது. நீங்கள் சொல்லும் காவியம் தொடர்ந்து இடையறாமல் வந்து கொண்டே இருக்க வேண்டும்'' என்றார்.

இது கொஞ்சம் சிரமமான காரியம். ஆனால், வேதவியாசர் கொஞ்சம் யோசனை செய்துவிட்டு, இந்த நிபந்தனைக்கு ஒப்புக் கொண்டார். ''சரி உங்களுடைய நிபந்தனைக்கு ஒப்புக் கொள்ளுகிறேன். நான் சொல்லுவதையும் ஒப்புக்கொள்ளுவீர்களா...?'' என்று கேட்டார்.

''சொல்லுங்கள். எனக்கும் நிபந்தனையா...?'' என்று புன்னகை செய்தார் மகாகணபதி.

''ஆமாம்! நான் சொல்லுவது எதுவானாலும் அதைச் சிறிதும் குழப்பமின்றி முழுமையாகப் புரிந்து கொண்டே நீங்கள் எழுதவேண்டும். அப்படி யோசிக்கும் போது, உங்கள் எழுத்தாணி நின்றால் அதற்கு நான் பொறுப்பாளி

யாக மாட்டேன்" என்றார் வேதவியாசர். மகாகணபதி இதற்கு ஒப்புக்கொண்டார்.

மகாபாரதத்தை எழுதவல்ல எழுத்தாணிக்கு எங்கே போவது...? தனது இரு தந்தங்களில் ஒன்றின் நுனியை உடைத்து அதைக் கொண்டே எழுதத் தொடங்கினார். மகாகணபதி. வேத வியாசர் பாரதத்தைச் சொல்லிக் கொண்டு வந்தார். வியாசர் தனது காவியத்தைச் சொல்ல ஆங்காங்கே யோசனை செய்யவேண்டி இருந்தது. நீராடவும் உணவு அருந்தவும் தியானத்துக்கும் நேரம் தேவைப்பட்டது. ஆகையால் நடுநடுவே சிக்கலானத் தத்துவங்கள் கொண்ட சுலோகங்களை உருவாக்கிச் சொல்லிவிடுவார். மகாகணபதி தீவிரமாகச் சிந்தித்து அவற்றின் பொருளைப் புரிந்து கொண்டு எழுதுவார். அந்த நேரத்தில் வியாசர் தனது காரியங்களை முடித்துக்கொண்டு விடுவார்.

மிகப் பெரிய காவியமான மகாபாரதம் இவ்வாறு எழுதி முடிக்கப் பட்டது. வேதவியாசர் கூறி மகாகணபதி எழுதிய காவியம் இந்துக்களுக்கு மிக முக்கியமான இதிகாச மாகவும் ஆயிற்று.

எந்தக் காரியத்தையும் செய்ய ஆழ்ந்த அறிவும் சாமர்த்தியமும் தேவை. அதைச் செய்து முடிப்பதற்கு ஆற்றல் மிகுந்த ஒருவரைத் தேர்ந்தெடுப்பதும் மிக முக்கியம். இவை இரண்டும் சேர்ந்து உருவாகும் எதுவும் அழியாத புகழ் பெறும் என்பதில் சந்தேகமே இல்லை.

● ●

# 36

லட்சணா என்ற நாட்டின் அரசன் மிகவும் கெட்டிக்காரன். பக்தியுடன் மக்களின் நன்மையை நாடி அரசாட்சி செய்து வந்தான். அவனுடைய முதல் அமைச்சர் சத்ய கீர்த்தியும் கெட்டிக்காரன். அரசனிடம் மிகுந்த விசுவாசத்துடன் பழகிவந்தான். நாட்டு மக்களுக்கு இருவரிடமும் அளவு கடந்த மரியாதை இருந்தது.

அரண்மனையில் தினந்தோறும் முனிவர்களும், பெரியோர்களும் வந்து கூடுவார்கள். நல்ல விஷயங்களைப் பற்றிப் பேசி விவாதிப்பார்கள். வேதாந்த ஆராய்ச்சிகளின் மூலம் வாழ்க்கையில் எது உண்மை என்பது பற்றி அவர்கள் விவாதம் செய்வதுண்டு. அரசனின் மகன் அவர்களுடன் வந்து உட்காருவதுண்டு. ஆனால், மிகச் சிறியவனாதலால் இளவரசனுக்கு அவர்கள் பேசுவது புரியவில்லை. அவனுக்கு ஞானோபதேசம் கிடைக்கக்கூடிய பருவம் வரவில்லை.

திடீரென்று ஒருநாள் அரசன் இறந்து போனான். நாடு முழுவதும் துக்கம் கொண்டாடப்பட்டது. பிறகு ஒரு நல்ல நாள் பார்த்து இளவரசனுக்கு முடிசூட்டுவிழா நடத்தினார்கள். அவன் அரசனானான். சத்யகீர்த்தி தொடர்ந்து முதலமைச்சராக இருந்தார். அரசனிடம் மரியாதையும் விசுவாசமும் காட்டியதுபோலவே இளவரசனிடமும் மரியாதையும் விசுவாசமும் காட்டி வந்தார். இளவரசனுக்கு அவர்மீது மிகுந்தபற்று இருந்தது. ஆனால், அவர் கடவுளைப் பற்றியும், அவருடைய ஆசி அருள் இவற்றைக் குறித்தும் பேசியதும் விவாதித்ததும் அவனுக்குப்புரியவில்லை. அதனால்

அவர் அப்படிக் குறிப்பிடும் போதெல்லாம் பொறுமை இழந்து போனுன்.

முதலில் இளவரசன் கொஞ்சம் பொறுமையோடு இருந்தான். தனது கோபத்தையும் அடக்கிக்கொண்டான். ஆனுல் நாளாக ஆக அவனுடைய பொறுமை எல்லையைக் கடந்துவிட்டது. ஒருநாள் சத்யகீர்த்தியிடம் அவன் மிகுந்த கோபத்துடன். வாய்க்கு வந்தபடி பேசித் தீர்த்து விட்டான்.

''இங்கேபாருங்கள்! என் தந்தை உங்களிடம் காட்டிவந்த மரியாதைக்காகவும், நான் உங்களிடம்காட்டிவந்த அன்பிற்காகவும், இவ்வளவு நாட்களாக நான் நீங்கள் பேசுவதையெல்லாம் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தேன். ஆனுல், நீங்கள் குறிப்பிடும் கடவுள், அவருடைய அருள், எதுவுமே எனக்கு விளங்கவில்லை. நீங்கள் மட்டும் அல்ல— உங்களுடைய சகாக்களும் இப்படித்தான் பேசுகிருர்கள். விஞ்ஞான ரீதியாகவோ, பகுத்தறிவுக்கு உட்பட்டோ, எந்த விளக்கமும் இவற்றுக்குக் கிடைக்கவில்லை. அவர்கள் சொல்லுவதும் ஒன்றுக்கொன்று முரண்பாடாகவே இருக்கிறது. நான் உங்களுடன் இருந்து தலைவனுக விளங்குபவன் மட்டுமல்ல; இந்த நாட்டுக்கு அரசன், இந்த நாட்டு மக்களுக்கு நான் பொறுப்புடன் பதில் சொல்ல வேண்டிய கடமையும் எனக்கு இருக்கிறது. ஆகையால் இன்றையிலிருந்து நாற்பத்தொரு நாட்களுக்குள் என்னுடைய மூன்று கேள்விகளுக்கு விளக்கமான பதில் சொல்லியாக வேண்டும்.

முதலாவது 'கடவுள் யார்?' என்பது. இரண்டாவது: 'கடவுள் எங்கே?' மூன்ருவது 'அவர் என்ன செய்கிருர்?' என்பது. இந்த மூன்று கேள்விகளுக்கும் எனக்கு நன்ருக விளங்கும்படி பதில் சொல்லியாக வேண்டும். அப்போது

தான் நான் உங்களுடன் இருப்பேன். எனக்குச் சரியான பதில் கிடைக்கவில்லையானால் உங்களிடமிருந்து பிரிந்து நான் இந்த நாட்டு மக்களை எனக்குப் புரிந்த உலக ரீதியான வழியில் நடத்திச் செல்லப்போகிறேன். எனக்குப் பகுத்தறிவில் தான் நம்பிக்கை இருக்கிறது. கடவுள் நம்பிக்கை இல்லை. எனக்குப் புரிந்த வழியில் நான் மக்களை அழைத்துச் செல்லப்போகிறேன்'' என்றான்.

இளவரசன் சொன்னதைக்கேட்டு மற்றவர்கள் அதிர்ச்சி அடைந்தார்கள். ஆனால், முதலமைச்சர் மனம் கலங்கவில்லை. நேரே கோயிலுக்குப் போய் ''இறைவா! இதுவும் உன் சோதனை தான். இளவரசன் நல்லமனம் கொண்டவன். அவன் மனதில் எப்படியோ இந்தச் சலனம் ஏற்பட்டிருக்கிறது. அவனுக்குச் சரியான பதிலைச் சொல்லி, அவனை நல்வழிப் படுத்தக்கூடிய திறமையை நீர்தான் எனக்கு அருள வேண்டும்'' என்று முறையிட்டார்.

இந்த மூன்று கேள்விகளுக்கும் பதிலைத் தேடி சத்ய கீர்த்தி தீர்த்தயாத்திரை செய்ய புறப்பட்டார். புண்ணியத் தலங்களுக்கும், ஆசிரமங்களுக்கும், மடங்களுக்கும் யாத்திரையாகப் போனார். முனிவர்களையும், பெரியோர்களையும், தத்துவ ஞானிகளையும் சந்தித்தார். அவர்கள் அவருடைய கேள்விகளுக்கு விடையாக சாஸ்திரங்களிலிருந்தும், தத்துவ நூல்களிலிருந்தும் விடைகளை எடுத்துச் சொன்னார்கள். ஆனால், அவையெல்லாம் அவர் ஏற்கனவே நன்கு படித்தறிந்தவைதான். புதிதாக எந்த விளக்கத்தையும் அவர்களால் அளிக்க முடியவில்லை. அவர்கள் சொன்ன பதில்களைக் கொண்டு தன்னால் இளவரசனுக்குத் தேவையான பதில்களைக் கூற முடியும் என்று அவருக்குத் தோன்றவில்லை.

நாட்கள் கழிந்துகொண்டிருந்தன. இளவரசன், சத்ய கீர்த்திக்கு விதித்த கட்டளையை நாட்டில் எல்லா மக்களும்

தெரிந்து கொண்டிருந்தார்கள். எப்படியாவது சத்யகீர்த்தி அந்தச் சோதனையில் வெற்றிகரமாகத் தேறிவிட வேண்டும் என்று ஒவ்வொருவரும் கோயிலில் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார்கள். சத்யகீர்த்தியின் பிரயாணம் தொடர்ந்து கொண்டே இருந்தது. ஆனால், அவர் தேடிச் சென்ற ஞானம் அவருக்குக் கிடைக்கவில்லை.

சத்யகீர்த்தியிடம் ஒரு விசுவாசமான பிராமணன், சமையற்காரனாக வேலை பார்த்து வந்தான். முதலமைச்சர் சரியாகச் சாப்பிடுவதில்லை. சரியாக உடை அணிவதும் இல்லை. எப்போதும் சிந்தனையில் ஆழ்ந்து உட்கார்ந்திருந் தார். அதைக்கண்டு அந்தச் சமையற்காரனுக்கு மிகுந்த கவலை உண்டாயிற்று. சத்யகீர்த்திக்கு நோய் வந்துவிடாமல் இருக்க வேண்டுமே என்று அவனும் கவலைகொள்ளத் தொடங்கினான்.

நாற்பத்தோராவது நாளும் வந்தது. நாடு முழுவதும் கவலையோடு காத்திருந்தது. அன்று காலையிலும் கடமை தவறாமல் சத்யகீர்த்தி தனது பிரயாணத்தை தொடங் கினார். நாள் முழுவதும் பெரியோர்களையும், அறிவாளி களையும் நாடித் தனது கேள்விகளைக் கேட்டார். யார் சொன்ன பதிலும் அவருக்குத் திருப்தி அளிக்கவில்லை. மாலையில் அவர் மனம் கலங்கி வீடு திரும்பிச் சாப்பிடாமலே உட்கார்ந்து விட்டார்.

''ஐயா! நான் உங்களிடம் பல ஆண்டுகளாகச் சமையற் காரனாக இருந்து வேலை செய்து வந்திருக்கிறேன். ஆனால் நீங்கள் இப்படி மனம் கலங்கி உட்கார்ந்து நான் பார்த்த தில்லை. உங்களுக்கு நான் ஏதாவது உதவி செய்ய முடியுமா? சொல்லுங்கள். என்னுடைய மனம் மிகவும் வேதனைப் படுகிறது'' என்று ஆறுதலாகப் பேச முயன்றான் சமையற் காரன்.

''அப்பா! பெரிய ஞானிகளும், அறிவாளிகளுமே என்னுடைய மனக் கலக்கத்தைப் போக்க முடியவில்லை. நீ என்ன செய்துவிடமுடியும்? அரசனுடைய சந்தேகங்களை உன்னைப் போன்ற சாதாரண மனிதனால் எப்படித் தீர்க்க முடியும்? ஆண்டவன்தான் அருள் செய்யவேண்டும். பொறுத்திருந்து பார்ப்போம்'' என்றார் சத்யகீர்த்தி.

சமையற்காரன் பதில் சொல்லாமல் தலையைக் குனிந்து கொண்டே நின்றான்.

அரசன் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தான். சபை கூடி இருந்தது. மக்கள் திரளாக வந்து சேர்ந்திருந்தார்கள். எல்லாருமே முதலமைச்சர் சத்யகீர்த்தியின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். குறித்த நேரத்தில் அவர் வரவில்லை. அவருக்குப் பதிலாக ஒரு வயதான அந்தணர் அரசவைக்கு வந்து சேர்ந்தார். காவலர்கள் முதலில் அவரை உள்ளே விடவில்லை. பிறகு முதலமைச்சர் அனுப்பி வைத்ததாக அவருடைய மோதிரத்தை அடையாளம் காட்டியதும் அனுமதித்து உள்ளே அனுப்பினார்கள்.

அரசன் சிம்மாசனத்தில் இருந்தபடியே அவரை வரவேற்று, ''சத்யகீர்த்தி என்ன சொல்லி அனுப்பினார்? என் கேள்விகளுக்கு நீங்கள் விடை அளிக்க முடியுமா...?'' என்று ஆவலோடு கேட்டான்.

''பதில் சொல்ல முடியும். ஆனால், நீங்கள் தெரிந்து கொள்ள விரும்புகிறீர்கள்; நான் சொல்லிக் கொடுக்க வந்திருக்கிறேன். நீங்கள் சீடர்; நான் குரு. ஆகையால் எனக்குக் கீழேதான் நீங்கள் அமரவேண்டும். அதற்குச் சம்மதிக்கிறீர்களா?'' என்று கேட்டார் அந்த அந்தணர். அரசன் அதைக் கேட்டுத் திகைத்துப் போனான். பிறகு சிம்மாசனத்திலிருந்து எழுந்து இடத்தைக் காலி செய்து

கொடுத்தான். அவர் அதில் அமர்ந்து கொண்டார். அரசன் அவருடைய காலடியில் அமர்ந்து கொண்டான்.

''சரி! என்னுடைய முதல் கேள்வி 'கடவுள் யார்?' என்பது. உங்கள் பதில் என்ன...?'' என்று ஆவலோடு கேட்டான். அவர் அதற்குப் பதில் சொல்லவில்லை. காவலன் ஒருவனை அழைத்து, ''நான் வாசலில் ஒரு கறுப்புப் பசுவைக் கொண்டு வந்து கட்டி இருக்கிறேன். அதை உள்ளே கொண்டு வாருங்கள்'' என்று சொன்னார். கறுப்பு பசு உள்ளே வந்து சேர்ந்தது. அதிலிருந்து ஒரு பாத்திரத்தில் பாலைக் கறக்கச் செய்தார் அந்தணர்.

அந்தப் பாத்திரத்தை அவர் அரசன் கையில் கொடுத்து, ''இந்தப் பாலின் நிறம் என்ன...?'' என்று கேட்டார். ''சுத்தமான வெள்ளை'' என்று பதில் சொன்னான் அரசன். ''அந்தப் பசு இந்தப் பாலைக் கொடுக்கச் சாப்பிடும் புல்லின் நிறம் என்ன?'' என்று கேட்டார் அந்தணர். ''பச்சை'' என்று சொன்னான் அரசன். ''இந்தப் பசுவின் நிறம் என்னவோ...?'' என்று கேட்டார் அவர். ''கறுப்பு'' என்றான் அரசன்.

''அரசே! ஒரு கறுப்புப் பசு, பச்சைப் புல்லைச் சாப்பிட்டு வெள்ளை நிறமானப் பாலைக் கொடுக்கிறது. இது எப்படி? இதைப் போலச் செய்யக்கூடிய திறமைசாலிகள்—வித்தை செய்பவர்கள்—மாந்திரீகர்கள் யாராவது உம்முடைய நாட்டில் இருக்கிறார்களா...?'' என்று கேட்டார் அந்தணர். அரசனால் பதில் சொல்ல முடியவில்லை.

அப்படி ஓர் அதிசயத்தைச் செய்யக்கூடியது ஒரே ஒரு சக்திதான். அந்தச் சக்திதான் கடவுள். மனிதனால் நினைக்க முடியாதது எல்லாவற்றையும் செய்யக் கூடிய ஒரே சக்திதான் இறைவன்'' என்றார் அந்தணர். அரசனுக்கு இந்த எளிமையான விளக்கம் சுலபமாகப் புரிந்தது. வியப்பில் ஆழ்ந்து விட்டார்.

கொஞ்ச நேரம் கழித்து, ''கடவுள் எங்கே இருக்கிறார்?'' என்ற கேள்வியைக் கேட்டான். அதற்கும் அந்தணர் உடனே பதில் சொல்லவில்லை. ஒரு தட்டையும், குத்துவிளக்கையும், தீக்குச்சியையும் கொண்டுவரச் சொன்னார். அந்தப் பெரிய சபையின் கதவு, ஜன்னல் அனைத்தையும் வெளிச்சம் உள்ளே வரமுடியாதபடி இழுத்து மூடிவிடச் சொன்னார். அங்கே இருள் சூழ்ந்தது.

அந்தணர் விளக்கை ஏற்றினார். அதன் மென்மையான வெளிச்சம் சுற்றிலும் விழுந்தது. ''அரசே! ஒளி எங்கே இருக்கிறது?'' என்று கேட்டார் அந்தணர். அவன் குத்து விளக்கில் நின்று எரியும் கொழுந்தைக் காட்டினான்.

''அதைக் கேட்கவில்லை. இங்கே குறிப்பாக ஒளி எங்கே இருக்கிறது என்று சொல்லமுடியுமா?'' என்று கேட்டார் அந்தணர்.

''அதைச் சொல்ல முடியாது. ஆனால், தீபத்திலிருந்து அது வருவதைப் பார்க்கிறோம். அந்த ஒளி எல்லா இடத்திலும் வியாபித்திருக்கிறது'' என்றான் அரசன்.

''உங்களுடைய கேள்விக்கு பதில் அதுதான் அரசே! கடவுளைக் குறித்த இடத்தில் வரித்து நாம் வணங்குகிறோம். ஆனால், அவருடைய அருள் உலகெங்கும் எல்லா ஜீவராசிகளிடத்திலும் வியாபித்திருக்கிறது!'' என்றார் அந்தணர்.

அரசன் திருப்தியோடு ''என் மூன்றாவது கேள்விக்கு விடையைச் சொல்லிவிடுங்கள் போதும்! கடவுள் என்ன செய்கிறார்?'' என்று கேட்டான்.

அந்தணர் சபையின் கதவு ஜன்னல்களைத் திறந்துவிடச் செய்தார். வெளிச்சம் உள்ளே வந்தது. முதலமைச்சர்

சத்யகீர்த்தியும் தலைகுனிந்தபடி உள்ளே வந்து சேர்ந்தார். எந்த ஆசனத்திலும் அமராமல் தலையைக் குனிந்து கொண்டே நின்றார். சிம்மாசனத்தில் இருப்பது யார் என்று கவனிக்காமலே, அந்தத் திசையை நோக்கி வணங்கி விட்டு நின்றார்.

''எல்லாரிடமும் இருந்து எல்லாரையும் இயக்குபவர் தான் கடவுள். அதைத்தான் அவர் செய்கிறார். அதனால் அவருக்கு எங்கே இருந்தாலும் மதிப்பு ஒன்றுதான்'' என்றார் அந்தணர். அரசனுக்கு அது புரியவில்லை. ''ஐயா! எனக்குத் தயவு செய்து கொஞ்சம் விளக்கமாகச் சொல்ல வேண்டும்!'' என்று கேட்டுக் கொண்டான்.

''ஐயா! நீங்கள் இந்த நாட்டின் அரசன். நீங்கள் என் காலடியில் அமர்ந்து கொண்டிருக்கிறீர்கள். சத்யகீர்த்தி இந்த நாட்டின் முதலமைச்சர். அவரோ நின்று கொண்டிருக்கிறார். நான் அவருடைய சமையற்காரன். நானோ சிம்மாசனத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். இதை என்னவென்று சொல்ல? இப்படி நம்மை ஆட்டிப் படைப்பவர்தான் கடவுள். நம் எல்லாரிடமும் இருந்து கொண்டு அவர், நம் எல்லாரையும் ஆட்டி வைக்கிறார். நாம் செய்வது ஒன்றும் இல்லை. நீங்கள் அரசன் என்பதும், சத்யகீர்த்தி முதல் அமைச்சர் என்பதும், நான் சமையற்காரன் என்பதும் இந்த நாடகத்தின் வெவ்வேறு பாத்திரங்களே!'' என்றார் அந்தணர்.

சத்யகீர்த்தி அப்போதுதான் தலைநிமிர்ந்து பார்த்தார். சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பது தனது சமையற்காரனே என்று அறிந்தார். உடனே அவனை நோக்கி ஓடிவந்தார். சமையற்காரனும் எழுந்து வணங்கினான். அரசன் புத்திசாலியான அந்தச் சமையற்காரனை அன்புடன் அணைத்துக் கொண்டான். பெரிய சன்மானம் கொடுத்து மரியாதை செய்தான். சத்யகீர்த்தியை அவருக்குரிய மரியாதையுடன் பக்கத்தில் அமர்த்திக் கொண்டான்.

அரசனுக்குத் தெளிவு பிறந்துவிட்டது. நாட்டில் நல்ல ஆட்சி மலர வழி உண்டாகிவிட்டது.

நாம் எவ்வளவு படித்தவர்களானாலும் அந்த அறிவை ஒளிவிடச் செய்வதற்கு ஆண்டவனின் அருள்தான் தேவை. அது இருந்தால் எளியவர்களும், பிரமாதமான சாதனைகளைச் செய்யலாம். பக்தியின் தொடர்பு இல்லாத அறிவு எதற்கும் பயன்படாது. பெரியநிலையில் உள்ளவர்களுக்குக் கூட அந்த நிலையில் புத்தி மழுங்கிப் போய்விடும்.



# 37

இது ரொம்ப நாட்களுக்கு முன்னால் நடந்த கதை. கேட்டால் ஏதோ புராணத்தில் வருவது போல இருக்கும். இருந்தாலும் இதிலும் ஒரு தத்துவம் அடங்கி இருக்கிறது.

ஓர் ஊரில் ஓர் அழகானப் பெண் இருந்தாள். கழுத்தில் தங்கச் செயினும், கைகளில் வளையல்களும் போட்டுக் கொண்டிருந்தாள். அவளுக்கு நீளமான கருங்கூந்தல் இருந்தது. அதைப்பற்றி அவளுக்கு ரொம்பப் பெருமை. அவளுடைய கணவன் அவளை மிகவும் அருமையாக வைத்துக் கொண்டிருந்தான். அவர்களுக்கு ஒரு குழந்தையும் இருந்தது.

தினந்தோறும் அவள் காட்டிற்குச் சுள்ளி பொறுக்கப் போவாள். மாலையில் தான் திரும்பிவருவாள். அன்று அவள் அதைப் போலத் திரும்பி வந்த போது, குடிசை

யின் வாசலில் பெரிய கூட்டம் கூடி இருந்தது. அவளுடைய கணவனும், குழந்தையும் குடிசைக்குள் வந்த பாம்புத் தீண்டி, இறந்து போய்விட்டார்கள்.

அவள் வாயிலும், வயிற்றிலும் அடித்துக் கொண்டு அழுதாள். கணவனின் பெயரையும், குழந்தையின் பெயரையும் சொல்லிப் புலம்பினாள். ஊரார் அவளைத் தேற்றினார்கள். அனுதாபம் காட்டிச் சோறு போட்டார்கள். ஆனால், எத்தனை நாட்களுக்கு அப்படிப் போடுவார்கள்? ஒரு நாள் அவள் ஊரைவிட்டே கிளம்ப வேண்டியதாயிற்று. ஆனால், அவளுடைய துக்கம் குறையவில்லை.

நீண்ட சாலையில் நடந்து கொண்டே வந்தாள். வழியில் ஒரு கிணறு இருந்தது. அதிலிருந்து தண்ணீரை எடுத்துக் குடித்தாள். அது மிகவும் சுவையாக இருந்தது. அவளுடைய களைப்பெல்லாம் நீங்கி விட்டது. கிணற்றை ஒட்டினாற் போல ஒரு சுவரும் இருந்தது. சுவருக்கு அப்பால் ஒரு தோட்டமும் தெரிந்தது. அந்தப் பெண் சுவரைக் கடந்து போனாள். அங்கே நிறையப் பழங்கள் பழுத்துத் தொங்கின. மலர்கள் நறுமணம் வீசின. குளிர்ந்த காற்று மெல்லெனத் தவழ்ந்தது.

அந்தப் பெண் அங்கேயே படுத்துக் கொண்டு தூங்கி விட்டாள். களைப்பு முழுமையாக அடங்கியதும், தூக்கம் கலைந்தது. எழுந்து உட்கார்ந்து கொண்டாள். அவளுக்கு முன் தேஜோமயமான ஒரு பெரியவர் நின்று கொண்டிருந்தார். "இங்கே எதற்கு வந்தாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

"இந்த இடம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. நான் இங்கே தங்க விரும்புகிறேன். எனக்கு அமைதி கொடுங்கள்!" என்று கேட்டாள் அந்தப் பெண்.

"இது கடுமையான உழைப்பினால் தோற்றுவிக்கப்பட்ட தோட்டம். வேலை செய்பவர்கள் தாம் இங்கே

இருக்க முடியும். நீ வேலை செய்வதானால் உன்னை இங்கே தங்க அனுமதிக்கிறேன்'' என்றார் பெரியவர்.

''எனக்கு ஒரு வேலையும் தெரியாதே! நீங்கள் கற்றுக் கொடுத்தால் அந்த வேலையைச் செய்கிறேன்'' என்றாள் அந்தப் பெண்.

''நல்லது. மண்ணைக் கிளறிப் பாத்தி போடு!'' என்றார் பெரியவர். அவளுக்குத் தெரியவில்லை. அவர் கற்றுக் கொடுத்தார். அவள் தெரிந்து கொண்டதும், ''நான் சொல்லிக் கொடுத்ததற்குத் தட்சிணையாக நீ ஏதாவது கொடுக்க வேண்டுமே?'' என்று கையை நீட்டிக் கேட்டார். அவள் திகைத்துப் போனாள். பிறகு கழுத்திலிருந்த தங்கச் சங்கிலியைக் கழற்றிக் கொடுத்து விட்டாள்.

பிறகு கொஞ்ச நாட்கள் கழித்துச் செடிகள் வளரத் தொடங்கின. ''களைகளை நீக்கிவிட்டு உரம் போட வேண்டும்'' என்று சொன்னார் பெரியவர். அவளுக்குத் தெரியவில்லை. மீண்டும் அவர் கற்றுக் கொடுத்தார். அவர் சொன்னபடி செய்தாள் அந்தப் பெண். செடிகளும் செழித்து வளர்ந்தன. ''என்னுடைய தட்சிணை எங்கே?'' என்று மறுபடி கையை நீட்டினார் பெரியவர். அவள் சற்றுத் தயங்கினாள். பிறகு கையிலிருந்து வளையல்களைக் கழற்றிக் கொடுத்து விட்டாள்.

செடிகளும், கொடிகளும் தாறுமாறாக வளர்ந்தன. அவற்றைக் கத்தரித்துச் சரிப்படுத்த வேண்டியதாயிற்று. அவளிடம் கத்தரிக்கோல் இல்லை. அவளுக்குச் சரி செய்யவும் தெரியவில்லை. அவர்தான் கற்றுக் கொடுத்தார். அவளுக்கு ரொம்ப மகிழ்ச்சி. ஆனால், பயந்து கொண்டே, ''சுவாமி! உங்களுக்குத் தட்சிணை கொடுக்க இப்போது என்னிடம் எதுவும் இல்லையே?'' என்றாள்.

''ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? உனது கூந்தலைக் கொடுக்கலாமே?'' என்றார் அவர். அவள் கதிகலங்கிப்

போனாள். அழகிய நீண்ட கூந்தலைக் கத்தரித்துக் கொடுப்பதாவது? ஆனால், அவள் என்ன செய்ய முடியும்? எதையாவது கொடுத்தாக வேண்டுமே? வேறு வழியின்றிக் கூந்தலைக் கொடுத்து விட்டாள்.

செடி, கொடிகள் முழுவளர்ச்சியடைந்தன. அவற்றைப் பறிக்கத் தயாரானாள் அந்தப் பெண். தானே விளைவித்தவை என்று அவளுக்கு ரொம்பப் பெருமை! பெரியவர் மறுபடியும் வந்துவிட்டார். அவளைப் பறிக்க விடவில்லை. ''நீ வேலை செய்திருக்கலாம். ஆனால் தோட்டம் என்னுடையது. என் காணிக்கையை செலுத்தி விட்டுத்தான் நீ பழங்களை பறிக்கலாம்!'' என்று சொல்லி விட்டார். இது வரை தட்சிணை. இப்போது காணிக்கையா?

''சுவாமி! நான் ஏதும் கொடுப்பதற்கில்லையே!'' என்று கையைக் கூப்பினாள் அந்தப் பெண்.

''உன் இதயத்தைக் கொடு!'' என்றார் அந்தப் பெரியவர்.

''இதயத்தையா...? அப்புறம் நான் எப்படி உயிர் வாழ்வேன்?'' என்று கேட்டாள் அவள்.

''பயப்படாதே! நீ கண்ணை மூடி கொள். நானே எடுத்துக் கொள்வேன்'' என்றார் பெரியவர். அந்தப் பெண் கண்களை மூடிக் கொண்டாள். அவள் இதயத்தில் ஒளி பரவத் தொடங்கிற்று. பெரியவர் சொன்னது அவளுக்கு புரிந்தது, கணவனையும், குழந்தையையும் நினைத்துப் புலம்பிய இதயத்தைத்தான் அவர் கேட்டார். அதை அவர் அவளிடமிருந்து எடுத்துக் கொண்டு விட்டார்.

முதலில் நகைகளின் மீது இருந்த ஆசை நீங்கிற்று. பிறகு அழகின்மீது இருந்த கர்வமும் தற்பெருமையும் மறைந்தது. இப்போது கணவன் குழந்தை ஆகியவரிடம் இருந்த ஆசாபாசங்களும் விலகிவிட்டன. அவள் மண்ணைத்

திருத்தி, செடியை விளைவித்து, பழம் பறிக்கவில்லை. ஆத்மப் பயிரைத்தான் விளைவித்தாள். அந்தப் பலனை அவள் அடைந்து விட்டாள்!

அந்தப் பெண் கண்களைத் திறந்து பார்த்தாள். பெரியவர் அங்கே இல்லை. அவர் அவளை வாழ்க்கையின் எதிர் நீச்சலிலிருந்து கரையேற்றி விட்டு மறைந்து விட்டார்!



# 38

வெகு நாட்களுக்கு முன்பு ஒரு ஊரில் உத்யோகி என்ற மனிதர் வசித்து வந்தார். பெயர்தான் உத்யோகி. ஆனால் வேலை போய்விட்டது. குடும்பத்தை நடத்த ரொம்ப சிரமப்பட்டார். கர்மிணி என்ற தனது மனைவியையும், சம்பத் என்ற தனது மகனையும் வைத்துக்கொண்டு அன்றாடத் தேவைகளைக்கூடச் சமாளிக்க முடியாமல் திண்டாடிப் போய்விட்டார்.' ஆனால் அவர் ரொம்ப நல்லவர். நல்ல முறையில் வாழ்க்கை நடத்தி வந்தார்.

உத்யோகி காட்டுக்குப் போய் விறகு வெட்டத் தொடங்கினார். ''ஜெய சீதாராம்! ஜெய ஜெய சீதாராம்!'' என்று உச்சரித்துக்கொண்டே விறகை வெட்டினார். அவர் மனத்துக்கு அமைதி கிடைத்தது. ஆனால் அந்த வேலையில் அவருக்குத் தேவையான பணம் கிடைக்க முடியாதே? அப்போது அங்கே ஒரு சாது வந்து நின்றார். அவருடைய நிழல் தரையில் பட்டதும், உத்யோகி தலைநிமிர்ந்து பார்த்

தார். உத்யோகியின் மனத்தவிப்பு சாதுவுக்குப் புரிந்து விட்டது.

''உன் கவலை எனக்குத் தெரிகிறது. கவலைப்படாதே! உனக்கு ஏராளமான செல்வம் கிடைக்கும். உன் குடும்பம் சகல வசதிகளுடனும் வாழும். பதிலுக்கு நீ எனக்கு என்ன தருவாய்?'' என்று கேட்டார் சாது.

''எதை வேண்டுமானாலும் கொடுக்கிறேன்!'' என்றார் உத்யோகி.

''பத்து ஆண்டுகளுக்குப் பிறகு நான் உன்னிடம் மறுபடியும் வருவேன். யாசகம் கேட்பவனாகத் திரும்பி வருவேன். அப்போது நீ, இன்று நீ வீட்டுக்குப் போனவுடன் முதலில் எதைத் தொடுகிறாயோ அந்தப் பொருளை எனக்குப் பரிசாகக் கொடுத்துவிட வேண்டும். என்னை ஏமாற்றி விடக்கூடாது!'' என்று சொன்னார். உத்யோகியும் உடனே ஒப்புக்கொண்டு விட்டார். சாது அவரை ஆசீர்வதித்து விட்டுப் போய்விட்டார்.

''வீட்டுக்குப் போனதும் எதைத் தொடப் போகிறேன்? வாசலில் கட்டி இருக்கும் நாய்க்குட்டி என்னைக் கண்டதும் ஓடிவரும். வாலைக் குழைத்துக்கொண்டு சுற்றிச் சுற்றி வரும். அதை நான் தொட்டுத் தடவிக் கொடுப்பேன். அவ்வளவுதானே? அந்த நாய்க்குட்டியைப் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு இந்த சாதுவிடம் கொடுத்துவிட்டால் போகிறது!'' என்று எண்ணிக்கொண்டார் உத்யோகி.

அந்த யோசனையுடனேயே வீடு திரும்பினார். அவருடைய கால்கள் சளைத்துப் போய்விட்டன. வாசல் திண்ணையில் சோர்ந்துபோய் உட்கார்ந்து கண்களை மூடிக்கொண்டார். வழியில் நினைத்ததும் சாது சொன்னதும் அவருக்கு மறந்துவிட்டது. அவருடைய மகன் சம்பத் ஐந்து வயதே நிரம்பிய பையன்—ஓடிவந்து அவருடைய மடியில் உட்கார்ந்து கொண்டு ''அப்பா! எனக்கு என்ன வாங்கிக்

கொண்டு வந்திருக்கிறாய்?'' என்று கேட்டான். உத்யோகி அவனை மடியிலிருந்து மெதுவாகக் கீழே இறக்கிவிட்டு விட்டுத்தான் வாங்கி வந்திருந்த மிட்டாயை இடுப்பிலிருந்து எடுத்தார். அப்போதுதான் அன்று அவர் சாதுவுக்குக் கொடுத்த வாக்கு நினைவுக்கு வந்தது......

அவருக்குத் தூக்கிவாரிப்போட்டது. ''ஐயோ! என் அருமை மகனைத் தொட்டுவிட்டேனே? பத்து ஆண்டுகளுக் குப் பிறகு அவனையல்லவா நான் அந்த சாதுவுக்குப்பரிசாகக் கொடுத்துவிட வேண்டும்? என்ன தவறு செய்தேன்?'' என்று புலம்பினார். மனம் அலைபாய்ந்தது. ''ஜெய சீதாராம்! ஜெய ஜெய சீதாராம்!'' என்று சொல்லிக்கொண்டார்.

அப்படி அவர் சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவ ருடைய மனைவி கர்மிணி, ''இங்கே வந்து பாருங்களேன்! என்ன அதிசயம்? இன்று நான் வழக்கம்போல உங்களுடைய துணிகளைத் துவைத்துக்கொண்டு வந்து உலர்த்தினேன். அவை காய்ந்ததும் எடுத்து மடித்து அலமாரியில் வைக்கப் போனேன். அலமாரியைத் திறந்ததும் என்ன இருந்தது தெரியுமா?'' என்று கேட்டார்.

''என்னதான் நடந்தது? சொல்லேன்'' என்று பொறுமையிழந்து அவசரப்பட்டார் உத்யோகி.

''தங்க நகைகள்—ஏராளமான பணம்—தினுசு தினு சான புடவை, வேஷ்டிகள், எல்லாமே அங்கே இருந்தன. என்னால் என் கண்களையே நம்பமுடியவில்லை. இந்த அதி சயம் எப்படி நடந்தது?'' என்று வியப்புடன் அவரை கேட் டார் கர்மிணி.

''ஜெய் சீதாராம்! ஜெய ஜெய சீதாராம்!'' என்றார் உத்யோகி. அவளுக்கு அவருடைய நிதானமான பதில் புரியவில்லை. ஆனால் அவருக்கல்லவா தெரியும்? இந்த ஐசுவரியத்துக்குப் பதிலாக அவர் தன்னுடைய மகனை இழந்துவிடப் போகிறாரே!

நாட்கள் கழிந்தன.

உத்யோகி ஒரு வியாபாரம் செய்யத் தொடங்கினார். அவரிடம் இருந்த பணம் அதற்கு உதவியாக இருந்தது. செல்வம் வளர்ந்தது. குடும்பத்தில் சுகமும் சௌக்கியமும் செழித்தோங்கின. சம்பத் ஒரு அழகான வாலிபனாக வளர்ந்து விட்டான். அவனுக்குப் பதினைந்து வயது நிறையும் தருணம் வந்துவிட்டது. கர்மிணி தனது மகனின் அழகையும் வளர்ச்சியையும் பார்த்து மனம் பூரித்துப் போனாள். ஆனால் உத்யோகி மன அமைதி இழந்து தவிக்கத் தொடங்கினார்.

பத்து ஆண்டுகள் முடிந்துவிட்டன. அன்று அந்த சாது வருவதாக இருந்தது. காலையிலிருந்தே உத்யோகியும் கர்மிணியும் அழுதுகொண்டிருந்தார்கள். சம்பத் வற்புறுத்திக்கேட்கவே அவனிடம் காரணத்தையும் சொல்லிவிட்டார்கள். சம்பத் புத்திசாலி. சிறிது நேரம் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தான்.

"அப்பா! நீ ஒன்று செய்யலாமே! அந்த சாது வருவதற்கு முன்னால் நீ என்னைத் தானம் செய்துவிடலாமே? தானம் செய்துவிட்டப் பொருளை யாரும் உன்னிடம் யாசிக்க முடியாது! அவர் வேறு ஏதாவது ஒரு பொருளைத் தான் உன்னிடம் பெற்றுக்கொண்டு போக முடியும்!" என்றான் சம்பத்.

"உன்னைத் தானமாகக் கொடுத்து விடுவதா? யாரிடம் கொடுப்பது? எப்படிக் கொடுப்பது?" என்று பெற்றோர் கேட்டார்கள்.

"இந்த ஊரின் வடகரையில் பெரிய நதி ஒன்று ஓடுகிறதல்லவா? அந்த நதிக்கு என்னைத் தானமாக அளித்து விடுங்கள். படகில் உட்கார்ந்துகொள்கிறேன். நதியைப் பூஜித்து என்னை ஏற்றுக்கொள்ளும்படி சொல்லிப் படகைத் தள்ளி

விட்டு விடுங்கள்!'' என்றான் சம்பத். வேறு வழியின்றி பெற்றோரும் ஒப்புக் கொண்டார்கள்.

மூவருமாக நதிக்கரையை அடைந்தார்கள். பூஜையும் நடந்தது. சம்பத் படகில் ஏறிக்கொண்டான். அலைமோதும் அந்தப் பெரிய நதியில் அந்தப் படகைத் தள்ளிவிட்டுவிட்டுக் கையை உயர்த்தி 'ஹோ'வென்று கதறி அழுதனர் பெற்றோர்.

அதைப் பார்த்துக்கொண்டே அந்த சாது அங்கே வந்து நின்றார்.........

சம்பத், படகில் செல்லுவதைப் பார்த்துவிட்டு, ஆசீர்வாதம் செய்தபடியே சாது மறைந்து விட்டார். 'எல்லாம் நன்மைக்காகவே நடக்கிறது' என்று எண்ணியபடி உத்யோகியும் அவருடைய மனைவியும் வீடு திரும்பி விட்டார்கள். படகில் அமர்ந்தபடி, உணவு ஏதும் இன்றி ராமநாமத்தை ஜபித்தபடி செல்லத் தொடங்கினான் சம்பத்.

மூன்று நாட்கள் இப்படி நடந்தது. கடைசியில் பசி மயக்கத்தினால் நினைவிழந்து படகிலேயே விழுந்துவிட்டான். படகு ஓரிடத்தில் கரையில் ஒதுங்கி விட்டது. கண்விழித்த சம்பத், எழுந்து மெல்ல நடக்கத் தொடங்கினான். சிறிது தூரம் நடந்த பிறகு ஒரு மாளிகை தெரிந்தது. அதன் வாசல் திறந்திருந்தது. உள்ளே படுப்பதற்கு அறையும் சாப்பிடப் பழங்களும் இருந்தன. சம்பத் அவற்றைச் சாப்பிட்டு விட்டு மஞ்சத்தில் படுத்து உறங்கி விட்டான். கண்விழித்த போது அவன் அருகில் ஒரு நாகப்பாம்பு படுத்திருந்தது. பயந்துபோய் எழுந்த சம்பத்திடம் ''அஞ்சாதே! எனக்கு நீ ஒருஉதவி செய்தால் உனக்கு எல்லாநன்மைகளும் கிடைக்கும்'' என்று அந்தப் பாம்பு சொன்னது.

''நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான் சம்பத்.

''இன்று இரவு இங்கே பன்னிரண்டு ஆட்கள் வருவார்கள். உன்னைத் துன்புறுத்துவார்கள். நீ எதுவும் பேசக்

கூடாது. அந்தக் கொடுமையைப் பொறுமையாக ஏற்றுக் கொள்ள வேண்டும். மூன்று நாட்கள் இப்படி நடக்கும். அதற்குப் பிறகு நீ பிழைத்துக் கொள்ளலாம். நான் உன்னைக் காப்பாற்றுவேன்!'' என்றது அந்த நாகப்பாம்பு.

அவனுக்கு எதுவும் புரியவில்லை. அந்த வேண்டுகோளை ஏற்பதா வேண்டாமா என்று தெரியவில்லை. சாகத் துணிந்தவனுக்கு எதுவுமே சொற்பமாகத்தான் தெரியும். அதனால் அந்த வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு விட்டான். மூன்று இரவுகள் அந்த ஆட்களிடம் அடியும் உதையும் வாங்கிப் படாத பாடு பட்டான். ஆனால் ராமநாம ஜபத்தை மறக்கவில்லை. கடைசி நாளன்று பொழுது விடிந்ததும், அந்த ஆட்கள் மறைந்து விட்டனர். அந்த நாக சர்ப்பம் ஓர் அழகிய ராஜகுமாரியாக மாறிற்று.

அவளிடம் இருந்த அமிர்தத்தைக் கொண்டு அவள் சம்பத்துக்கு உயிரும் உடல் வலிவும் கொடுத்தாள். அவளுடைய மந்திர சக்தியால் சுற்றிலும் இருந்த கற்களும் மரங்களும் மக்களாக மாறினார்கள். சாபத்தினால் அப்படி மாறி இருந்த யாமினி என்ற அந்த ராஜகுமாரியை மணந்து கொண்டு சம்பத் அந்த நாட்டின் அரசனாக வாழ்ந்து வந்தான்...

ஏழு ஆண்டுகள் ஆயின. யாமினி அவனிடம் ஒரு மாய மோதிரத்தைக் கொடுத்தாள். ''இந்த ஏழு ஆண்டுகளும் பூஜை செய்த பலனாக எனக்கு இந்த மோதிரம் கிடைத்தது. இதைப் போட்டுக்கொண்டு எதை வேண்டினாலும் நடக்கும். ஆனால் என்னை நாடுவது மட்டும் கூடாது. அப்படிச் செய்தால் நாம் பிரிய நேரிடும்'' என்று சொல்லி யாமினி அவனுடைய விரலில் அந்த மோதிரத்தை அணிவித்தாள்.

அன்று இரவு அவள் தூங்கும்போது, சம்பத் கண் விழித்து எழுந்தான். பெற்றோரைப் பார்க்க விரும்பி அந்த மோதிரத்தை விரலால் தொட்டுத் தன் ஆசையைச் சொன்

னுன். ஒரு நொடியில் பெற்ருேரிடம் வந்து சேர்ந்து விட்டான் அவன். இறந்து போய்விட்டதாகவே எண்ணியிருந்த பெற்ருேர் அளவிலாத மகிழ்ச்சி அடைந்தார்கள். அவனுடைய தாய் அவனுக்கு விதம் விதமாகச் சமைத்து விருந்து படைத்தாள். அப்போது அவனுக்கு யாமினியும் அங்கே வந்து அவர்களுடைய மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. மோதிரத்தைத் தொட்டு யாமினி அங்கே வரவேண்டும் என்று எண்ணிக் கொண்டான். மறுகணமே யாமினி அங்கே வந்து விட்டாள்! ஆனுல் அவளுடைய முகம் மாறி இருந்தது. அதன் காரணம் அவனுக்குப் புரியவில்லை.

அன்று இரவு அவளை ஆசையுடன் சயன அறைக்கு அழைத்துப் போனுன். சில நாட்களாக அவளைப் பிரிந்திருந்த சம்பத் அவளை இச்சையுடன் நாடினுன். அவளும் மறுக்கவில்லை. நள்ளிரவு ஆயிற்று. சம்பத் நன்ருக உறங்கிக் கொண்டிருந்தான். யாமினி மெல்ல எழுந்திருந்தாள். அவனுடைய விரலில் இருந்த மோதிரத்தை எடுத்துத் தான் அணிந்து கொண்டாள். மறுகணமே தன்னுடைய நாடடுக்குத் திரும்பி வந்து விட்டாள்! கண்விழித்தெழுந்த சம்பத் சுற்றுமுற்றும் பார்த்தான். யாமினியைக் காணவில்லை. அவனுக்கு விஷயம் புரிந்தது.

ஆனுல் அவனுல் எதுவும் செய்ய முடியவில்லை. மோதிரமும் மறைந்துவிட்டது. யாமினியை அடையும் வழியும் தெரியவில்லை. பெற்ருேரிடம் சொல்லிக் கொண்டு கால் நடையாகவே கிளம்பினுன். பல நாட்கள் காடு மேடுகளைக் கடந்து வந்த பிறகு, ஓர் அமைதியான இடம் கிடைத்தது. அங்கே அமர்ந்து ராமநாமத்தை ஜபிக்க ஆரம்பித்தான். அவனுடைய கவலைகள் யாவும் மெல்ல மெல்ல மறைந்தன.

அப்போது அந்த சாது அங்கே வந்து சேர்ந்தார். சம்பத் ஏதும் கேட்காமலே அவனுடைய குறையைப் புரிந்து கொண்டார். தன்னுடன் அவனை, ஆசிரமத்துக்கு அழைத்

துப் போனார். அங்கே அவனுக்கு ஒரு உடையும் பாதக் குறடுகளும் கொடுத்தார். ஓர் உடைவாளையும் அளித்தார்.

''இவற்றை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யட் டும்?'' என்று கேட்டான் சம்பத்.

''இந்தப் பாதக் குறடுகளைப் போட்டுக் கொண்டால் நீ நினைத்த இடத்துக்குப் போகலாம். இந்த உடையை அணிந்து கொண்டால் பிறர் கண்ணுக்குத் தெரியாமல் நடக்கலாம். இந்த வீரவாளினால் சண்டை போட்டால் எந்தப் போரிலும் வெற்றி பெறலாம்'' என்றார் அந்த சாது. சம்பத் அவரை வணங்கிவிட்டு, அந்தப் பொருட்களைப் பெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

யாமினியின் நாட்டில் பெரும் கொண்டாட்டமாக இருந்தது. அந்த அரசிக்கு மறுபடியும் திருமணம் நடப்ப தாக நிச்சயிக்கப் பட்டிருந்தது. பல தேசத்து அரசர்களும் சுயம்வரத்துக்கு வந்து கூடி இருந்தார்கள். யாமினி அலங் காரம் செய்துகொண்டு மாலையுடன் கிளம்பிக் கொண்டிருந் தாள். சம்பத் அங்கு வந்து சேர்ந்தான். அவளுடைய கையிலிருந்த மாலை பறிபோயிற்று.

''ஏதோ ஒரு சக்தி என்னைத் தடுக்கிறது சுயம் வரத்தை மறுநாளைக்கு வைத்துவிட்டுத் தனது அறைக்குத் திரும்பி விட்டாள் யாமினி. அங்கே மஞ்சத்தில் சாய்ந்து கொண்டாள். அவளுக்குப் பசியும் தாகமும் எடுத்தன. ஆனால் உணவுத் தட்டு, அவள் எடுத்ததும் பறிப்போயிற்று. பானங்கள் கண்காணாமல் மறைந்தன!

யாமினிக்குப் புரிந்தது. சப்பத் அங்கே வந்து சேர்ந்தி ருப்பதை உணர்ந்து கொண்டாள். கண் மூடி பிரார்த்தனை யில் ஆழ்ந்தாள். சம்பத் அங்கே தோன்றினான். நடந்த வற்றைச் சொன்னான்.

''என்னைத் தவறாகப் புரிந்து கொள்ளாதீர்கள்! எனக்குச் சாபத்திலிருந்து நிவர்த்தி கொடுத்தீர்கள். ஆனால் நான்

கொடுத்த மோதிரத்தை தவருகப் பயன்படுத்தினீர்கள். அதனுலேயே நாம் பிரிய வேண்டியதாயிற்று. நாட்டுக்கு அரசன் இல்லாமல் முடியாது. அதனுலேயே இப்போது சுயம்வரம் நடக்கிறது. மற்ற அரசர்களைத் தனித்தனியே போரிட்டு வென்று நீங்கள் சாமர்த்தியத்தைக் காட்ட முடியுமானுல் நான் உங்களையே மீண்டும் மணப்பேன்!'' என்ருள் யாமினி.

மறுநாள் சுயம்வரம். எல்லா அரசர்களும் வந்து கூடிஞர்கள். யாமினி தன்னை அழகாக அலங்கரித்துக்கொண்டு அங்கே வந்து சேர்ந்தாள். அங்கே கூடி இருப்பவர்களில் வாட்போரில் சிறந்தவர் யாரோ அவரையே தான் மணக்கப் போவதாக அறிவித்தாள்.

ஒவ்வொரு அரசனும் அவளை அடையும் ஆவலோடு சவால் விட்டு இறங்கிஞன். சம்பத்தும் அவர்களுடன் சேர்ந்துகொண்டான். அவனை யாருமே வெல்ல முடியவில்லை. சாது கொடுத்த வாள் அவனுக்கு வெற்றியைக் கொடுத்தது. சம்பத் யாமினியுடன் அந்த நாட்டின் அரசனுக நீண்ட நாட்கள் வாழத் தொடங்கிஞன்.

நான் ஒரு சுவாரசியமான கதை சொன்னேன். அப்படிச் சொன்னுல் தான் நீங்கள் கேட்பீர்கள் என்று எனக்குத் தெரியும்.

பிறவி என்னும் வாழ்க்கையில் பொருளுக்காக ஆசைப்படுவோருக்கு கஷ்டங்கள் நேருகின்றன. ராம நாமத்தைச் சொல்லி அந்த வாழ்க்கை ஆற்றைக் கடக்க முயலும்போது நன்மைகள் கிடைக்கின்றன. ஆனுல் இந்திரியங்கள் நம்மை ஆசைகாட்டி வதைக்கின்றன. அவற்றை வெற்றி கொண்டால் உண்மையான இன்பத்தை அடைந்து நீண்ட நாட்கள் வாழலாம். ஆனுல் உலக மாயைகளிடம் பற்று வைத்தவர்கள் அதிலிருந்து விடுபட இயலாது. அப்படி அவன் மறுபடி தவிக்கும்போது சத்வ, ராஜஸ, தாமஸ என்ற

மூன்று பண்புகள் அவனுக்குத் துணை புரிகின்றன. தன்னை எதிர்க்கும் சக்திகளை வென்று அவன் நிரந்தரமான அமைதியை அடைகிறான். உலகத்தில் சரியான முறையில் வாழ வேண்டிய நியதியைச் சொல்லுவதே இந்தக் கதை.

ஓம்

# 39

வட இந்தியாவில் இமாலயத்தின் சாரலில் ஒரு பெரிய மகான் வாழ்ந்து வந்தார். அவருடைய சாதனைகளையும் சக்திகளையும் வெகு சிலரே அறிந்திருந்தார்கள். ஆனால் அந்தச் சிலருக்கு அபூர்வமான நன்மைகள் கிடைத்தன. வியாதிகள் குணமாயின. உறுப்புகளை இழந்தவன் மீண்டும் பெற்றான். குழந்தை இல்லாதவர்களுக்கு மகப்பேறு உண்டாயிற்று.

தாமசப்பிரியன் என்ற ஒரு ஏழை அவருடைய புகழைக் பற்றிக் கேள்விப்பட்டான். அவன் மிகவும் நல்லவன். ஆனால் எதையும் சீக்கிரமாகச் சுறுசுறுப்பாகச் செய்யமாட்டான். பெயருக்கேற்றபடி எதையும் தாமதமாகச் செய்யத்தான் அவனுக்குத் தெரியும். தாமசப் பிரியன் அந்த மகானிடம் சேவை செய்யப் போனான். பல ஆண்டுகள் அவருக்கு பணிவிடை செய்தான். இறுதியில் அவர் ஒருநாள் அவனுக்கு ஒரு மந்திரக் கல்லைக் கொடுத்தார். ''இதை நீ பூஜை அறையில் வைத்துக் கொள். இதைக் கொண்டு நீ எந்த இரும்பு சாமானைத் தொட்டாலும் அது தங்கமாகி விடும். உனக்கு இது என் ஆசீர்வாதமாக இருக்கட்டும். ஆனால் ஒ

இந்தச் சக்தி இரண்டே நாட்களுக்குத்தான் இருக்கும். அதற்குள் உனக்குத் தேவையானதை முடித்துக் கொள்!'' என்று சொல்லி விட்டு அவர் போய் விட்டார்.

தாமசப்பிரியன் வீட்டுக்கு வந்தான். அவனுக்கு அபார மகிழ்ச்சி உண்டாயிற்று, 'விரைவிலேயே அவனுக்கு ஏராள மான தங்கம் கிடைக்கப் போகிறது. இனி என்ன குறை? இனி வேலையே செய்ய வேண்டியதில்லை. கடைக்குப்போய் ஒரு லாரி நிறைய இரும்பு சாமான்களை வாங்கிக் கொண்டு வந்து அவ்வளவையும் தங்கமாக்கிவிட்டால் அப்புறம்மூன்று தலை முறைகளுக்குக் கவலை இல்லை!' என்று எண்ணிக் கொண்டான். மந்திரக் கல்லைப் பூஜை அறையில் வைத்து விட்டுக் குளித்து விட்டு வர ஆற்றுக்குப் போனான். வெகு நேரம் நிதானமாகக் குளித்தான். பிறகு ஓட்டலுக்குப் போய் வயிறுரச் சாப்பிட்டான். சாப்பிட்ட களைப்பில் தூங்கி விட்டான். எழுந்திருக்கும்போது பொழுதுசாய்ந்து விட்டது.

'இனி மேல் கடை திறந்திருக்காது. நாளைக்குக் கடைக் குக் காலையிலேயே போய் இரும்புச் சாமான்களை வாங்கிக் கொண்டு வந்து விட வேண்டியதுதான்!' என்று தீர்மானம் செய்து கொண்டான். மறுநாள் தனக்குத் தேவையான பணத்தைப் பல நண்பர்களிடமும் போய்க் கடனாக வாங்கிக் கொண்டான். அதற்கே வெகு நேரமாகிவிட்டது. பிறகு இரும்புக் கடைக்குப் போய் இரும்பை ஏராளமாக வாங் கினான். ஆனால் அதைக் கொண்டுவருவதற்குத் தேவை யான லாரி வேண்டுமே? அது லேசில் கிடைக்கவில்லை.

'சாப்பிட்டுவிட்டுப் போகலாம்' என்று எண்ணிக் கொண்டான். உண்ட களைப்பில் மீண்டும் தூங்கிவிட்டான். எழுந்திருக்கும் போது கடையை மூடி விட்டார்கள். லாரி கிடைத்தாலும் சாமான்களை ஏற்றிக் கொண்டு வர முடிய வில்லை. அங்கேயே படுத்திருந்து விடியற்காலையிலேயே லாரி நிறைய சாமான்களுடன் வீடு திரும்பினான். அவ்வள

வையும் எடுத்து வீட்டில் பத்திரமாக அடுக்கி வைத்து விட்டுப் பூஜை அறைக்குப் போய் மந்திரக் கல்லை எடுத்து வந்தான், அந்த மகானை நினைத்துக் கொண்டு இரும்பு சாமான்களின் மீது கை வைத்தான். எதுவும் நடக்கவில்லை,

அவனுக்குப் புரிந்தது. இரண்டு நாள் கெடு தீர்ந்து விட்டது' அந்தக் கல்லின் மந்திரசக்தி மறைந்து விட்டது! ஐயோ மோசம் போனேனே? அந்தக் கல் கிடைத்தவுடன் வீட்டிலேயே இருந்த தாழ்ப்பாள், கரண்டி போன்ற இரும்பு சாமான்களையாவது தங்கமாக மாற்றியிருக்கலாமே? அதிக ஆசைப்பட்டு எல்லாவற்றையும் இழந்து விட்டேன். இப்போது வருந்தி என்ன லாபம்?' என்று புலம்பினான், தாமசப் பிரியன்.

இறைவனிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவர்களுக்கு அவர் எல்லா சம்பத்துக்களையும் கொடுக்கிறார். ஆனால், அதைப் போற்றி வைத்துக் கொள்ள உழைப்பும் தேவை. சோம்பேறித்தனமாக இருந்து விட்டு நான் பக்திமானாக இருந்தேன். கடவுள் எனக்கு அனுக்கிரகம் செய்யவில்லை என்று சொல்லிப் பயன் இல்லை. அவர் தரும் சிறு சந்தர்ப்பங் களையும் சாதுரியமாக உணர்ந்து கொண்டு புத்திசாலித்தன மாகவும், உழைப்புடனும் காரியங்களில் ஈடுபடவேண்டும்.

 

## 40

விஷ்ணு பக்தரான நாராயணனும் சிவபக்தரான ஈசு வரனும் மழைக்காக ஒரு நாள் ஒரு மரத்தடியில் ஒதுங்கினார் கள். மழை நிற்கவில்லை. பக்கத்தில் ஒரு பழைய சிதிலமான

கூரை வீடு இருந்தது. நாராயணன் அங்கே போய் நின்று கொண்டார். ஈசுவரன் போகவில்லை. அவருக்கு விஷ்ணு பக்தர்களை அறவே பிடிக்காது. மழை அதிகமாகி விடவே வேறு வழியின்றி அவரும் போய் நின்று கொண்டார். ஆனால் சிறிது நேரம் வாய் திறந்து பேசவில்லை. நாராயணனும் பதில் சொல்லவில்லை. அவருக்கு சிவபக்தர்களைக் கண்டால் கட்டோடு பிடிக்காது.

மழை பெய்து கொண்டிருந்தது. அங்கே வந்து ஒதுங்கு வார் வேறு யாரும் இல்லை. இருவரும் பேசுவதற்கும் வகை இல்லை. கடைசியில் அவர்கள் இருவருமே பேசிக் கொள்ள வேண்டியதாயிற்று. ஏதேதோ பேசியவர்கள் கடைசியில் தங்களுடைய மதப்பிரிவுதான் மேலானது என்பதை வலியுறுத்திச் சொல்லத் தொடங்கினார்கள். சைவம்தான் மேலானது என்று ஈஸ்வரனும் வைணவம்தான் மேலானது என்று நாராயணனும் போட்டி போட்டுக் கொண்டு பேச ஆரம்பித்தார்கள்.

''நீர் சைவராக இருக்கலாம். அதனால் சிவன் மேலான வராக ஆகிவிடமுடியாது. கவனியும்! நான் நெற்றியில் செங்குத்தாக நாமம் போட்டுக் கொண்டிருக்கிறேன். நீர் படுக்கை வசமாக விபூதிப் பட்டைப் போட்டுக் கொண் டிருக்கிறீர். இப்போது நாம் மழைக்கு ஒதுங்கியுள்ள ஓட்டுக் கூரை செங்குத்தான சுவர் மீது தான் நிற்கிறது. அதனால் வைணவம்தான் காப்பாற்றுகிறது'' என்றார் நாராயணன்.

''நீர் வைணவராக இருக்கலாம். அதனால் நாராய ணன் மேலானவராக ஆகிவிட முடியாது. கவனியும்! நான் நெற்றியில் படுக்கை வசமாக விபூதிப் பட்டை போட்டுக் கொண்டிருக்கிறேன். எங்கள் சைவம் சுகமாகப் படுத்துக் கொண்டிருக்கிறது. வைணவம் சுமந்து-கொண்டு தாங்கிக் கொண்டு நிற்கிறது! எது மேல்?'' என்று கேட்டார், ஈசுவரன்.

நாராயணன் குழம்பிப் போனார். பெருமூச்சு விட்டபடி நிமிர்ந்தார். அவருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. ''நன்றாகக் கவனித்துப்பாரும். படுக்கை வசத்தில் உள்ள சட்டத்தின் மேல் செங்குத்தான உத்தரம் தான் கூரையைத் தாங்கிக் கொண்டு நிற்கிறது. உத்திரம் இல்லையானால் கூரை உமது தலையில் விழுந்து விட்டிருக்கும்!'' என்றார் பெருமையோடு.

ஈசுவரன் நிமிர்ந்து பார்த்தார். ''அட நாராயணா உமக்கு இது தெரியவில்லையே? உத்திரம் கூரையைத் தாங்கவில்லை. படுக்கை வசத்தில் உள்ள விட்டங்கள் மீது தான் ஓடுகள் நின்று கொண்டிருக்கின்றன. அவை தான் கூரையைத் தாங்குகின்றன. விட்டங்களை உருவிப் போடும் கூரை நிற்கிறதா பார்க்கிறேன்!'' என்றார் ஈசுவரன் ஒரு தனிக் கம்பீரத்தோடு!

நாராயணன் இதை எப்படித் தாங்கிக் கொள்ளமுடியும் வெளியே போனார். கொட்டும் மழையில் நின்று கொண்டு கூர்ந்து கவனித்தார். நிமிர்ந்த மார்புடன் உள்ளே திரும்பினார். நீரும் வெளியே போய்ப் பாரும், அப்போதுதான் உமக்குப் புரியும், ஓடுகள் குத்து வசத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. அவை மீதுதான் மழை பெய்து தண்ணீர் வழிந்து ஓடி வந்து கொண்டிருக்கிறது. குத்து வசமான ஓடுகள் தாம் உம்மையும், என்னையும் இந்த இடத்தையும் காப்பாற்றிக் கொண்டிருக்கின்றன. அதாவது உலகத்தில் எல்லாரையும் காப்பாற்றி ரட்சிப்பவன் நாராயணன்தான். இப்போதாவது புரிகிறதா?'' என்று மார்பைத் தட்டித் தட்டிக் கொண்டார்.

ஈசுவரன் இப்போது வெளியேபோனார். கூர்ந்து கவனித்தார். அவர் கண்களுக்குக் கூரைக்கு மேல் ஏதும் புலப்படவில்லை. விரிந்த ஆகாயம்தான் தெரிந்தது. அதற்கு குத்து வசம் ஏது? படுக்கை வசம் ஏது? அவருக்கு கடுங்கோபம்

உண்டாயிற்று. யார் மீது? நாராயணன் மீது அல்ல, அவர் சொல்லிக் காட்டிய அவருடைய வைணவ மதப்பிரிவை அடையாளம் காட்டும் ஓடுகளின் மீதுதான்! கொட்டும் மழையில் மளமளவென்று கூரை மீது ஏறினார். மளமள வென்று ஓடுகளை உருவிக் கீழே போட்டு உடைக்க ஆரம்பித்தார்.

உள்ளே நின்று கொண்டிருந்த நாராயணன் மீது மழை பெய்ய ஆரம்பித்தது. அவருக்குக் கோபம் உண்டா யிற்று யார் மீது? ஓடுகளை உருவிப் போட்ட ஈசுவரன் மீது அல்ல! சைவத்தை அடையாளம் காட்டும் மர விட்டங் கள் மீதுதான். சுவர் மீது ஏறி, விட்டங்களை உருவத் தொடங்கினார். விட்டங்கள் கீழே விழுந்தன. ஓடுகளும் அதன் மேல் விழுந்தன. நாராயணன் கீழே விழுந்தார். அவருக்குப் பலத்த அடி பட்டது. ஈசுவரன் கூரையிலிருந்து கீழே அவர் மீது விழுந்தார். அவருக்கும் பலமாகக் காயம் பட்டது.

இருவருக்கும் நினைவு தப்பி விட்டது. அந்தப்பக்கமாக வந்த வண்டிக்காரன் ஒருவன் அவர்கள் மீது பச்சாதாபம் கொண்டு, தூக்கிக் கொண்டு போய் மருத்துவ மனையில் சேர்த்துக் காப்பாற்றினான்.

கஷ்டம் வரும் போது இறைவனின் அருளாகிய நிழலில் ஒதுங்குகிறோம். அதுதான் நம்மை காப்பாற்றுகிறது. அதற்குத்தான் நாம் நன்றி சொல்லிப் பக்தி செலுத்த வேண்டும். மதம்-இனம் ஆகிய பிரிவுகளில் குழம்பிக் கொண்டு ஆண்டவனையே திருப்பி கேள்வி கேட்கத் தொடங்கினால், அருள் கிடைக்காது. தொல்லைகள் நம்மீது விழுந்து நம்மையே அழித்து விடும்.

• •

# 41

அந்த ஊரிலேயே அவன்தான் ரொம்பப் பணக்காரன். அவனுக்குப் பெயர் தக்கோர். ஊரார் அவனைத் தக்கோர்ஜீ என்று மரியாதையுடன் கூப்பிடுவது வழக்கம். ஆனால் தக்கோர்ஜிக்குப் பணம் செலவு செய்வது என்றால் ரொம்ப 'அலர்ஜி'. அவசியமான காரியத்துக்குக் கூடச் செலவு செய்ய மாட்டான்.

தக்கோர்ஜி ஒரு பழைய தொப்பி வைத்திருந்தான். எண்ணெய்க்கறை படிந்த அந்த அழுக்குத் தொப்பியை எப்போதும் எங்கேயும் எடுத்துக் கொண்டு போவான். பொதுமக்கள் அதைப் பார்த்துக் கேலி செய்வது வழக்கம். "நீ ஒரு புதிய தொப்பி வாங்கிக் கொள்ளக்கூடாதா...?" என்று கேட்டார்கள். "பணத்துக்கு நான் எங்கே போவேன்?" என்று தக்கோர்ஜி பதில் சொல்லுவான். 'தக்கோர்ஜிக்குப் புதிய தொப்பி வாங்கப் பணம் தேவை!' என்று அவர்கள் நிதிவசூல் செய்வார்கள். இவற்றையெல்லாம்கூட அவன் பெரிதாகப் பொருட்படுத்தவில்லை.

தக்கோர்ஜிக்கு ஒரு விநோதமான பழக்கம் உண்டு. யாருமே கிட்டே கூடப் போக விரும்பாத பழைய சாமான்களை அவன் மலிவான விலைக்கு வாங்குவான். அதைச் சரி செய்து அதிக விலைக்கு விற்று லாபம் அடைவான். ஒரு தடவை அதைப்போல ஒரு பழைய கண்ணாடி சாமான் குவியலை அவன் சொற்ப விலைக்கு ஏலம் எடுத்தான். அவற்றை வண்டியில் ஏற்றிக்கொண்டு வந்து வீட்டின் பின்புறம் குவித்து வைத்துக் கொண்டான்.

அதில் இருந்த பாட்டில்களை அவன் பார்த்து வந்த போது, அவற்றுக்கு இடையில் 'சீல்' வைத்த பெரிய பாட்டில் ஒன்று இருந்தது. தக்கோர்ஜி அதை உள்ளே எடுத்துக் கொண்டு போய், இரகசியமாக 'சீலை' உடைத்துப் பார்த்தான். உள்ளே அபூர்வமான மணம் நிறைந்த 'செண்ட்' இருந்தது. அவ்வளவு செண்டையும் அவன் விற்றால் இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் கிடைக்கும்! ஆனால், அவ்வளவு பெரிய பாட்டிலை விலை கொடுத்து வாங்குவது யார்? சின்னச் சின்னப் பாட்டில்களில் போட்டு ஒன்று பத்து ரூபாய் என்று விற்கலாம் எனத் தீர்மானம் செய்து கொண்டான். அந்தப் பாட்டிலை வெறும் மூடி போட்டு இறுகமூடி மேஜை மீது வைத்து விட்டான்.

தக்கோர்ஜி ஏலத்தில்செலவு செய்தது நூறுரூபாய்தான். கிடைக்கப் போவதோ பெரியலாபம்! இதனால் உண்டான மகிழ்ச்சியுடன் தக்கோர்ஜி தனது நண்பன் வீட்டிற்குப் போனான். அந்த நண்பன் காப்பிகொண்டு வந்து வந்து கொடுத்தான். அதைச் சாப்பிடும் போது தக்கோர்ஜியிடம் அந்த நண்பன் "இந்தப் பழைய தொப்பியை நீ ஏன் இன்னும் வைத்துக் கொண்டிருக்கிறாய்? எல்லோரும் உன்னை கேலி செய்கிறார்களே? இதைத் தூக்கி எறிந்து விடுவது தானே...? புதிதாக வாங்கா விட்டாலும் பரவாயில்லை" என்று சொன்னான்.

"இது அவ்வளவு பழையதாக இல்லை. இருந்தாலும் நீ சொல்லுவதற்காகப் புதிய தொப்பி ஒன்றை வாங்கிக் கொள்ளுகிறேன். நான் ஒரு சின்ன வியாபாரம் செய்யப் போகிறேன். அதில் நல்ல லாபம் கிடைக்கப் போகிறது. அதில் புதிய தொப்பி வாங்கிக கொள்ளலாம்" என்று சொன்னான் தக்கோர்ஜி. இருவரும் அந்த ஊரில் உள்ள நீச்சல் குளத்துக்குப் போனார்கள். தக்கோர்ஜி பணம் கொடுக்கமாட்டான். அது அந்த நண்பனுக்குத் தெரியும். அவனே பணம் கொடுத்து அவனுக்கும் அனுமதி சீட்டு வாங்கி உள்ளே அழைத்துக் கொண்டு போனான்.

அந்த ஊரின் உயர் நீதிபதி ஒருவர் அங்கே குளிப்பதற்கு வந்தார். அவர் தக்கோர்ஜியின் தொப்பியைப் போலவே விலையுயர்ந்த புதிய தொப்பி ஒன்றை அணிந்து கொண்டு வந்தார். குளிக்கப் போகும் போது அதை அவர் ஸ்டாண்டில் மாட்டிவிட்டுப் போய் குளிக்கத் தொடங்கினார். இவை எதுவுமே தக்கோர்ஜிக்குத் தெரியாது.

தக்கோர்ஜி குளித்துவிட்டுக் கரையேறி வந்தபோது பழைய தொப்பியைக் காணவில்லை. ''இது எனது நண்பன் செய்த குறும்பாகத்தான் இருக்க வேண்டும். அவன்தான் என்னுடைய பழைய தொப்பியைப் பற்றிக் கேலி செய்து கொண்டிருந்தான்'' என்று சொல்லிவிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான் தக்கோர்ஜி. அவனுடையதைப் போலவே, புதிய விலையுயர்ந்த தொப்பி ஒன்று ஸ்டாண்டில் மாட்டப் பட்டிருந்தது. 'இதோ ஒரு புதிய தொப்பியையும் பதிலுக்கு வாங்கி வைத்திருக்கிறானே... நல்ல வேலை செய்தான்! பணம் கேட்டால் நான் கொடுக்கப் போவதில்லை!'' என்று எண்ணிக்கொண்டு தக்கோர்ஜி அந்தப் புதிய தொப்பியைத் தலையில் மாட்டிக் கொண்டு வீட்டுக்குப் போய்விட்டான்.

குளித்து விட்டுத் திரும்பி வந்த உயர் நீதிபதி தனது தொப்பியைக் காணாமல் பலரையும் விசாரித்தார். யாரிடமும் சரியான பதில் கிடைக்காததால் போலீசில் புகார் கொடுத்தார். போலீசார் நீச்சல் குளத்துக்கு வந்து தேடினார்கள். அங்கே ஒரு மூலையில் பழைய தொப்பி ஒன்று கிடந்தது. ''இது தக்கோர்ஜியின் தொப்பி அல்லவா'' என்று போலீஸ்காரர்கள் பலரும் பேசிக் கொண்டார்கள். தக்கோர்ஜி தான் புதிய தொப்பியை எடுத்துக் கொண்டு போய்விட்டான் என்று தீர்மானம் செய்து கொண்டு அவனுடைய வீட்டுக்குச் சோதனை போடுவதற்காகப் போய்விட்டார்கள்.

தக்கோர்ஜி வீட்டில் அமர்ந்து நிதானமாகப் பணக் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தான். போலீசார்

வந்ததை அவன் கவனிக்கவில்லை. அவன் கொண்டு வந்திருந்த புதிய தொப்பியை 'ஸ்டாண்டி'ல் மாட்டி வைத்திருந்தான். போலீசார் அதைக் கண்டுபிடித்து அவனையும் பிடித்துக் கொண்டார்கள். தக்கோர்ஜி தனக்கு ஒன்றுமே தெரியாது என்று சொல்லி முறையிட்டான். ஆனால், தனது பழைய தொப்பிக்குப் பதிலாகப் புதிய தொப்பியை எடுத்துக் கொண்டு வந்து விட்டதாகவும், அது அந்த நீச்சல் குளத்து அறையில்தான் கிடைத்ததாகவும் மட்டும் ஒப்புக் கொண்டான்.

போலீசார் அவன் மீது வழக்குப் போட்டார்கள். நீதிபதிக்கு ரொம்பக் கோபம். தக்கோர்ஜி தனது குற்றத்தை ஒப்புக்கொண்டு விட்டதாகக் கருதித் தீர்ப்பு வழங்கினார். மதிப்புக்குரிய நீதிபதியின் உடைமையைக் களவாடியது பெரும் குற்றம் என்று அவனுக்கு ஆயிரம் ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது. அபராதம் செலுத்தத் தவறினால் இரண்டு வாரம் கடுங்காவல் தண்டனை என்று தீர்ப்புக் கூறி விட்டார்.

ஜெயிலுக்குப் போகப் பயந்து கொண்டு, தக்கோர்ஜி ஆயிரம் ரூபாய் அபராதத்தைக் கட்டிவிட்டு, வாய் விட்டுப் புலம்பியபடியே வீடு வந்து சேர்ந்தான். வீட்டில் போலீசார் திருப்பிக் கொண்டு வந்த பழைய தொப்பி அவனுடைய கண்ணிற்பட்டது. அவனுக்குக் கோபம் பொங்கி வந்தது. ''ஊரார் கேலி செய்தபோதே நான் உன்னைக் கண்காணுமல் எங்கேயாவது தொலைத்துவிட்டிருக்க வேண்டும். அப்படிச் செய்யாதது என் தவறு. அதன் பலனைத்தான் இப்போது அனுபவிக்கிறேன். அநியாயமாக எனக்கு ஆயிரம் ரூபாய் நஷ்டம் ஏற்பட்டு விட்டது!'' என்று அந்த தொப்பியை எடுத்துக் கொண்டு போய் அந்த ஊரில் உள்ள குடி தண்ணீர்க் குளத்தில் எறிந்துவிட்டு வந்தான் தக்கோர்ஜி.

''அப்பாடா! துரதிருஷ்டம் பிடித்த அந்தத் தொப்பி தொலைந்துவிட்டது. இனிமேல் நிம்மதியாக இருப்பேன்!''

என்று சொல்லிக் கொண்டான் தக்கோர்ஜி. தனது கஷ்டங்களிலிருந்து விடுபட்டுவிட்டதாக அவன் எண்ணிக் கொண்டான். ஆனால், அவனுடைய கஷ்டங்கள் அப்போது தான் தொடங்கின என்பதை அவன் தெரிந்து கொள்ள வில்லை...

தக்கோர்ஜி வீட்டுக்குத் திரும்பினான். "தொப்பி போனது நஷ்டம்தான். அதற்கு ஈடாக நான் விற்பனை செய்யப் போகும் 'சென்ட்'டைக் கொஞ்சம் தண்ணீர் கலந்து விற்றுவிடுகிறேன்!" என்று எண்ணிக் கொண்டான். பெரிய பாட்டிலிலிருந்து அதை எடுத்துச் சிறுபாட்டில்களில் நிரப்பி ஜன்னல் ஓரமாக அடுக்கிவைத்துவிட்டுத் தூங்கப் போய்விட்டான்.

ஆற்றில் தக்கோர்ஜி விட்டெறிந்த தொப்பி மீனவர்களின் வலையில் சிக்கியது. அந்தப் பழைய தொப்பியை அவர்கள் ஒரு பெரிய மீன் என்று எண்ணிக் கரைக்குப் பத்திரமாகக் கொண்டு வந்தார்கள். இருட்டில் ஆளுக்கு ஒரு பங்காகப் பிரித்துக் கொண்டபோது ஒருவன் அதை எடுத்துக் கொண்டான். அது ஒரு பழைய தொப்பி என்று புரிந்து கொண்டதும், அவனுக்கு மிகுந்த வெறுப்பு உண்டாயிற்று. ஆத்திரத்துடன் வரும் வழியிலேயே அதை தூக்கி எறிந்து விட்டான். ஜன்னல் வழியாகப் பறந்து வந்த தொப்பி, தக்கோர்ஜி மேஜை மீது அடுக்கி வைத்திருந்த பாட்டில்களின் மீது விழுந்தது. அவ்வளவு பாட்டில்களும் கீழே விழுந்து நொறுங்கி விட்டன.

காலையில் எழுந்து பார்த்த தக்கோர்ஜி பிரமித்துப் போனான். அவன் அருமையாகச்சேகரித்துவைத்த 'சென்ட்' அவ்வளவும் வீணாகி விட்டது. அதுவும் அந்தத்துரதிருஷ்டம் பிடித்த பழைய தொப்பியினால்தான் என்று தெரிந்ததும் அவனுடைய மனம் கசந்து போயிற்று. அந்தத் தொப்பி எப்படித் திரும்பி வந்தது என்பதும் அவனுக்குப் புரிய வில்லை!

அந்தத் துரதிருஷ்டம் பிடித்தத் தொப்பியை எப்படியாவது தொலைத்துத் தலைமுழுகி விடவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான் தக்கோர்ஜி. அதைஎடுத்துக்கொண்டு கொல்லைப்புறம் போனான். மரத்தடியில் ஒரு குழி தோண்டி அதைப் புதைக்கத் தொடங்கினான். அவனிடம் நிறைய வேலையாட்கள் இருக்கும்போது தக்கோர்ஜிமண் வெட்டியை எடுத்துக் கொண்டு தோண்டுவதைப் பார்க்கப் பக்கத்து வீட்டுக்காரர்களுக்கு மிகுந்த வியப்பு உண்டாயிற்று. அவர்களைப் பார்த்ததும் தக்கோர்ஜி உள்ளே போய்விட்டு, இருட்டியதும் திரும்பி வந்து தோண்ட ஆரம்பித்தான்.

'தக்கோர்ஜி நிறைய திருட்டுப்பணம் வைத்திருக்க வேண்டும். அதை மறைக்கத்தான்குழிதோண்டுகிறான்' என்று அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள் எண்ணிக் கொண்டார்கள் அந்தத் தகவலைப் போலீசாரிடம் போய்ச் சொல்லிவிட்டார்கள். மறுநாள் காலை போலீஸ் தக்கோர்ஜியின் வீட்டுக்கு அவனைத் தேடிக்கொண்டு வந்து விட்டது. அவனுடைய தோட்டத்தில் மறைத்து வைக்கப்பட்டுள்ள பொருளைச் சோதனைப் போட விரும்பினார்கள்.

தக்கோர்ஜிக்கு ஒரே வெட்கம். அங்கே மறைக்கப்பட்டிருக்கும் பொருளை அவன் எப்படிவெளியே சொல்லமுடியும்? அவன் மறுத்து விட்டான். போலீசார் விடவில்லை. தோட்டம் முழுவதும் உள்ள மண்ணைக் கொத்தி கிளறிச் சோதனை போட்டார்கள். அங்கே கிடைத்த அழுக்குப் பொட்டலம் போலீசாரால் கோர்ட்டாரிடம் ஒப்படைக்கப் பட்டது. அவர்கள் அதைப் பிரித்து பார்த்தபோது அழுக்குத் தொப்பி என்ற இரகசியம் வெளியாயிற்று. கோர்ட்டில் கூடி இருந்த அவ்வளவு பேரும் அதைக் கண்டு சிரித்தார்கள். மிகுந்த அவமானத்துடன் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு வீடு திரும்பினான் தக்கோர்ஜி.

அன்று இரவு வீட்டை விட்டுக் கிளம்பினான். அந்தத் தொப்பியை ஒரு துணிஉறையில் போட்டு எடுத்துகொண்டு,

ஊரை விட்டுத் தொலைவில் இருந்த தண்ணீர்த் துறைக்குக் கொண்டு போனான். அங்கே ஒரு கருங்கல்லில்கட்டி அதைத் தண்ணீரில் போட்டு விட்டான். அந்த ஊருக்குக் குடிதண்ணீர் வழங்கும் துறை அதுதான். அங்கிருந்து தண்ணீரைக் குழாய் மூலம் வெளியேற்றி ஒரு தொட்டியில் தேக்கி அங்கிருந்து எல்லா இடங்களுக்கும் அனுப்புவார்கள்.

திடீரென்று ஊரில் குழாயில் தண்ணீர் வரவில்லை. எல்லாருக்கும் ரொம்பக் கவலையாகப் போய் விட்டது. அந்த ஊரின் மாநகராட்சிஅலுவலர்களுக்கும்ஒன்றும் புரியவில்லை. தண்ணீர் வரவேண்டிய முக்கியமான குழாய்களையெல்லாம் சோதனை போட்டார்கள். சுத்தம் செய்யும் இடத்துக்குப் போகும் முக்கியமான குழாய் அடை பட்டிருந்தது. சேற்றுடன் சேர்ந்து அதை அடைத்துக் கொண்டிருந்த பொருள் தக்கோர்ஜியின் தொப்பி!

அதிகாரிகள் அதைப்போலீசாரிடம் ஒப்படைத்தார்கள். கோர்ட்டில் விசாரணை நடந்தது. நீதிபதிக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று. மீண்டும் மீண்டும் அந்தத் தொப்பி விவகாரம் எப்படியோ அவருடைய கோர்ட்டுக்குவருவதைக் கண்டு பொறுமை இழந்தார். "இந்த ஊரின் குடிதண்ணீர் வசதியைப் பாழ்படுத்தியதற்காக 2500 ரூபாய் அபராதம் விதிக்கிறேன்" என்று தீர்ப்புக் கூறி விட்டார். தலைகுனிந்தபடி அந்தத் தீர்ப்பை ஏற்றுக்கொண்டு அபராதத் தொகையைக் கட்டிவிட்டு வெளியே வந்தான் தக்கோர்ஜி.

"என்னை ஏன் விடாமல் இப்படி என் கழுத்தை அறுக்கிறாய்? நான் உன்னை எங்கே விட்டுவிட்டு வந்தாலும் பின் தொடர்ந்து வந்து விடுகிறாய். எங்கே விட்டெறிந்தாலும் யாராவது கொண்டு வந்து கொடுத்து விடுகிறார்கள். எப்போது வந்தாலும் உன்னோடு துரதிருஷ்டத்தையும் கொண்டு வந்து விடுகிறாய். எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. உன்னை இப்போது எரித்துவிடுகிறேன் பார்!" என்று சொல்லியபடி அந்தத் தொப்பியை நெருப்புக் குச்சி

யைக் கிழித்துப்பற்றவைத்தான் தக்கோர்ஜி. அதுநெருப்புப் பற்றிக் கொண்டு எரிந்தது. அதைத் தூக்கி வெளியே விட்டெறிந்தான்!

நெருப்பும் புகை மண்டலமாக வீட்டைச் சூழ்ந்து கொண்டது. அக்கம் பக்கத்துவீட்டுக்காரர்கள் நெருப்பணைக் கும் நிலையத்துக்குத் தகவல் கொடுத்தார்கள். அவர்கள் வந்து சேருவதற்குள் அவன் வீடு பாதி தீக்கிரையாகி விட்டது. தக்கோர்ஜியின் பணத்தாசையும் அந்த நெருப்பில் எரிந்து போய்விட்டது. இப்போது அவன் இமயமலைச் சார லில் ஒரு மடத்தில் சேர்ந்து சன்னியாசியாக வாழ்ந்துகொண் டிருக்கிறான். யாராவது அவனைக்கேட்டால், ''என்னுடைய குருநாதர் ஒரு தொப்பி!'' என்று மரியாதையுடன் சொல்லு கிறான் அவன்!

நம் ஒவ்வொருவரிடம் அதைப் போல ஒரு பழைய தொப்பி இருக்கிறது. தக்கோர்ஜியைப் போல நாம் அதைத் துறக்க முடியாமல் தடுமாறுகிறோம். அதுதான் நம்மைச் சூழ்ந்துள்ள மாயை. பழகப் பழக நமக்கு அதன்பால் உள்ள பற்றுதல் அதிகமாகிறது. அதனால் துன்பம் அதிகமாகும் போது நாம் உதறித் தள்ள நினைக்கிறோம் ஆனால் அது நம்மை விடுவதில்லை. மெஞ்ஞானம் கிடைக்கும் போது மாயை எரிந்து அழிந்து விடுகிறது. பற்றுதல்களும் விட்டுப் போகின்றன!

● ●

## 42

லங்கோலி என்ற கிராமத்தில் கனகபால் என்ற மிராசுதார் வாழ்ந்து வந்தான். அவன் பெரிய கருமி. தன்னை நாடிவரும் எந்த ஏழைக்கும் உதவி செய்யமாட்டான்.

பிரேம்சந்த் என்ற ஏழை அவனிடம் கணக்குப்பிள்ளையாக வேலை பார்த்து வந்தான். அவனுக்குப் பிறர் மீது பச்சாதாபம் காட்டும் சுபாவம் உண்டு. யார் வந்து கேட்டாலும் தனது சொற்ப வருவாயிலிருந்து உதவி செய்வான். பிரேம்சந்தின் சிறு வீடு கனகபாலின் பங்களாவுக்குப் பக்கத்திலேயே இருந்தது.

ஒரு நாள் இரவு ஒரு மகான் கனகபாலின் வீட்டை நாடி வந்தார். கதவைத் தட்டிப் பசிக்கு உணவு அளிக்கும்படிக் கேட்டார். தூங்கிக் கொண்டிருந்த கனகபாலுக்கு ரொம்பக் கோபம் வந்துவிட்டது. கதவைத் திறந்து "வேளைகெட்ட வேளையில் வந்து சாப்பாடு போடச் சொல்லுகிறீரே? ஒன்றும் இல்லை, போம்!" என்று அந்த மகானைத் திட்டி விரட்டிவிட்டான்.

வெளியே நடந்து வந்த அந்த மகானைப் பார்த்தான். பிரேம்சந்த், அவரை வணங்கி "என்னுடைய குடிசைக்கு வாருங்கள். நான் சாப்பாடு போடுகிறேன். அங்கேயே நீங்கள் இரவு தங்கலாம்!" என்று சொல்லி அழைத்துக் கொண்டு போனான். தான் சாப்பிட வைத்திருந்த உணவை அவருக்குப் பரிமாறினான். தன்னுடைய பாயையும் தலையணையையும் அவருக்குக் கொடுத்து விட்டு அவன் தரையில் படுத்து உறங்கினான்.

விடியற்காலையில் எழுந்து நதிக்குச் சென்று நீராடி விட்டு வந்தார் அந்த மகான். அந்தக் குடிசையில் அமர்ந்து பூஜை செய்ய ஆரம்பித்தார் மகான். உணவருந்துவதற்காகச் சமைத்திருந்த உணவைப் பிரேம்சந்தின் மனைவி நைவேத்தியத்துக்குக் கொண்டு வந்து வைத்தாள். அதைக் கண்டதும் அவருடைய முகம் மலர்ந்தது. "நீங்கள் இருவரும் மிக நல்லவர்களாக இருக்கிறீர்கள். உங்களுக்கு என்ன வேண்டும்? மூன்று வரம் கேளுங்கள்!" என்றார் அந்த மகான்.

''ஐயா! நான் இப்போது சந்தோஷமாகவே இருக்கிறேன். இப்படியே நான் மன அமைதியுடன் இருந்தால் போதும். எப்போதும் பிறருக்கு உதவி செய்ய வேண்டும். அப்படி உதவக்கூடிய வாய்ப்பும் வசதியும் எனக்குக் கிடைத்தால் போதும்'' என்றான் பிரேம்சந்த்.

''அந்த இரண்டும் உனக்கு என்றும் இருக்கும். நீ கேட்காமலேயே மூன்றாவது வரத்தை நான் கொடுக்கிறேன். பல விருந்தினர்களும் வந்து தங்கிப் போகும்படி உன்னுடைய இருப்பிடம் சகல வசதிகளுடன் பெரிதாக, நிறைவுடன் விளங்கும்'' என்று சொல்லி அருளினார், அந்த மகான். நான் பக்கத்து ஊருக்குத்தான் போகிறேன், உனக்கு எது தேவையானாலும் அங்கு வந்து கேள்'' என்று கூறிக் கிளம்பிப் போய்விட்டார்.

மறுநாள் காலை கண் விழித்து எழுந்தான் பிரேம்சந்த். அவனால் நம்பமுடியவில்லை. அவனுடைய குடிசை இருந்த இடத்தில் பெரிய பங்களா இருந்தது. அதில் சகல வசதிகளும் இருந்தன. ஒரு அறை முழுவதும் அவனுடைய செலவுக்கு என்றென்றைக்கும் போதும்படியாக தங்க நாணயங்கள் நிறைந்திருந்தன. 'எல்லாம் அந்த மகான் அருளிய வரப்பிரசாதம்!' என்று பிரேம்சந்தும் அவனுடைய மனைவியும் மகிழ்ந்து போனார்கள். ஊரில் உள்ளவர்களை அழைத்துப் பெரிய சமாராதனையும் நடத்தினார்கள்.

ஆச்சரியமாக இருக்கிறதே? இந்த பிரேம்சந்துக்கு இப்படி ஓர் ஐசுவரியம் எப்படிக் கிடைத்தது? என்று வியந்து போனான் கனகபால். அவனை அழைத்து விசாரித்தான். பிரேம்சந்த் நடந்தது அவ்வளவையும் அப்படியே ஒளிக்காமல் கூறினான். அதைக் கேட்ட கனகபாலுக்கு பெரிய அதிர்ச்சி உண்டாயிற்று. ''அடடா அன்று இரவு என்னை நாடி வந்த அதிருஷ்டத்தை விரட்டிவிட்டேனே? அன்று அவருக்குச் சோறு போட்டிருந்தால் இப்போது இவ்வளவும் எனக்குக் கிடைத்திருக்குமே! என்று எண்ணிக் கொண்டான்

பிரேம்சந்திடமிருந்து மகான் பக்கத்து ஊரில் இருப்பதைத் தெரிந்து கொண்டான்.

உடனே தனது குதிரை வண்டியைப் பூட்டிக் கொண்டு அங்கே கிளம்பிப் போனான். கோயிலில் அமர்ந்து பூஜை செய்து கொண்டிருந்த அவர் காலில் விழுந்து, தான் செய்த தவறுகளுக்கு மன்னிப்பு கேட்டுக் கொண்டான். பிறகு "பிரேம்சந்துக்கு கொடுத்ததைப் போல எனக்கும் மூன்று வரங்கள் கொடுக்க வேண்டும் சுவாமி!" என்று வேண்டிக் கொண்டான். அவர் புன்னகை செய்து கொண்டார். "சரி! நீ அடுத்த படியாக ஆசைப்படும் மூன்றும் அப்படியே நிறைவேறும்" என்று கூறி அனுப்பிவிட்டார்.

திரும்பிவரும் வழியில் குதிரை 'மக்கர்' செய்ய ஆரம்பித்தது. கனகபாலுக்கு கோபம் உண்டாயிற்று. அதைச் சாட்டையால் அடித்தான். அது படுத்துக் கொண்டு சண்டித்தனம் செய்ய ஆரம்பித்துவிட்டது. "என்னை இப்படித் தொந்தரவு செய்வதைவிட இது செத்து ஒழிந்து போகலாம்!" என்று ஆத்திரத்துடன் கூறினான். குதிரை இறந்துவிட்டது! அங்கிருந்து அவ்வளவு தூரமும் பசியுடன் நடந்து வந்தான்.

வீட்டுக்கு வந்து சேர்ந்தவனுக்கு மனைவி சமைத்துப் படைக்கவில்லை. கனகபாலுக்கு ரொம்ப ஆத்திரம். "இப்படி ஒரு வீடு எனக்கு இருப்பதைவிட அது எரிந்து சாம்பலாகலாம்!" என்று கூறினான். வீடு தீப்பற்றி எரிய ஆரம்பித்துவிட்டது. குளியல் அறையில் மாட்டிக்கொண்ட அவன் மனைவிக்குப் பயங்கரமான தீப்புண் ஏற்பட்டது. ஊரார் வந்துஅவனுக்குஉதவவில்லை. வீடுஎரிந்து சாம்பலாகிவிட்டது. "எல்லாக் கஷ்டங்களும் எனக்கே வந்து விட்டனவே? இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருப்பதைவிட என் கண்கள் குருடாகிப் போனாலும் பரவாயில்லை!" என்றான் கனகபால். அவன் பார்வை பறிபோய்விட்டது!

மனைவியையும் சொத்தையும் இழந்த கனகபாலைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்து சாப்பாடு போட்டு அங்கேயே நிரந்தரமாகத் தங்கவும் வசதி செய்து கொடுத்தான் பிரேம்சந்த். அது முதல் கனகபால் அங்கேயே இருந்து வருகிறான். ஆனால் அவன் சித்தம் கலங்கி விட்டது. சுவாமிஜி! நான் சும்மா இருந்திருக்கலாம். உங்களிடம் முட்டாள் தனமாக மூன்று வரங்கள் கேட்டேனே? என்னே என் மதியீனம்?'' என்று சொல்லிப் புலம்பிக்கொண்டே இருக்கிறான்...

ஆண்டவன் எல்லாருக்கும் அருளுகிறார். அதிலிருந்து நன்மைகளைப் பெறும் மனம் பக்குவத்தையும், பண்பையும் நாம் தான் அடைந்து, அதை ஏற்க வேண்டும். தீய ஆசைகளை மனத்தில் வைத்துக் கொண்டால், அவையும் நிறைவேறும். ஆனால் அதிலிருந்து மனநிம்மதி கிடைக்காது.



# 43

ராமுவும், மணியும் எட்டாவது வகுப்பு மாணவர்கள். அவர்கள் இருவருமே ஒரே தெருவில்தான் குடியிருந்தார்கள். இருவரும் வகுப்புக்கு வருவார்கள்; திரும்பிப் போவார்கள். ஆனால் ஒன்றாக வந்து போக மாட்டார்கள். ராமு பணக்கார வீட்டுப் பையன்; பங்களாவில் குடி இருந்தான். மணி ஏழை வீட்டுப் பையன்; சிறு வீட்டில் ஒண்டிக் குடித்தனம்தான்.

ராமுவின் தந்தை அவனுக்காகப் பணிபுரிய ஆட்களை அமர்த்தி இருந்தார். நல்ல புஷ்டியான ஆகாரம் கொடுப்பார். அவனுக்கு விளையாடுவதற்குக் கூடச் சோம்பல்.

குனிந்து நிமிர்ந்து வேலை செய்யமாட்டான். நன்றாகக் கொழுத்துப் போயிருந்தான். எப்போதும் ஏதாவது ஒரு குறையைப் பற்றிச் சொல்லி முணுமுணுத்துக் கொண்டே இருப்பான்.

மணி சுறுசுறுப்பான பையன். தினமும் காலையில் எழுந்து தேகப் பயிற்சி செய்வான். குளித்துவிட்டுப் படிப்பான். எளிய ஆகாரம் சாப்பிட்டாலும் அதை அளவோடு நேரத்தில் உண்பான். வீட்டுவேலைகளைச் செய்ய தயங்க மாட்டான். அவன் உடம்பு சீராக இருந்தது. எப்போதும் மலர்ந்த முகத்துடன் வேலைகளைப் பார்த்துக் கொண்டிருப்பான். அவனுக்கு உடன் பிறந்த சகோதர சகோதரிகள் எட்டுப் பேர் இருந்தார்கள். அதனால் வீட்டில் ஏதும் மிச்சமிராது. அவரவர் வேலையைக் கவனித்துக் கொண்டு வந்தனர். மணி தன்னம்பிக்கையுடன் வாழ்ந்து கொண்டிருந்தான்.

மணி எப்போதும் உண்மைதான் பேசுவான். அதனால் ஆசிரியர்களுக்கு அவனை மிகவும் பிடிக்கும். தன் கடமைகளைப் பொறுப்புடன் கவனிப்பான். அதனால் வகுப்பில் அவனை மாணவர் தலைவனாகப் போட்டிருந்தார்கள். அதனால் அவன் பிற மாணவர்களிடம் வேலை வாங்கவும் வேண்டி இருந்தது. இதுராமுவுக்குப்பிடிக்கவில்லை. ஏழைப்பையனை மணியிடம் பணிந்து போகவும் அவனுக்கு விருப்பம் இல்லை.

ஒரு நாள் வகுப்பில் தனக்குக் கொடுக்கப்பட்ட வேலையைச் செய்யாமல் சோம்பலுடன் உட்கார்ந்து கொண்டிருந்தான் ராமு. மற்றப் பையன்கள் தங்கள் கடமைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். அங்கே வந்த ஆசிரியர் அதைக் கவனித்துவிட்டு மணியைக் கூப்பிட்டு, "ராமு ஏன் இப்படி இருக்கிறான்? விசாரித்துச்சொல்லு!" என்று சொல்லி விட்டு உள்ளே போய் உட்கார்ந்து கொண்டார்.

மணி ராமுவிடம் அதைப் பற்றிக் கேட்டதும் அவனுக்குக் கோபம் வந்து விட்டது. மிகுந்த சலிப்புடன் "ஓ! உனக்கு என்னுடைய சிரமம் எப்படிப் புரியும்? வீட்டில் என்னுடைய சௌகரியங்களைக் கவனிக்கும் இரண்டு ஆட்களும் இன்று வேலைக்கு வரவில்லை. அதனால் என்னுடைய வேலைகளை நானே கவனித்துக் கொள்ள வேண்டியதாகி விட்டது. அதனால் சோர்ந்து போய் உட்கார்ந்திருக்கிறேன். மணி! உன்னுடைய உதவிக்கு ஆட்கள் வராதபோது நீ எப்படிச் சமாளிக்கிறாய்?" என்று கேட்டான்.

மணி ஏழை என்பதும், அவனுடைய வீட்டில் வேலைகளைக் கவனிக்க யாருமே இல்லை என்பதும் அவனுக்குத் தெரியும். இருந்தும் மணியைக் கிண்டல் செய்வதற்காகவே அப்படிக் கேட்டான். ராமுவுக்கும் இது புரிந்தது. அவன் மனம் வேதனைப்பட்டது. ஆனால், அதை அவன் வெளியே காட்டிக்கொள்ளவில்லை. புன்சிரிப்புடன் "எனக்கு அந்தக் கவலையே கிடையாது ராமு! என்னுடைய உதவிக்கு, நான் நினைத்தவுடன் காரியத்தைச் செய்ய, எட்டு பேர் தயாராக இருக்கிறார்கள்," என்றான் மணி. இதைக் கேட்ட ராமு அசந்து போய் விட்டான்! பக்கத்தில் இருந்த மாணவர்கள் எல்லோருமே சிரித்துவிட்டார்கள். அவனுக்குவெட்கமாகப் போயிற்று. தலையைக் குனிந்து கொண்டு வேலையைக் கவனிக்கப் போய்விட்டான்.

உள்ளே அமர்ந்திருந்த ஆசிரியர் காதில் இது விழுந்தது. ராமுவை மணி மடக்கிப் பேசிவிட்டதை அவர் பாராட்டினார். ஆனால் அவன் சொன்னது எவ்வளவு தூரம் உண்மை என்பது அவருக்குப் புரியவில்லை. மணி பொய் சொல்லமாட்டான் என்பது அவருக்குத் தெரியும். அப்போது நிலைமையைச்சமாளிக்க மணி பொய் சொல்ல முற்படுவது அவருக்குப்பிடிக்கவில்லை. 'மணியை உள்ளே கூப்பிட்டு அதை விசாரித்தார்.

''எட்டு பேர் காத்திருப்பதாகச் சொன்னாயே! உன்னுடைய சகோதர சகோதரிகளை அப்படிக் குறிப்பிட்டாயா?'' என்று கேட்டார் ஆசிரியர்.

''இல்லை ஐயா! அவர்களை நான் குறிப்பிடவில்லை'' என்றான் மணி.

''அப்படியானால் பொய் சொன்னாயா? இந்தச் சிறு விஷயத்துக்காக நீ பொய் சொல்லலாமா?'' என்று வருத்தத்துடன் கேட்டார் ஆசிரியர்.

''ஐயா! நான் பொய் சொல்லவில்லை. என்னுடைய இரு கால்கள், இருகைகள், வாய், மூக்கு, கண், காது ஆகிய எட்டும் தான் நான் குறிப்பிடும் பணியாட்கள். அவை நான் சொன்னவுடன் அந்தந்த உறுப்பின் கடமையை உடனே நிறைவேற்றக் காத்துக் கொண்டிருக்கின்றன. என்னுடைய நல்ல பழக்கங்கள், பயிற்சிகளின் மூலம் நான் அவற்றை நல்ல நிலையில் வைத்துக்கொண்டிருக்கிறேன். அவைகளும் கடமையுடன் வேலை செய்கின்றன!'' என்றான் மணி.

''உண்மைதான் மணி! இந்த எட்டுப் பணியாளர்களும் நம்மைவிட்டுப் போக முடியாது. அவை தமது பணியைச் செய்ய மறுப்பதோ ஏமாற்றுவதோ இல்லை. நீ சொல்லுவது சரிதான்.'' என்று அவனைப் பாராட்டினார் ஆசிரியர்.

ஆண்டவன் நமது வேலைகளை நாமே கவனித்துக்கொள்ள நமக்குப் பயன் படக்கூடிய உறுதியான உறுப்புக்களைக் கொடுத்திருக்கிறான். அவற்றை நாம் நல்ல நிலையில் வைத்துக் கொண்டு தன்னம்பிக்கையுடன் செயல்பட வேண்டும். நம்முடைய காரியங்களைக்கூடப் பிறர்தான் செய்து கொடுக்க வேண்டும் என்று எண்ணினால், ஆண்டவன் நமக்குக் கொடுத்துள்ள அந்த இயற்கையான சக்தி வீணாகி விடும்...

● ●

# 44

''நீலா என்ற பெண் சோம்பேறித்தனத்தில் ஊறிப் போயிருந்தாள். காலையில் தாமதமாக எழுந்திருந்து அழகாகத் தன்னை அலங்கரித்துக்கொண்டு பள்ளிக் கூடத்துக்குப் போய்விடுவாள். வீட்டில் தன் தாய்க்குத் துணையாக எந்த வேலையும் செய்ய மாட்டாள். பள்ளிக்கூடத்திலும் எதையும் சிரமப்பட்டுப் படிக்கமாட்டாள்.

தன் தோழிகளைத் தன்னுடைய பாட வேலையையும் சேர்த்துச் செய்துச் சொல்லி விடுவாள். மாலை வேளையில் ஓடியாடி விளையாடமாட்டாள். பிறரை ஓடவிட்டுத் தான் மட்டும் உட்கார்ந்த இடத்திலேயே விளையாடுவாள்.

நீலாவின் தாய்க்கு இதுவே பெரிய கவலையாகப் போயிற்று. அவளைச் சுறுசுறுப்பாக வேலை செய்யவைப்பது எப்படி என்று கவலைப்படத் தொடங்கினாள். அன்று நீலாவைக் கோவிலுக்கு அழைத்துக் கொண்டுபோனாள். கடவுள் சன்னிதியில் நின்று கொண்டு, அவளுக்குக் காது கேட்கும் படியாகவே ''ஆண்டவனே! நீலாவுக்கு நல்லபுத்தியைக் கொடு. அவள் சோம்பல் இன்றிச் சுறுசுறுப்பாக வேலை செய்ய வேண்டும். உழைப்பின் பெருமையைத் தெரிந்து கொள்ள வேண்டும்!'' என்று வேண்டிக் கொண்டாள். நீலா அவள் தாயைப் பரிகாசம் செய்வதுபோல ''வேலையை செய்யாமல் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் தெரியுமா? நீ எதையும் செய்யாமல் எல்லாம் நடந்து விடுவதாக எண்ணிக் கொள். அப்போது எவ்வளவு சௌகரியமாக இருக்கும்? இந்தப் பிரார்த்தனையைக்கூட நீ செய்ய வேண்டியதில்லை!'' என்று சொல்லிச் சிரித்தாள்.

''அப்படியா? நீ வேண்டுமானுல் அப்படி வேண்டிக் கொள்ளேன்!'' என்று அவளுடைய தாய் பதில் சொன்னுர். அன்று இரவு தூங்குவதற்கு முன் நீலா அந்த நிகழ்ச்சி யையே எண்ணிக் கொண்டு படுத்திருந்தாள். அவளையறியா மல் தூங்கி விட்டாள். கடவுள் அவளுடைய கனவில் தோன்றி, ''நீலா உன்னுடைய ஆசை எதுவோ அது பலிக் கும்! இனிமேல் உனக்காக நீ எதையுமே செய்து கொள்ள வேண்டியதில்லை. உனக்காக நீ செய்துகொள்ள வேண்டி யவை எல்லாம் தாஞகவே, உன்னைக் கேட்காமலே நடந்து முடிந்து விடும்!'' என்று சொன்னுர். நீலாவுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை.

காலையில் அவள் எழுந்ததும் அவள் படுத்திருந்த படுக்கை தானே சுருட்டிக் கொண்டது. பல்துலக்கும் பிரஷ் பேஸ்ட்டுடன் ஓடிவந்து தானே அவளுடைய பல்லைத் தேய்த்தது. ஓ! கடவுள் கொடுத்த வரம் பலிக்க ஆரம் பித்து விட்டது. இனிமேல் எனக்குக் கவலை இல்லை. விரலை கூட அசைக்க வேண்டியதில்லை' என்று பெருமையுடன் எழுந்து சென்ருள் நீலா.

நீலாவின் பள்ளிக்கூடத்தில் கொடுத்திருந்த வீட்டுப் பயிற்சிகள் தாமாகவே முடிந்து விட்டன. புத்தகங்கள், நோட்டுகள், பேஞ, பென்சில் எல்லாம் தாமாகவே பையில் ஏறிக்கொண்டன. நீலாவுக்கு மிகுந்த மகிழ்ச்சி. துள்ளி நடந்தபடிக் குளியல் அறைக்குச் சென்ருள். அங்கு வாளி யில் சுடுநீர் எடுத்து வைத்திருந்தாள் நீலாவின் தாய். வழக் கமாக நீலா அதில் குளிர்ந்த நீரைக் கலந்துகொண்டு மேலே ஊற்றிக் கொண்டு குளிப்பது வழக்கம். ஆனுல், இப்போது சுடுநீர் தாஞகவே உயரே எழுந்து அவள் மீது பொழியத் தொடங்கிற்று. ''போதும்! போதும்!'' என்று கத்திக் கொண்டு அவள் குளியலறை முழுவதும் ஓடிஞள். சோப்புத் துண்டு துரத்திக் கொண்டி ஓடிவந்து அவள் மீது உராய்ந்து தேய்த்தது. கொதிநீரில் குளித்து முடிந்ததும டவல் தானே பறந்துவந்து அவளைத் துடைத்துவிட்டது.

முகமும், உடலும் சிவக்க, நீலா வெளியே ஓடிவந்தாள். அவளுடைய துணிமணிகள் பெட்டியில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும். நீலா அவற்றிலிருந்து தனக்கு வேண்டியதைத் தேர்ந்தெடுத்துப் போட்டுக் கொள்வாள். ஆனால், அன்று துணிமணிகள் தாமாகவே பெட்டியிலிருந்து பறந்து வந்து அவளைச் சுற்றிக்கொண்டன. அவை கசங்கியும் அழுக்காகவும் இருந்தன. நீலா அவற்றை நிறுத்த முயன்றாள். ஆனால், அவை எதுவுமே அவள் மறுப்பைப் பொருட்படுத்தவில்லை. அதேபோல நீலா நிதானமாகத் தன்னை அழகுபடுத்திக் கொள்வது வழக்கம். ஆனால் அன்று சீப்பு, சாந்து, கண்ணாடி எல்லாம் தாமாகவே ஓடிவந்து, அவளை அழகுபடுத்தத் தொடங்கின. நீலாவுக்கு அது பொறுக்கவில்லை. தலைமயிரைப் பிடித்துக் கொண்டாள். கண்ணிலும், வாயிலும் பவுடர் விழாமல் கண்களையும் வாயையும் மூடிக்கொண்டாள். ஆனால்அவை நிறுத்தவில்லை. மளமளவென்று அவளைத் தயார் செய்து விட்டன.

நீலா சாப்பிட உட்கார்ந்ததும், அவள் தாய் தட்டில் எல்லாவற்றையும் வரிசையாகப் பரிமாறினாள். அவள் அவற்றை ஒவ்வொன்றாக எடுத்துச் சாப்பிடுவதற்கு முன் எல்லாமே ஒன்றாகக் கலந்து கொண்டுவிட்டன. உருண்டைகளாக உயரே எழுந்து வாயில் விழத் தொடங்கின. அவள் சுவைப்பதற்குள் உள்ளே போகத் தொடங்கின. நீலா போதும்! அவசரப்பட வேண்டாம். நாக்கு சுடுகிறது. என்று கத்த நினைத்தாள். ஆனால் அவளால் பேசவே முடியவில்லை. அவளுக்கு அழுகையே வந்து விடும் போல ஆயிற்று.

நீலா பள்ளிக்கூடத்துக்குப் போன போது அவளுடைய தோழிகள், கூந்தல் கலைந்து போயிருப்பதையும், உடைகள் கசங்கி இருப்பதையும் கண்கள் அழுது கலங்கி இருப்பதையும் பார்த்தார்கள். "ஏன் இப்படி இருக்கிறாய் நீலா?" என்று கேட்டார்கள். அவளால் பதில் எதுவும் சொல்ல முடியவில்லை. பள்ளிக்கூட மணி அடித்தது. வகுப்புக்கள்

தொடங்கின. நீலா புத்தகத்தைப் பிரித்து வைக்க முயன்றாள். அது தானே பிரிந்து கொண்டது. அவள் பாடத்தை எழுத நினைப்பதற்குள் பேனா தானாகவே வேகமாக கிறுக்கி எழுத ஆரம்பித்துவிட்டது. கணக்குப் பாடம் நடந்தபோது பேனா கவிதைகளை எழுத ஆரம்பித்து விட்டது. நீலாவினால் எதையும் கட்டுப்படுத்த முடியவில்லை. அதை அவளுடைய ஆசிரியை கவனித்துவிட்டாள். அவளுடைய நோட்டுப் புத்தகங்களை வாங்கிப் பார்த்து, எல்லாம் தாறுமாறாக எழுதப் பட்டிருப்பதைக் கவனித்தாள்.

''ஏன் இன்று இப்படி இருக்கிறாய்? நீ வீட்டுக்குப் போகலாம். உனக்கு உடம்பு சரி இல்லை என்று நினைக்கிறேன்!'' என்று கூறி அவளைக் கடிந்து வீட்டுக்கு அனுப்பி விட்டாள். நீலா அழுது கொண்டே வீட்டுக்கு வந்தாள். வழியில் தாகத்துக்காகக் குழாயில் தண்ணீர் குடிக்க முயன்றாள். குழாய்த் தண்ணீர் தானாகவே எழுந்து பீச்சி அடித்து, அவள் உடைகளை நனைத்து விட்டது. அதற்கு மேல் தெருவில் நிற்க முடியாமல் நீலா வீட்டுக்கு ஓடி வந்தாள். மிகுந்த களைப்புடன் ஊஞ்சலில் படுத்துக் கொண்டாள். ஊஞ்சல் தானாகவே வெகு வேகமாக ஆட ஆரம்பித்தது.

''போதும்! போதும்! இவ்வளவு வேகம் வேண்டாம்.'' என்று நீலா உரக்கக் கத்தினாள். ஆனால், ஊஞ்சல் நிற்கவில்லை...அது அவளைத் தூக்கி எறிந்துவிட்டது.

''நீலா! நீலா! கட்டிலிருந்து கீழே விழுந்துவிட்டாயே?'' என்று நீலாவின் தாய் அவளை எழுப்பிச் சொன்னாள். அவ்வளவு நேரம் நடந்தவை எல்லாம் கனவுதான் என்பதை நீலா புரிந்து கொண்டாள். கடவுள் கனவிலேயே தனக்குப் பாடம் கற்பித்து விட்டதை உணர்ந்து கொண்டாள், மறுநாள் எழுந்து சுறுசுறுப்பாக வேலைகளைச் செய்யத் தொடங்கினாள். அவளுடைய தாய்க்கு ஒரே ஆச்சரியம். 'கடவுள் அவளைத் திருத்தி விட்டார்!' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள்.

நல்ல காரியங்களை முடித்துவைக்கத் தான் கடவுளை வேண்டிக் கொள்ளலாம். கெட்டவைகளை மனதில் எண்ணி வேண்டிக் கொண்டால் அவையும் நடக்க ஆண்டவன் கட்டளை இட்டு விடுவார். அப்புறம் அவற்றின் பலனை நாம் அனுபவிக்க நேரிடும். குழந்தைகள் இதைக் குறிப்பாக உணர வேண்டும்.

● ●

## 45

இந்திரப்பிரஸ்த நகரத்தில் தர்மராஜா ஆட்சி புரிந்து கொண்டிருந்தார். ஒரு நாள் ஓர் ஏழை அந்தணர் அவரைத் தரிசிக்க வந்தார். கொஞ்ச நேரம் இருந்து விட்டு அவர் புறப்பட்டுப் போய்விட்டார். வாசலில் பீமசேனன் அந்தணரைப் பார்த்தான். தினந்தோறும் தர்மராஜாவைத் தரிசிக்கப் பலரும் வந்து போவது வழக்கம். அதில் பீமசேனனுக்கு அதிசயம் ஒன்றுமில்லை. ஆனால் திரும்பிப் போகும் போது கையில் எதையாவது வாங்கிக்கொண்டு போவார்கள். அந்தணர் கையில் ஒன்றுமே இல்லை. அது தான் பீமனுக்கு அதிசயமாக இருந்தது.

"ஐயா! தாங்கள் எதுவுமே வாங்கிக்கொண்டு போகவில்லையா? என் சகோதரர் தருமரைத் தாங்கள் தரிசித்து விட்டு வந்தீர்களே? தங்களுக்கு அவர் எதுவுமே கொடுக்கவில்லையா?" என்று பணிவுடன் கேட்டான் பீமன். அவனுடைய பணிவும் உபசரிப்பும் அந்தணரை மனங்குளிர வைத்தது. "ஆமாம்! உங்களுடைய தமையனாரை நான் தரிசித்தேன். நான் கேட்டது அப்போது இல்லை. அதனால் நாளைக்கு வரச் சொல்லி இருக்கிறார். அதற்குள் தயார் செய்து வைப்பதாகவும் கூறி இருக்கிறார்" என்று அவர் பதில் சொன்னார்.

பீமசேனனுக்கு இது பெரிய அதிசயமாக இருந்தது. தர்மராஜா ஒரு நல்ல காரியத்தை ஒரு நாள் தள்ளிப் போடுவதாவது? எப்படி அது நேர்மையாகும்? அவருடைய தர்மத்துக்கு அது எப்படிப் பொருந்தும்? பீமன் நேரே அரண்மனை வாசலுக்குப் போனுன். அங்கே இருந்த பெரிய முரசை பலமாக அடிக்கத் தொடங்கினுன். முரசின் ஒலி கேட்டதும் எல்லாரும் அங்கே ஓடி வந்தார்கள்.

அரண்மனையில் உள்ள அந்த முரசத்தை அப்படி யாரும் சாதாரணமாக அடிக்கமாட்டார்கள். மிக முக்கியமான விஷயமாக இருந்தால், எல்லாரும் அதைத் தெரிந்து கொள்ளுவதற்காக அடிப்பார்கள். அப்போது அங்கே அரண்மனையில் உள்ள எல்லாரும்எல்லாவற்றையும் போட்டதுபோட்டபடி விட்டு விட்டு ஓடி வந்து விடுவார்கள். முரசொலி கேட்டதும் தர்மராஜா தனது சபையிலிருந்து வாசலுக்கு ஓடி வந்தார். சமையலறையில் வேலைகளை கவனித்துக் கொண்டிருந்த திரௌபதி அங்கே ஓடிவந்தாள். அர்ஜுனன் தனது வில்லைச் சரிபார்த்துக் கொண்டிருந்தான். அவன் அதைக் கீழே போட்டுவிட்டு ஓடிவந்தான். சிறியவர்களும் பெரியவர்களும், ஆண்களும் பெண்களுமாக அங்கே பெரிய கூட்டம் கூடிவிட்டது.

அப்படியும் பீமன் முரசு அடிப்பதை நிறுத்தவில்லை. தர்மராஜா அவன் அருகில் வந்து தோளைத் தொட்டு, 'உனக்கு என்ன கோபம்? யார் உன்னை இப்படித் தூண்டிவிட்டார்கள்? மனத்தில் உள்ளதை வெளிப்படையாகச் சொல்லு'' என்று கேட்டார். ''அண்ணு! நீங்கள் பெரிய வெற்றி அடைந்திருக்கிறீர்கள். அதைக் கொண்டாடுவதற்காகவே இந்த முரசொலியை எழுப்பினேன்!'' என்றுன் பீமன்.

தருமருக்கு ஆச்சரியமாக இருந்தது. யாரும் போரிடவில்லை. யாருமே தோற்றுப் போகவில்லை. பின் யாருக்கு வெற்றி? எதைப்பற்றிப் பீமன் குறிப்பிடுகிருன்? ''என்ன

சொல்லுகிறாய் பீமசேனா? யாருக்கு எதற்காக வெற்றி? நான் யாரிடமும் வாதாடவில்லை. யாரோடும் போரிட வில்லை. எதை நீ குறிப்பிட்டுச் சொல்லுகிறாய்?'' என்று கேட்டார் தருமர்.

பீமசேனன் சிரித்துக் கொண்டே சொன்னான். ''அண்ணா நீங்கள் செய்த காரியம் உங்களுக்கே தெரியவில்லை. அதனால் நான் சொல்ல வேண்டி இருக்கிறது, யாரை நீங்கள் கேட் டாலும் இந்த ஊரில் 'தர்மராஜாவா? அவரிடம் கேட்டது கிடைக்காமற் போனதே இல்லையே?' என்றுதான் சொல்லு வார்கள். இன்று அப்படி ஒருவர் சொல்ல முடியாதபடி நீங்கள் செய்து விட்டீர்கள். இன்றைக்கிருப்பார் நாளைக்கு இல்லை என்பது தான் வசனம். அதை நீங்கள் முறியடித்து விட்டீர்கள். 'நாளைக்கு நான் இருப்பேன். வேண்டியதை நாளைக்கு வந்து வாங்கிக் கொண்டு போ!' என்று சொல்லி விட்டீர்கள். எது இல்லையோ அதை இல்லை என்று சொல்லு வதுதான் வழக்கம். நீங்களோ அதை 'இன்றைக்கு இல்லை நாளைக்கு எப்படியும் உண்டு!' என்று உறுதியாக, தன்னம் பிக்கையுடன் சொல்லி விட்டீர்கள். இவையெல்லாம் வெற் றியே அல்லவா? இதை எல்லாரும் தெரிந்து கொள்ள வேண்டாமா?''

பீமன் மறைமுகமாகத் தனது தவறைச் சுட்டிக் காட்டி யவுடன் தர்மராஜாவுக்கு மிகவும் வெட்கமாகப் போய் விட்டது. அந்தணர் கேட்டதை உடனே கொடுக்க அவ காசம் இல்லாமல் ஒருநாள் தள்ளிப் போட்டதை எண்ணி வெட்கத்துடன் தம்பியிடமே மன்னிப்பு கேட்டுக் கொண் டார். பீமனை உள்ளே அழைத்துச் சென்று அவர் கேட் டதைக் கொடுத்தனுப்பினார்.

இராமாயணத்திலும் ஒரு கதை உண்டு.

எல்லா உலகங்களையும் வெற்றி கொண்ட இளங்கேஸ் வரன் தலைநகருக்குத் திரும்பினான். தேவலோகத்தை வெற்றிகொண்ட அவனுடன் மயனும் மற்ற சிற்பிகளும்

வந்திருந்தார்கள். இலங்காபுரியை அழகு மிகுந்த நகரமாக மாற்றித்தர வேண்டும் என்று மயனிடம் இராவணன் கேட்டுக் கொண்டான். ''அப்படியே செய்து தருகிறேன். இது பெரிய காரியமே அல்ல. ஆனால், மானுடர்கள் இதுவரை அறிந்திராத ஒரு அதிசயத்தை நீங்கள் விரும்பினால் என்னால் நிர்மாணிக்க முடியும்!'' என்றான் மயன்.

''அப்படி என்ன பிரமாதமான விஷயம்!'' என்று கேட்டான் இராவணன்.

''பூமியிலிருந்து தேவலோகத்துக்குப் படிக்கட்டுகள் அமைத்துவிடுகிறேன். நீங்கள் அதில் மளமளவென்று ஏறிப் போய்விடலாம். அப்புறம் உங்களுக்கு அமரத்துவமே தான். அழிவே கிடையாது!'' என்றான் மயன்.

இராவணன் உரக்கச் சிரித்து ''மயனே! யாரைப் பார்த்து இதைச் சொன்னாய்? என்னை அழிக்க இனிமேல் ஒருவர் வரப்போகிறார்களா? போரில் என்னை வெல்லக் கூடிய சாமர்த்தியம் கொண்டவர்களும் இருக்கிறார்களா என்ன? எனக்குத் தேவை இல்லை, நீ சொன்ன படிக்கட்டு! உனக்கு ஒரே ஒரு நாள் அவகாசம் தருகிறேன். அதற்குள் இலங்காபுரியை அழகு நகரமாக மாற்றி விட்டுப் போய்விடு. தேவையானால் அப்புறம் உனக்குச் சொல்லி அனுப்புகிறேன்'' என்று சொன்னான்.

மயன் ஒரு மாயச் சிற்பி. அவன் நினைத்தால் ஆகாதது இல்லை. இலங்கையை அழகு நகரமாக மாற்றிவிட்டு மறைந்துவிட்டான். மறுநாள் அதைக்கண்டு வியந்த இராவணன் மனம் மகிழ்ந்து போனான். ஆனால் அந்த அழகு நகரத்தை இராமபக்தனான அனுமான் கொளுத்தி அழித்து விட்டான். இராமன், இராவணனையே அழித்து விட்டான்.

யுத்த களத்தில் வீழ்ந்து கிடந்தபோது இராவணன் 'அன்று மயன் சொன்னனே? அந்தப் படிக்கட்டுகளை அமைத் திருக்கலாமே? இராமனை எதிர்க்க முடியாதநிலையில் நானும் உற்றார் உறவினருடன் தப்பி இருக்கலாமே? ஒரு நாளில் மயனை விரட்டிவிட்டோம். அப்புறம் சொல்லி அனுப்ப வேளை வரவே இல்லையே?' என்று எண்ணிக் கொண்டான்.

எந்த நல்ல காரியத்தையும் நினைத்தால் உடனேசெய்து விடவேண்டும். கெட்ட காரியம் எதுவானலும் நினைத்த வுடன் அவசரப்பட்டு செய்துவிடக் கூடாது. அதன் பலா பலன்களைத் தீர ஆலோசித்துப் பிறகுதான் செயல்பட வேண்டும்.



# 46

வடநாட்டில் ஒரு சமஸ்தானத்தின் அரசராக இருந் தார் வித்யாசாகரர். அவருடைய பெயருக்கு ஏற்றபடி அவரிடம் வித்யாதனம் நிறைவாக இருந்தது. எதைக் கேட்டாலும் கூர்ந்து கேட்பார். எதைப் படித்தாலும் நுட்பமாகப் பார்ப்பார். அவருடைய தீட்சண்யமான அறிவு பெரும் புகழ் அடைந்திருந்தது.

ஒரு நாள் அவருடைய சபைக்கு ஒரு சாது வந்தார். அரசர் அவரைச் சகல மரியாதைகளுடனும் வரவேற்று உபசரித்தார். ''தங்களுக்கு நான் என்ன செய்துகொடுக்க வேண்டும்?'' என்று கேட்டார் அரசர்.

''உங்களிடம் நான் ஏதும் யாசிக்க வரவில்லை. ஆனல் ஒரு விளக்கம் கேட்கவே வந்தேன். புத்திசாலியான ஒரு கலைஞனிடம் எனக்கு மூன்று பொம்மைகள் செய்து தரும்

படி சொன்னேன். அவன் ஒரே மாதிரியான மூன்று பொம்மை களைச் செய்து கொடுத்திருக்கிறான். ஆனால் அவை மூன்றும் வெவ்வேறானவை என்றும், மூன்று விதமான நண்பர்களை எடுத்துக் காட்டுபவை என்றும் சொன்னான். எனக்கு அவன் கூறியது புரியவில்லை. உங்களிடம் விளக்கம் கேட்கவே வந்திருக்கிறேன்'' என்றார் அந்த சாது.

''அந்தப் பொம்மைகளை நான் பார்க்கலாமா? கொண்டு வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார் அரசர். சாது தன் னிடமிருந்த பையிலிருந்து மூன்று பொம்மைகளை எடுத்து வைத்தார். அவை மூன்றும் ஒரே மாதிரியாக இருந்தன. அமைப்பு, நிறம், எல்லாமே ஒரே விதமாக இருந்தன. அரசரைப் பார்த்து சாது, ''இவை ஓர் உத்தமமான நண் பனையும், ஒருபத்திரமான நண்பனையும், ஓர் அதமனான நண் பனையும் எடுத்துக் காட்டுகின்றன. நீங்கள் ஆராய்ந்து சொல்ல முடியுமா?'' என்று கேட்டார்.

அரசர் சிறிது நேரம் பொம்மைகளைக் கூர்ந்து கவனித் தார். பிறகு அவற்றில் சில துவாரங்கள் இருப்பதையும் தெரிந்துகொண்டார். மெல்லிய கம்பி ஒன்றைக் கொண்டு வரச் சொன்னார். முதல் பொம்மையில் இரு காதுகளிலும் துவாரங்கள் இருந்தன. கம்பியைச் செலுத்தியதும் ஒரு காது வழியே சென்ற கம்பி மறு காது வழியே வந்தது! இரண்டாவது பொம்மையில் ஒரு காதில் ஒரு துவாரமும் வாயில் இன்னொரு துவாரமும் இருந்தன. கம்பியைக் காது வழியாகச் செலுத்தியதும் அது வாய் வழியாக வெளியே வந்தது! மூன்றாவது பொம்மையில் ஒரு காதில் மட்டுமே துவாரம் இருந்தது. கம்பியை உள்ளே விட்டதும் அது உள்ளே போய் நின்றுவிட்டது.

அரசர் சிறிது நேரம் யோசித்தார். பிறகு சாதுவிடம் ''பெரியவரே! என்னுடைய சிற்றறிவுக்குத் தெரிந்த மட்டி லும், இந்த பொம்மைகள் விளக்குவதைச் சொல்லுகிறேன். இதைச் செய்தவன் பெரிய அறிவாளி என்றே நினைக்கி றேன்!'' என்றார்.

''சொல்லுங்கள்!'' என்று கூறிவிட்டு சாது கவனிக்க லானார்.

இந்தப் பொம்மைகளின் மூலம், பொம்மையைச்செய்த கலைஞன் மூன்று விதமான நண்பர்களை விளக்குகிறான். முதல் பொம்மையில் ஒரு காது வழியாகச் சென்ற கம்பி மறு காது வழியாக வெளியே வந்துவிட்டது! இது அதமனான நண்பனை எடுத்துக் காட்டுகிறது. எல்லாருமே தமக்குச் சிரமம் ஏற்படும்போது நண்பனிடம் போய்ச் சொல்லுகிறார்கள். அவன் அனுதாபத்துடன் கேட்டு உதவி செய்கிறான். தன்னிடம் வந்து சொல்பவை யாவற்றையும் கவனமாகக் கேட்பது போல நடித்துவிட்டு, ஒரு காதில் வாங்கிய விஷயங்களை மறு காது வழியாக வெளியே விட்டுவிட்டுப் போய் விடுகிறான் அதமனான நண்பன். அவனையே இந்த முதல் பொம்மை சித்திரிக்கிறது!'' என்றார் அரசர்.

''அப்படியா?'' என்று வியந்து ''இரண்டாவது பொம்மை எதைக் காட்டுகிறது?'' என்று கேட்டார் சாது.

''இரண்டாவது பொம்மை மத்திமமான நண்பனைக் காட்டுகிறது. தனது சிரமங்களை நன்பனிடம் வந்து சொல்பவன் அந்தரங்கமான விஷயங்களையும் கூறுகிறான். அந்த நண்பன் அவனுக்காகப் பிறரிடம் போய்ச் சொல்லி உதவியைத் தேடுகிறான். ஆனால் எதையும் பத்திரமாக வைத்துக் கொள்ளாமல், அந்தரங்கமான விஷயங்களையும் கொட்டி அளந்து விடுகிறான். இதனையே ஒரு காது வழியாகக் கம்பியைச் செலுத்தினால் வாய் வழியே வெளிவரும் இரண்டாவது பொம்மை காட்டுகிறது!'' என்றார் அரசர்.

''பேஷ்! பேஷ்!'' என்று பாராட்டிவிட்டு சாது ''மூன்றாவது பொம்மை அப்போது உத்தமமான நண்பனை எடுத்துக் காட்ட வேண்டும். அது எப்படி?'' என்று கேட்டார்.

"மூன்றாவது பொம்மையில் ஒரே துவாரம்தான் இருக்கிறது. செவி வழியே போன கம்பி உள்ளே போய் அங்கேயே அடங்கி விட்டது. உத்தமமான நண்பனிடம் உதவியை நாடிப்போனவன் அவனிடம் தன் சிரமங்கள் எல்லாவற்றையும், அந்தரங்கமான விஷயங்களையும் கூடச் சொல்லுகிறான். உத்தமமான நண்பன் அவ்வளவையும் கேட்டு மனத்தில் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளுகிறான். யாரிடமும் எதையும் சொல்வதில்லை. யாருக்கு உதவி தேவை என்பதைக்கூட யாரிடமும் கூறாமல், அமைதியாகத் தனது உதவியைச் செய்து முடித்துவிட்டு, அதைப்பற்றிச் சொல்லிப் பெருமைப்படாமல் அமைதியாக இருந்து விடுகிறான். அதையே இந்த மூன்றாவது பொம்மை உணர்த்துகிறது!" என்றார் அவர்.

"பலே! பலே!" என்று பாராட்டிய சாது "நான் போகலாமா?" உங்களுக்கு ஏதாவது தேவையா?" என்று புன் சிரிப்புடன் கேட்டார்.

"எதுவும் தேவை இல்லை சுவாமி! ஆனால் இப்படி உன்னதமான கருத்துக்களை எடுத்துரைக்கும் பொம்மைகளைச் செய்த கலைஞனை நான் பார்த்துப் பாராட்டலாமா? பரிசளிக்கலாமா?" என்று கேட்டார் அரசர் வித்யாசாகரர்.

"நானே அந்தக் கலைஞன்!" என்று கூறிச் சிரித்துவிட்டு, சாது "அரசரே! உம்முடைய அறிவுத் திறமையைச் சோதிக்கவே இப்படிச் செய்தேன். புத்திசாலியான உம்முடைய ஆட்சியில் மக்களுக்கு எல்லா நன்மைகளும் கிடைக்கும். உங்களுக்கு நீண்ட ஆயுளையும், நல்ல உடல் ஆரோக்கியத்தையும் ஆண்டவன் அருளட்டும்!" என்று ஆசீர்வதித்துவிட்டுக் கிளம்பிப் போய்விட்டார்.

● ●

## 47

வெகுநாட்களுக்கு முன் அரேபியாவில் அப்துல்லா என்ற பெரியவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருக்கு கடவுள் பக்தி மிக அதிகம். நாள் முழுவதும் ஐந்துதடவைகள் தொழுகையில் ஈடுபடுவார். எல்லாருக்கும் கடவுள் பெயரால் தொண்டு செய்வார். ஆனால் அவருக்குக் கடவுள் இல்லை என்று சொல்பவர்களைக் கண்டால் கோபம் வந்துவிடும். அவர்களைக் கோபித்துத் துரத்தி விட்டு விடுவார்.

ஒருநாள் இரவு அவருடைய வீட்டில், வேலையாட்கள் யாவரும் பணிகளை முடித்துக் கொண்டு தூங்கியான பிறகு, வாசற் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. அப்துல்லா எழுந்து வாசற் கதவைத் திறந்தார். அங்கே தள்ளாடும் வயதில் ஒரு முதியவர் நின்றுகொண்டிருந்தார். அப்துல்லா அவரிடம் "எங்கே இந்த வேளையில் இங்கே வந்தீர்கள்? உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். "எனக்கு ரொம்பப் பசிக்கிறது. உணவு கொடுக்க முடியுமா?" என்று கேட்டார் அந்தப் பெரியவர். அப்துல்லா அவரை உள்ளே அழைத்துக் கால்களைக் கழுவிக் கொள்ளச் செய்து, சாப்பிடும் இடத்தில் உட்கார வைத்தார்.

எல்லாப் பணியாட்களும் தூங்கிவிட்டனர். சமையலறையில் சாப்பிடுவதற்குப் போதுமான பொருட்கள் இல்லை. அதனால் அப்துல்லா தானே சமையல் செய்துசுடச் சுடக் கொண்டு வந்து பரிமாறினார். வேலையாட்களை எழுப்பக்கூட இல்லை. அங்கு வந்த பெரியவருக்கு அது ஆச்சரியமாக இருந்தது. தான் யாரென்று கூட விசாரிக்கவில்லை. தனக்காக அவரே சமைத்து போடுகிறார். இவ்வளவு தயாள குணமும் பெருந்தன்மையும் உள்ளவர்களும் இருக்கிறார்களா?—இவ்வாறு எண்ணி எண்ணி வியந்து போனார்.

உணவை பறிமாறிவிட்டு அப்துல்லா "சாப்பிடும்! ஆண்டவன் அருளால் உங்கள் பசி நீங்க உணவு கிடைத்திருக்கிறது. பிரார்த்தனை செய்துவிட்டுச் சாப்பிடும்!" என்று சொன்னார். அது காதில் விழாதவரைப் போல, அந்தப் பெரியவர் தட்டை அருகே இழுத்து வைத்துக் கொண்டு சாப்பிடத் தொடங்கினார்.

"பெரியவரே! நான் சொல்வது காதில் விழவில்லையா? ஏன் நீர் பிரார்த்தனை செய்யாமல் சாப்பிடுகிறீர்? ஆண்டவனின் கருணைக்கு நீர் நன்றி சொல்ல வேண்டாமா?" என்று கேட்டார் அப்துல்லா.

"ஆண்டவனுக்கு ஏன் நன்றி சொல்ல வேண்டும்? நீர் அல்லவா சமைத்து போட்டீர்? வேலையாட்களைக் கூட எழுப்ப மனமின்றி வேலைசெய்து சமைத்து போட்ட உமக்கு அல்லவா நான் நன்றி சொல்ல வேண்டும்? மிக்க நன்றி!" என்று கூறிச் சாப்பிடத் தொடங்கினார்.

அப்துல்லா திடுக்கிட்டுப் போனார். ஆண்டவன் மீது நம்பிக்கை இல்லாத ஒரு மனிதருக்கா அவர் உணவு படைத்திருக்கிறார்? எவ்வளவு பெரிய தவறு நேர்ந்து விட்டது?

"உங்களை இந்த அகால வேளையில் இங்கு வரச் செய்தவர் கடவுள் அல்லவா? வந்த உம்மை உபசரிக்கவும், புதிதாகச் சமைத்து போடவும் என்னைத் தூண்டியவர் ஆண்டவன் அல்லவா? அவனுடைய அருள் இன்றி நீர் இவ்வளவு நாட்கள் வாழ்ந்திருக்க முடியுமா?" என்று கேட்டார் அப்துல்லா.

அவசரமாகச் சாப்பிட்டுக்கொண்டே அந்தப் பெரியவர் "ஏன் கடவுளைக் கூப்பிடுகிறீர்கள்? நீர் அவரைப் பார்த்திருக்கிறீரா? உங்கள் வீட்டில் உணவுப் பொருளும், சமைக்க நீங்களும் இல்லாமற் போயிருந்தால், கடவுள் வந்து உணவை வழங்கி இருப்பாரா? நான் பார்த்திராத ஒருவருக்கு நன்றி சொல்லி, நான் என் கண் முன்னே கண்ட பெருந்தகையாளரை மறக்க நான் ஒரு முட்டாள் அல்ல!" என்றார்.

அப்துல்லாவுக்கு அளவு மீறிய கோபம் வந்து விட்டது. ''நான் காலமெல்லாம் கடவுள் பக்தியுடன் வாழ்கிறவன். இந்த வசதிகளை எனக்கு அருளியவர் ஆண்டவனே என்று நம்புகிறேன். அந்த நம்பிக்கை இல்லாத ஒருவர் இந்தப் பலன்களை அடையக் கூடாது: அதற்கு நான் சம்மதிக்க மாட்டேன்!'' என்று கூறி அந்தப் பெரியவரின் கையைத் தொடர்ந்து சாப்பிட விடாமல் பிடித்துக் கொண்டார். ''கடவுளுக்கு நன்றி சொல்லும்! இல்லாவிடில் எழுந்து போம்!'' என்று உணவுத் தட்டையும் எடுத்துக் கொண்டு விட்டார். அந்தப் பெரியவர் பேசாமல் எழுந்து வெளியே போய்விட்டார்!

அப்துல்லா கதவை மூடித் தாழ்ப்பாள் போட்டுவிட்டு, உள்ளே வந்து படுத்துக் கொண்டார். அடக்க இயலாத கோபத்தால் அவர் மனம் அலைபாய்ந்து கொண்டிருந்தது. படுக்கையில் படுத்தபடி இறைவனை எண்ணி, ''எனக்காக அந்தப் பெரியவரின் பிழையை மன்னியுங்கள்!'' என்று வேண்டியபடி தூங்கிவிட்டார். கனவில் கடவுள் தோன்றினார். ''ஏன் அந்தப் பெரியவரை அப்படி உணவு அருந்த விடாமல் தடுத்து வெளியே அனுப்பி விட்டாய்? அவர் மிகுந்த பசியுடன் இருந்தது உனக்குத் தெரியாதா?'' என்று கேட்டார்.

அப்துல்லா பணிவோடு தாழ்ந்த குரலில் ''ஐயா! நானே அவருக்குச் சமைத்துப் போட்டேன். இன்னும் அதிக உணவு கேட்டிருந்தாலும் கொடுத்திருப்பேன். ஆனால் அவர் உங்களைத் தூற்றுவதை என்னால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அதனால்தான் அவரை வெளியே அனுப்பி விட்டேன்!'' என்றார்.

கடவுள் புன்னகையுடன் ''அப்பனே! அவர் இன்று என்னை மறுக்கவில்லை. எண்பது ஆண்டுகளாக, உயிர் வாழ்ந்த பொழுது, என்னை மறுத்துக் கொண்டே இருந்

திருக்கிறார். என்னைத் தூற்றி இருக்கிறார். நான் அதைப் பொறுத்துக் கொண்டு, அவருக்கு எண்பது ஆண்டுகள் சோறு போடவில்லையா? நீ, ஓர் இரவு சாப்பாடு போட மறுத்து விட்டாயே? அதுவும் என் பெயரால் மறுத்து விட்டாயே?'' என்று கேட்டார்.

அப்துல்லாவுக்கு வெட்கமாகப் போயிற்று. ''ஐயா! உலகில் உள்ள எல்லா உயிர்களுமே உமது வடிவம் என்றும், எல்லாரிடமும் அன்பு காட்ட வேண்டும் என்றும் புரிந்து கொண்டேன். என் தவறுக்காக என்னை மன்னியுங்கள்!'' என்று மன்னிப்பு கேட்டுக் கொண்டார்.

ஆண்டவன் எல்லாரிடமும் இருக்கிறார். எல்லாருக்கும் அவன் அருள் உண்டு. அதை மறுக்க நமக்கு உரிமை இல்லை. அந்த அருளுக்குத் தகுதி உள்ளவர்களாக நாம் வாழ்ந்தால் போதும்.



# 48

கோபால் ஒரு குடியானவச் சிறுவன், அவன் தந்தை நிலத்தை உழுது பயிர் செய்து வந்தார். ஒரு நாள் அவர் 'உடம்பு சரி இல்லை' என்று வீட்டுக்கு வந்து படுத்துக் கொண்டார். ஒரு மாதம் படுக்கையிலேயே இருந்து பிறகு இறந்து விட்டார்.

கோபால் பத்து வயதுச் சிறுவன். அவன் அதிகம் படிக்கவில்லை. தந்தை நோய்வாய்ப்பட்ட காரணமும், மருத்துவமுறைகளும் அவனுக்குப் புரியவில்லை. ஏதோ நடந்து விட்டது என்று மட்டுமே தெரிந்து கொண்டான். குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பு அவன் தலையில் விழுந்தது.

அவனுக்கு உழுது பயிரிடும் வேலை தெரியாது. படிக்காததால் வேறு வேலைக்கு போக முடியவில்லை. நிலத்தை விற்று விட்டு அவன்தாய் ஆடுகளை வாங்கிக் கொடுத்தான். அவற்றை ஓட்டிக் கொண்டு மேய்ப்பதற்காக அவன் அருகில் உள்ள மலைவெளிக்குப் போனான். ஆடுகள் வழி தவறிவிடாமல் இருக்க அவன் அவற்றைப் பெயர் சொல்லி அழைப்பது வழக்கம். ஆடுகள் வழக்கமாகப் புல்வெளியில் மட்டுமே மேய்வதுண்டு.

ஒருநாள் ஒரு ஆடு வழி தவறி மலைகள் இரண்டுக்கு நடுவில் உள்ள குறுகலான பாதைக்குப் போய்விட்டது. கோபால் அதைப் பிடித்துக் கொண்டு வர அங்கே ஓடினான். ''கண்ணு! திரும்பி வந்துவிடு!'' என்று குரல் கொடுத்தான். உடனே ''கண்ணு! திரும்பி வந்துவிடு!'' என்று ஓர் எதிர்க் குரல் கேட்டது. அவனுக்கு எதுவும் புரியவில்லை. தன்னைப் போலவே அங்கே வேறொரு ஆடு மேய்க்கும் சிறுவன் இருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டான். அவனைத் துணைக் குச் சேர்த்துக் கொள்ளலாம் என்று அந்தப் பாதை நெடுகி லும் தேடிப் பார்த்தான். அவனை எங்கும் காணோம்.

''யார் அங்கே!'' என்று கூவிப் பார்த்தான். அதற்கும் ''யார் அங்கே?'' என்று எதிர்க்குரல் கேட்டது. யாரோ ஒரு சிறுவன் மறைந்திருந்து தன்னைக் கிண்டல் செய்வதாகக் கோபால் எண்ணினான். மீண்டும் உரக்கச் சத்தமிட்டுக் கேட்டான். ''யார் அங்கே? யார் அங்கே?'' என்று எதிர்க் குரல் பல முறை ஒலித்தது. 'ஓ! இந்த மலைச்சாரலில் நிறைய சிறுவர்கள் என்னைப் போல இருக்கிறார்கள். அவ் வளவு பேரும் என்னைக் கிண்டல் செய்கிறார்கள்!' என்று நினைத்துப் பயந்து போனான் கோபால்.

மறுநாள் ஆடு மேய்க்கப் போவதற்கே அவனுக்குப் பயமாக இருந்தது, தன் மனக்கலக்கத்தைத்தாயிடம் சொன் னால் அவள் கலங்கிப் போவாள் என்று நினைத்து, அவளிட

மும் ஏதும் கூறவில்லை. மறுநாள் மீண்டும் சோதனை செய்து பார்க்க அவன் ஆடுகளை விட்டு விட்டு அங்கே போனான். பாதையின் நடுவில் நின்று கொண்டு ''தைரியம் இருந்தால் வெளியே வா!'' என்றும், ''என்னைப் பயமுறுத்தினால் நான் ஒன்றும் பயந்து விடமாட்டேன்'' என்றும் கூவினான். அவன் என்ன சொன்னானோ அதுவே மீண்டும் எதிர்க் குரல்களாகக் கேட்டது. கோபால் மிகவும் பயந்து போனான். அவன் பயமுறுத்தினாலும், திட்டினாலும், பல பேர் அதே போலச் செய்வார்கள் என்ற திகில் அவனுக்கு உண்டாகிவிட்டது. அங்கே ஒளிந்து கொண்டிருக்கும் அவ்வளவு பேரும், அவனை வளைத்துக் கொண்டு ஒருநாள் தாக்கக்கூடும் என்ற கவலையும் அவனைப் பிடித்துக் கொண்டது.

அவன் வீடு திரும்பினான். தன் தந்தையைப் பற்றி நினைத்துக்கொண்டான். அவர் படுத்திருந்ததும் கடைசியில் இறந்து போனதும் ஞாபகத்துக்கு வந்தது. 'அவரையும் இப்படி யாரோ வளைந்துக் கொண்டு தாக்கி இருக்க வேண்டும். அதனால்தான் அவர் இறந்து போனார். ஒருநாள் எனக்கும் அதே கதி ஏற்படப் போகிறது!' என்று எண்ணிக் கொண்டான்.

அவனால் சரிவரச் சாப்பிட முடியவில்லை. ஒழுங்காகத் தூங்கவும் முடியவில்லை. ஆடுகளை அழைத்துக் கொண்டு போய் மேய்த்துவரவும் அவனுக்கு விருப்பம் இல்லை. அவனுடைய தாய் இவற்றைக் கவனித்துக் கொண்டிருந்தாள். ஆனால், அவள் கேட்டபோது கோபால் ஏதும் பதில்சொல்ல மறுத்து விட்டான்.

கோபால் வழக்கம்போல் ஆடுகளை அழைத்துக்கொண்டு மலைவெளிக்குப் போனான், அப்போது அவன் தாயும் இரகசியமாகப் பின் தொடர்ந்து போனாள். அவன் செய்வதைக் கவனித்தாள். கோபால் அந்த மலைப்பாதைக்குப் போய் நின்று கொண்டான். தன் எதிரிகளை மனம் போனபடி திட்டினான். பதிலுக்கு வசைக்குரல்கள் கேட்டன. கோபால் அங்கேயே தலையில் கையை வைத்துக் கொண்டு, அழுதபடி உட்கார்ந்துவிட்டான்.

மறைவில் ஒளிந்து நின்று கவனித்துக் கொண்டிருந்த அவன் தாய் நிலைமையைப் புரிந்து கொண்டாள். 'அவை யெல்லாம் வெறும் எதிரொலிகளே!'' என்று சொன்னால் அவனுக்குப் புரியாது. 'எப்படி அவனுக்குத் தைரியம் சொல்லலாம்?' என்று எண்ணிக் கொண்டு வெளியே வந்தாள். எதிர்பாராத விதமாகத் தாயை அங்கே கண்ட கோபால் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான்.

''என்ன நடந்தது?'' என்று அவனை மெல்ல மெல்லத் தேற்றிக் கேட்டாள் தாய். ''இங்கே என்னுடைய பகைவர்களான சிறுவர்கள் ஒளிந்து கொண்டு தினமும் என்னை கேலி செய்து பயமுறுத்துகிறார்கள். நான் அவர்களைத் திட்டினால் பதிலுக்கு எல்லாருமாகச் சேர்ந்து என்னைத் திட்டுகிறார்கள். நான் தனியாக இங்கு வருகிறேன். எனக்குப் பயமாக இருக்கிறது!'' என்றான் கோபால்.

''பயப்படாதே! எல்லாரும் உன் பகைவர்கள் என்று ஏன் நினைத்துக் கொள்கிறாய்! எல்லாரும் உன் நண்பர்கள் என்றே எண்ணிக் கொள். எல்லாம் சரியாகிவிடும். இப்போது இங்கே நின்று கொண்டு அவர்களுக்கு வணக்கம் சொல்லு. அவர்களுடன் இனிமையாகப் பேசு! அதேபோல அவர்களும் உன்னிடம் பிரியமாகப் பேசுவார்கள்!'' என்று சொல்லிக் கொடுத்தாள் தாய்.

கோபால் அதே போலச்செய்தான், இனிமையான எதிர்க்குரல் கேட்டது. அவன் எவ்வளவுக்கெவ்வளவு இனிமையாகப் பேசினானோ அந்த அளவுக்கு இனிமையான அன்பான எதிர்க்குரல் கேட்டது. கோபாலின் பயம் தெளிந்து விட்டது. அன்றையிலிருந்து அங்கே வந்து நல்ல வார்த்தைகளையும் அன்பு ததும்பும் சொற்களையும் மட்டுமே பேசிவிட்டுப் போவான்.

கோபால் பெரியவனாக வளர்ந்ததும் உண்மையைப் புரிந்து கொண்டான். உலக வாழ்க்கையில் வெற்றிபெறவும் அதுதான் வழி என்று தெரிந்து கொண்டான். பிறரிடம்

அன்புடனும் மரியாதையுடனும் பழகினால் அவர்கள் பதிலுக்கு நல்லவர்களாகப் பழகுவார்கள் என்ற பாடத்தைப் பள்ளிக்கூடத்துக்குப் போகாமலே அந்தச் சிறுவன் தெரிந்து கொண்டுவிட்டான்!

● ●

## 49

அடர்ந்த காடு ஒன்றில் ஒரு முனிவர் தனியாக அமர்ந்து தவம் செய்து கொண்டிருந்தார். அந்தப்பக்கம் வரும் மனிதர்கள் அவருக்காகப் பழங்களைப் பறித்துக் கொண்டு வந்து அங்கே போட்டுவிட்டுப் போவார்கள். எப்போதாவதுதான் முனிவர் அதைச் சாப்பிடுவார். மற்ற வேளைகளில் அங்கே உள்ள எலி ஒன்று, பழங்களை ருசித்துச் சாப்பிட்டுவிட்டு ஓடிப்போய்விடும்.

ஒரு நாள் அந்தப் பக்கமாக வந்த கிழவி ஒருத்தி முனிவருக்காக ஒரு கிண்ணத்தில் கொஞ்சம் பாலை வைத்து விட்டுப் போய் விட்டாள். பாலைப் பருக ஒரு பூனை வந்தது! பழங்களைத் தின்று கொண்டிருந்த எலியைக் கண்டதும், அதன் மீது பாய்ந்து பிடிக்க முயன்றது. எலி நடுநடுங்கிப் போய் முனிவரின் காலடியில் இருந்த வளை ஒன்றுக்குள் புகுந்துவிட்டது.

தியானத்திலிருந்து மீண்டு கண் விழித்த முனிவர், நடந்ததையெல்லாம் புரிந்து கொண்டார். அந்த எலியை ஓர் அழகான சிறுபெண்ணாக மாற்றி விட்டார். அந்த எலிப்

பெண் மெல்ல மெல்ல வளர்ந்து மணம் செய்து கொள்வதற்குரிய பருவத்தை அடைந்தாள். அவளுக்கு உலகத்திலேயே எல்லாரும் மதிக்கக் கூடிய ஒருவரை மணந்து கொள்ள வேண்டும் என்று ஆசை. அதை அவள் சொல்லாமலே முனிவர் புரிந்து கொண்டு விட்டார், ''உன்இஷ்டப்படியே நடக்கும். யாரை நீ மணந்து கொள்ள விரும்புகிருயோ, அவரை எனக்குக் காட்டு! நான் மணம் செய்து வைக்கிறேன்'' என் சிரித்தபடி சொல்லி அனுப்பிவிட்டார்.

எலிப்பெண், ஆசிரமத்துக்குப் போனுள். முனிவருடைய அந்த ஆசிரமத்தை ஒரு விறகுவெட்டி பராமரித்துக் கொண்டிருந்தான். அழகான அந்த இளைஞனைக் கண்டதும் 'இவனை மணந்து கொண்டால் என்ன?' என்று எண்ணினுள் அந்தப் பெண். அப்படியே அவள் நினைத்துக் கொண்டிருக்கும் போதே ஒரு வியாபாரி அங்கே குதிரை வண்டியில் வந்து இறங்கினுன். தனக்கு விறகு கொண்டு வந்து கொடுத்ததற்காக அவனுக்குப் பணம் கொடுத்துவிட்டுப் போனுன். 'ஓ! இந்த விறகு வெட்டியை விட வியாபாரிதான் பெரியவன் போல இருக்கிறது!'' என்று எண்ணிக் கொண்டாள் எலிப் பெண். அந்த வியாபாரியுடன் நகரத்துக்குப் போனுள்.

அழகான அந்தப் பெண்ணை மணம் செய்து கொள்ள அந்த வியாபாரி விரும்பினுன். அவளைஅழைத்துக் கொண்டு, அரண்மனைக்குப் போனுன். அரசனிடம் அவன் ஒரு விண்ணப்பம் கொடுக்க வேண்டி இருந்தது. அரசன் வந்ததும் அந்த வியாபாரி அவர் காலில் விழுந்து வணங்கி விண்ணப்பத்தைக் கொடுத்தான். அந்தப்பெண், எல்லாரும் அரசனுக்கு மரியாதை செய்வதைப் பார்த்தாள். 'சரி! இந்த அரசனே மேலானவர். அரசனையே நாம் மணந்து கொள்வது நல்லது!'' என்று தீர்மானம் செய்து கொண்டு விட்டாள்.

அரசன் நகரில் பவனி வந்தார். எல்லாரும் அரசனுக்கு மாலையிட்டு வணங்கினுர்கள். அப்போது தெருவில் நடந்து

போய்க் கொண்டிருந்த சாமியார் ஒருவரைப் பார்த்தார் அரசன். அவரிடம் விரைந்துசென்று அவருடைய காலில் விழுந்து வணங்கினன். அரசனே அந்தச் சாமியாரின் காலில் விழுந்து வணங்குகிருனே? அரசனைவிடச் சாமியார் தான் பெரியவரோ? அவரையே மணந்து கொள்ளலாமே என்று நினைத்தாள் எலிப்பெண். சாமியாரைப் பின் தொடர்ந்து சென்ருள்.

சாமியார் ஒரு சிவன் கோயிலுக்குப் போனர். அங்கே உள்ள சிவலிங்கத்துக்கு அபிஷேகம் செய்தார். எல்லாரும் சாமியாரின் காலில் விழுந்து ஆசி வேண்டினர்கள். ஆனல் சாமியாரோ தரையில் விழுந்து சிவலிங்கத்தை வணங்கினர். கன்னத்தில் போட்டுக் கொண்டார். எலிப்பெண்ணுக்கு ஒரே ஆச்சரியம். 'சாமியாரைவிட சிவலிங்கம் அல்லவா உயர்ந்தது போலிருக்கிறது? நல்லவேளை சாமியாரை மணந்து கொள்ளாமல் போனேம்!' என்று எண்ணிப் பெருமூச்சவிட்டாள்.

அன்று இரவு அந்தக் கோயிலிலேயே தங்கிவிட்டாள். எல்லாரும் வீட்டுக்குப்போய்விட்டார்கள். வாசற்கதவையும் பூட்டிவிட்டார்கள். சிவலிங்கத்தைப் பார்த்தபடி அமர்ந்திருந்தாள், அந்த எலிப்பெண். அப்போது அங்கே ஒரு எலி மெதுவாக ஓடி வந்தது. சிவலிங்கத்துக்கு முன்பாக வைத்திருந்த பிரசாதத்தையும், பழங்களையும் சாப்பிட்டது. பிறகு சிவலிங்கத்தின் மீது ஏறி விளையாடி இறங்கிற்று!

'சிவலிங்கத்தைக் காட்டிலும் பெரியது இந்த எலி அல்லவா? நாம் எலியைத்தானே மணந்து கொள்ளவேண்டும்? ஆனல், இந்தப் பெண் உருவத்தில் நான் எப்படி எலியை மணக்க முடியும்?' என்று ஏங்கினள். தன்னுடைய பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டி முனிவரிடம் திரும்பிப் போனள்.

முனிவர் காத்துக் கொண்டிருந்தார். அவருக்கு எல்லாம் தெரியும். அந்தப் பெண் வந்து காலில் விழுந்து வணங்கியதும் அவளை மறுபடியும் எலியாக மாற்றிவிட்டார்! எலிப் பெண் மகிழ்ச்சியுடன் துள்ளிப் பாய்ந்து ஓடிவிட்டாள்!

அளவுக்கு அதிகமாக ஆசைப்படக் கூடாது. அவரவருடைய தகுதி என்ன என்பது ஆண்டவனுக்குத் தெரியும். அதற்குத் தகுந்தபடிதான் ஆண்டவன் அளந்து போட்டிருக்கிறன்...

● ●

# 50

வெகுநாட்களுக்கு முன்பு ஒரு கிராமத்தில் கிருஷ்ணன் என்ற விவசாயி உழுது பயிரிட்டுக் கொண்டு வந்தான். அவனுக்கு சுசீலா என்ற அழகிய பெண் ஒருத்தி இருந்தாள். பார்வைக்கு மிக அழகானவளாக இருந்த அவளிடம் பெயருக்கேற்ப அருமையான குணமும் இருந்தது.

கிருஷ்ணனின் மகளுடைய அழகு எல்லா இடங்களிலும் தெரிந்து புகழ் பெற்றது. பணவசதி கொண்ட பிரபுக்கள் பலர் அவளை மணம் செய்துகொள்ள விரும்பி வந்தார்கள். அவர்களிடம் குணம் இல்லை. குணவானுன மக்கள் பலரும் அவளைக் கரம்பற்ற எண்ணி வந்தார்கள். அவர்களிடம் புத்திசாலித்தனம் இல்லை. புத்திசாலிகள் பலர் அவளை மணந்து மனைவியாக்கிக் கொள்ள விரும்பிஞர்கள். அவர்

களிடம் உடல் ஆரோக்யம் இல்லை. தகுந்த மருமகனைத் தேர்ந்தெடுப்பதே கிருஷ்ணனுக்குப் பெரும் கவலையாகப் போயிற்று!

தேசம் முழுவதும் சுசீலாவின் அழகைப்பற்றி எல்லாரும் கேள்விப்பட்டிருந்தார்கள். அதனால் ஆயிரக்கணக்கான வாலிபர்கள் கிருஷ்ணனிடம் பெண் கேட்க வந்துகொண்டிருந்தார்கள். அவர்களில் செல்வமும், குணமும், புத்தி சாலித்தனமும், உடல் ஆரோக்கியமும் மிகுந்த மூவரைத் தேர்ந்தெடுத்தான் கிருஷ்ணன். அந்த மூவரில் யாருக்கு சுசீலாவை மணம் செய்து வைப்பது என்று தெரியாமல் திகைத்தான். ஊரிலுள்ள பெரியவர்கள் கூடி பஞ்சாயத்து நிறுவினார்கள். அவர்களிடமே சரியான கணவனைச் சுசீலாவுக்குத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை ஒப்படைத்தான் கிருஷ்ணன்.

"நீங்கள் மூன்று பேரும் மூன்றுமாதங்கள் கழித்துவந்து பஞ்சாயத்தாரைப் பாருங்கள். அதற்குள் நீங்கள் மிக நல்ல காரியம் ஒன்றைச் செய்திருக்க வேண்டும். அதை எங்களிடம் வந்து சொல்லுங்கள். யார் செய்தது மிகச் சிறந்தது எனக் கருதப்படுகிறதோ அந்த வாலிபனுக்கே சுசீலா மாலையிடுவாள்" என்று தீர்ப்பு கூறினார்கள் பஞ்சாயத்தார்.

அந்த மூவரும் திரும்பிப் போய்விட்டார்கள். மூன்று மாதங்களும் கழிந்தன. மறுபடி பஞ்சாயத்து கூடிற்று. மூன்று வாலிபர்களும் வந்து அமர்ந்தனர். அவர்களுக்கு எதிரே, அவர்களில் ஒருவருக்கு மாலையிடத் தயாராகக் கையில் மாலையுடன், சுசீலாவும் வந்து உட்கார்ந்து கொண்டாள். ஒவ்வொருவரும் தாங்கள் செய்த நல்ல காரியத்தைப் பற்றி சொல்ல ஆரம்பித்தார்கள்.

முதல் வாலிபன் சொன்னான்: "என்னுடைய தந்தை போனவருடம் இறந்து போய்விட்டார். அவர் எழுதி வைத்திருந்த கணக்குகளை நான் சமீபத்தில்தான் பார்த்தேன்.

அதில் அவருடைய நண்பர் ஒருவரிடம் பத்தாயிரம் ரூபாய் கடன்வாங்கி இருப்பதாகக் கணக்குப் பதிவாகி இருந்தது. அந்த நண்பரும் காலமாகி விட்டார். அவருடைய மகன் இருந்த இடம் தெரியவில்லை. அவனை எப்படியோ தேடிக் கண்டுபிடித்து பத்தாயிரம் ரூபாய் பணத்தை அவரிடம் சேர்ப்பித்து விட்டேன்.

இரண்டாவது வாலிபன் சொன்னான்: ''என்னுடைய ஊருக்கு அருகில் ஒரு காடு இருக்கிறது. அங்கே ஒருநாள் நான் குதிரைமீது அமர்ந்து வேட்டையாடப் போய்க் கொண்டிருந்தேன். காட்டின் நடுவே ஒரு பெண் கதறியழும் சத்தம் கேட்டு அங்கே போய்ப் பார்த்தேன். நான்கு முரடர்கள் அந்த இளம் பெண்ணைப் பலவந்தப்படுத்திக் கொண்டிருந்தார்கள். துப்பாக்கியைக் காட்டி மிரட்டி, அவர்களை துரத்திவிட்டு, அந்தப் பெண்ணைக் குதிரைமேல் ஏற்றிக் கொண்டு வந்து பத்திரமான இடத்தில் சேர்ப்பித்தேன்.''

மூன்றாவது வாலிபன் சொன்னான்: ''ஒருநாள் நான் என் ஊருக்கு அருகில் உள்ள மலைப் பகுதிக்குப் போயிருந்தேன். மலைமுகட்டில் ஒரு பெரிய பாறையின் ஓரமாக ஒரு மனிதன் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். நான் கிட்டே போய்ப் பார்த்தேன். அந்த மனிதன் என்னுடைய பரம வைரி. பலவாறாகவும் அவன் என்னைக் கொடுமைப் படுத்தி இருக்கிறான். நான் பார்த்துக் கொண்டிருந்தபோதே அவன் தூக்கத்தில் புரண்டு படுத்தான். சில விநாடிகள் நான் ஏதும் செய்யாமலே விட்டிருந்தால் கூடப் போதும். அவன் அந்த மலை முகட்டிலிருந்து விழுந்து தூள்தூளாகி இருப்பான். ஆனால், நான் அவனை மெதுவாகத் தட்டி எழுப்பிக் கையைப்பற்றித் தூக்கிப் பத்திரமான இடத்துக்குக் கொண்டுவந்து சேர்த்து விட்டுத் திரும்பினேன்.''

பஞ்சாயத்தார் ஒன்றுகூடிப் பேசிமுடிவு சொன்னார்கள். அவர்களுடைய தலைவர் கிருஷ்ணனை அழைத்து அவனிடம் அவர்களுடைய முடிவைத் தெரிவித்தார்கள்.

களிடம் உடல் ஆரோக்யம் இல்லை. தகுந்த மருமகனைத் தேர்ந்தெடுப்பதே கிருஷ்ணனுக்குப் பெரும் கவலையாகப் போயிற்று!

தேசம் முழுவதும் சுசீலாவின் அழகைப்பற்றி எல்லாரும் கேள்விப்பட்டிருந்தார்கள். அதனால் ஆயிரக்கணக்கான வாலிபர்கள் கிருஷ்ணனிடம் பெண் கேட்க வந்துகொண்டிருந்தார்கள். அவர்களில் செல்வமும், குணமும், புத்திசாலித்தனமும், உடல் ஆரோக்கியமும் மிகுந்த மூவரைத் தேர்ந்தெடுத்தான் கிருஷ்ணன். அந்த மூவரில் யாருக்கு சுசீலாவை மணம் செய்து வைப்பது என்று தெரியாமல் திகைத்தான். ஊரிலுள்ள பெரியவர்கள் கூடி பஞ்சாயத்து நிறுவினார்கள். அவர்களிடமே சரியான கணவனைச் சுசீலாவுக்குத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை ஒப்படைத்தான் கிருஷ்ணன்.

"நீங்கள் மூன்று பேரும் மூன்றுமாதங்கள் கழித்துவந்து பஞ்சாயத்தாரைப் பாருங்கள். அதற்குள் நீங்கள் மிக நல்ல காரியம் ஒன்றைச் செய்திருக்க வேண்டும். அதை எங்களிடம் வந்து சொல்லுங்கள். யார் செய்தது மிகச் சிறந்தது எனக் கருதப்படுகிறதோ அந்த வாலிபனுக்கே சுசீலா மாலையிடுவாள்" என்று தீர்ப்பு கூறினார்கள் பஞ்சாயத்தார்.

அந்த மூவரும் திரும்பிப் போய்விட்டார்கள். மூன்று மாதங்களும் கழிந்தன. மறுபடி பஞ்சாயத்து கூடிற்று. மூன்று வாலிபர்களும் வந்து அமர்ந்தனர். அவர்களுக்கு எதிரே, அவர்களில் ஒருவருக்கு மாலையிடத் தயாராகக் கையில் மாலையுடன், சுசீலாவும் வந்து உட்கார்ந்து கொண்டாள். ஒவ்வொருவரும் தாங்கள் செய்த நல்ல காரியத்தைப் பற்றி சொல்ல ஆரம்பித்தார்கள்.

முதல் வாலிபன் சொன்னான்: "என்னுடைய தந்தை போனவருடம் இறந்து போய்விட்டார். அவர் எழுதி வைத்திருந்த கணக்குகளை நான் சமீபத்தில்தான் பார்த்தேன்.

அதில் அவருடைய நண்பர் ஒருவரிடம் பத்தாயிரம் ரூபாய் கடன்வாங்கி இருப்பதாகக் கணக்குப் பதிவாகி இருந்தது. அந்த நண்பரும் காலமாகி விட்டார். அவருடைய மகன் இருந்த இடம் தெரியவில்லை. அவனை எப்படியோ தேடிக் கண்டுபிடித்து பத்தாயிரம் ரூபாய் பணத்தை அவரிடம் சேர்ப்பித்து விட்டேன்.

இரண்டாவது வாலிபன் சொன்னான்: ''என்னுடைய ஊருக்கு அருகில் ஒரு காடு இருக்கிறது. அங்கே ஒருநாள் நான் குதிரைமீது அமர்ந்து வேட்டையாடப் போய்க் கொண்டிருந்தேன். காட்டின் நடுவே ஒரு பெண் கதறியழும் சத்தம் கேட்டு அங்கே போய்ப் பார்த்தேன். நான்கு முரடர்கள் அந்த இளம் பெண்ணைப் பலவந்தப்படுத்திக் கொண்டிருந்தார்கள். துப்பாக்கியைக் காட்டி மிரட்டி, அவர்களை துரத்திவிட்டு, அந்தப் பெண்ணைக் குதிரைமேல் ஏற்றிக் கொண்டு வந்து பத்திரமான இடத்தில் சேர்ப்பித்தேன்.''

மூன்றாவது வாலிபன் சொன்னான்: ''ஒருநாள் நான் என் ஊருக்கு அருகில் உள்ள மலைப் பகுதிக்குப் போயிருந்தேன். மலைமுகட்டில் ஒரு பெரிய பாறையின் ஓரமாக ஒரு மனிதன் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். நான் கிட்டே போய்ப் பார்த்தேன். அந்த மனிதன் என்னுடைய பரம வைரி. பலவாறாகவும் அவன் என்னைக் கொடுமைப் படுத்தி இருக்கிறான். நான் பார்த்துக் கொண்டிருந்தபோதே அவன் தூக்கத்தில் புரண்டு படுத்தான். சில விநாடிகள் நான் ஏதும் செய்யாமலே விட்டிருந்தால் கூடப் போதும். அவன் அந்த மலை முகட்டிலிருந்து விழுந்து தூள்தூளாகி இருப்பான். ஆனால், நான் அவனை மெதுவாகத் தட்டி எழுப்பிக் கையைப்பற்றித் தூக்கிப் பத்திரமான இடத்துக்குக் கொண்டுவந்து சேர்த்து விட்டுத் திரும்பினேன்.''

பஞ்சாயத்தார் ஒன்றுகூடிப் பேசிமுடிவு சொன்னார்கள். அவர்களுடைய தலைவர் கிருஷ்ணனை அழைத்து அவனிடம் அவர்களுடைய முடிவைத் தெரிவித்தார்கள்.

"'முதல் வாலிபன் மிக நல்ல காரியம் செய்திருக்கிறன். நம்பிக்கைத் துரோகம் நேராமல் தடுத்து உரிய பணத்தை உரியவரிடம் சேர்த்துத் தந்தையின் பெயரைக் காப்பாற்றி இருக்கிறன். ஆனல், அவன் செய்தது நல்ல காரியமானு லும் கடமைதான்.

''இரண்டாவது வாலிபன் துணிச்சலுடன் மிக நல்ல காரியம் செய்திருக்கிறன். அவனுடைய உயிருக்கே ஆபத்து நேர்ந்திருக்கக் கூடும். அதையும் பொருட்படுத்தாமல், விரைந்து சென்று அந்தப் பெண்ணின் கற்பைக் காப்பாற்றி இருக்கிறன். அவன் செய்தது நல்ல காரியம்தான். ஆனலும் அதை ஒரு நல்ல பண்பு என்று மட்டும்தான் சொல்ல முடி கிறது."

மூன்றாவது வாலிபன் செய்த காரியம் மகத்தானது. நல்ல மனிதனும் கூடத் தன்னைக் கெடுத்தவர்களைத் தண்டிக் கத் தயங்கமாட்டான். இந்த வாலிபன் அப்படித் தண்டிக்க வேண்டிய அவசியம் கூட இல்லை. சும்மா இருந்தாலே போதும், அவனுடைய பகைவன் அழிந்திருப்பான். ஆனல் அந்த வாலிபன் பகைவனுக்கு அருள்புரிந்து உதவி இருக் கிறன். இது மனிதத் தன்மைக்கு அப்பாற்பட்ட உயர்ந்த பண்பு. தெய்வீகமானது. இதையே நாங்கள் மிகச்சிறந்த நல்ல காரியம் என்று கருதுகிறேம்!" என்று கூறி முடித்தார் கள்.

சுசீலாவின் மணமாலையும் அந்த வாலிபனுக்கே கிடைத்தது!

பொதுவாக நல்லவனுக இருக்க வேண்டியது மனித னின் பண்பு. ஆனல் மிக நல்லவனுக மாறும்போது, சாதா ரண மனிதன் தெய்வமாகி விடுகிறன்.

# 51

கடவுள் பக்தி நிறைந்த ஒரு விவசாயி சிறு கிராமம் ஒன்றில் வாழ்ந்து வந்தான். அவனுடைய மனைவிக்குக் கடவுள் பக்தி அவ்வளவாக இல்லை. அதனால் அவன் பூஜை செய்யும்போதெல்லாம் அவனைத்திட்டிக்கொண்டிருப்பாள். விவசாயி கந்தனுக்குப் பணத்தின்மீது மோகம் இல்லை. அதனால் அவன் அதிகம் சம்பாதிக்கவில்லை. அவன் மனைவி வள்ளிக்குப் அது பெரிய குறையாக இருந்தது.

ஒரு நாள் நிலத்தில் உழுதுகொண்டிருந்தபோது கந்தனுக்கு ஒரு பெட்டி கிடைத்தது. அதைத் திறந்து பார்த்தான். அதில் நிறைய தங்கக் காசுகள் இருந்தன. கந்தன் அந்தப் பெட்டியை மூடி தன்னுடைய நிலத்தின் ஓரமாகப் போட்டிருந்த சிறு குடிசையில் வைத்துவிட்டு வேலையைத் தொடர்ந்தான். மாலை நேரமானதும் அதைக் கவனிக்காமல் அப்படியே வீட்டுக்குப் போய்விட்டான்.

அன்று இரவு அவன் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது தன் மனைவியிடம் விஷயத்தைச் சொன்னான். வள்ளி அதைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனாள். "கிடைத்த பெரும் செல்வத்தை இப்படி உதறித்தள்ளிவிட்டீர்களே?" என்று கூறிச் சீறினாள். "அது கடவுள் எனக்குக் கொடுத்ததானால் அது அங்கேயே இருக்கும். யாரும் எடுத்துக்கொண்டு போக மாட்டார்கள்;" என்று சொல்லிவிட்டுக் கந்தன் நிம்மதியாகத் தூங்கப்போய்விட்டான்.

கந்தனுடைய வீட்டில் திருடுவதற்காக இருவர் வந்திருந்தார்கள். அந்தத் திருடர்கள் காதில் இது விழுந்தது. 'அனாவசியமாக இந்த வீட்டில் திருடப்போய் சிரமப்படு

வானேன்? அந்தப் பெட்டியைத் தூக்கிக்கொண்டுபோய் விடலாம்!'' என்று தீர்மானித்து கந்தனுடைய நிலத்துக்கு இரவோடு இரவாகப் போனார்கள். அங்கே அந்த பெட்டி இருந்தது. அதைப் பத்திரமாக இன்னொரு இடத்துக்குக் கொண்டு போய் வைத்துத் திறந்தார்கள். இரண்டு நல்ல பாம்புகள் சீறிக்கொண்டு படம் எடுத்தன. பெட்டியைப் பத்திரமாக மூடி வைத்துவிட்டு வந்துவிட்டார்கள். மறு நாள் இரவு கந்தன் என்ன சொல்லுகிறான் என்பதைக்கேட்க அவனுடைய வீட்டுக்கு வந்து ஒளிந்து கொண்டிருந்தார் கள்.

''இன்று குடிசைக்குப் போனேன். அங்கே பெட்டி யைக் காணோம். நான் சொன்னது சரியாகிவிட்டது! ஆண்டவன் நமக்கு அதைக் கொடுக்கவில்லை. அதனால்தான் அது நமக்குக் கிடைக்கவில்லை!'' என்றான் கந்தன்.

வள்ளி மிகுந்த கோபத்துடன் ''அதை நீங்கள் நேற்றே கொண்டு வந்திருக்கவேண்டும். உங்கள் அஜாக்கிரதை யினால்தான் அது கைநழுவிப்போய்விட்டது...ஆண்டவன் கொடுத்ததை நீங்கள் அலட்சியம் செய்துவிட்டீர்கள்!'' என்றாள்.

கந்தன் வாய்விட்டுச் சிரித்து, ''கடவுள் அப்படி அதை நான் அடைந்தே தீரவேண்டும் என்று எண்ணினால் என் வீட்டு வாசற்படியிலேயே கொண்டு வந்து வைத்துவிடு வார். கவலைப்படாதே;'' என்று சொல்லித் தூங்கப்போய் விட்டான்!''

மறைந்திருந்து இதைக்கேட்ட திருடர்களுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. கந்தன் உண்மையாகவே இப்படி பணத்தாசை இல்லாமல் பேசுகிறானா அல்லது அவர்கள்வந்து போவதை ஊகித்துக்கொண்டு, அவர்களை மாட்டி விட நினைக்கிறானா என்று புரியாமல் தடுமாறினார்கள். தங்களைத் திண்டாடவிட்ட கந்தனைத் தாங்களும் திண்டாட வைப்பது என்று முடிவு செய்துகொண்டார்கள்.

இரவோடு இரவாக அந்தப் பெட்டியை மறைத்து வைத்திருந்த இடத்துக்குப் போனார்கள். பெட்டி அங்கேயே இருந்தது. அதைத் திறந்து பார்த்தார்கள். அங்கே மேலே இரண்டு நல்ல பாம்புகள் இன்னும் சீறிப் படமெடுத்த வண்ணம் இருந்தன. இதை இப்படியே தூக்கிக் கொண்டு போய்க் கந்தனின் வீட்டு வாசலுக்கருகில் வைத்து விடுவோம்! நம்மைத் திண்டாடவைத்த கந்தன், இதைத் திறக்கட்டும். பாம்பு கடித்து இறந்துபோவான். இல்லாவிட்டால் பணத்தாசை பிடித்த அவனுடைய மனைவி வள்ளி இதைத் திறப்பாள். அவளுக்கு நல்லபாம்பு கடி கிடைக்கும், அனுபவிக்கட்டும்!' என்று தீர்மானம் செய்தார்கள். அந்தப் பெட்டியை அப்படியே மெதுவாகத் தூக்கிக் கொண்டு வந்து கந்தனின் வீட்டு வாசலில் வைத்துவிட்டுப் போய் விட்டார்கள்.

விடியற்காலையில் எழுந்து வெளியே வந்த கந்தன் நிலத்துக்குப் போகக் கலப்பையை எடுத்தான். அப்போது அருகில் இருந்த அந்த இரும்புப்பெட்டி, அவன் கண்ணிற்பட்டது. சிரித்துக்கொண்டே வந்து, தூங்கிக்கொண்டிருந்த மனைவியைத் தட்டி எழுப்பினான்.

''இங்கே வந்து பார்! நான் சொன்ன மாதிரியே ஆகி விட்டது! ஆண்டவன் கொடுப்பதானால் வீட்டு வாசலுக்கே கொண்டு வந்து கொடுத்துவிடுவார் என்று சொன்னேன் அல்லவா? அந்தப் பெட்டி இங்கேயே வந்துவிட்டது, பார்'' என்று சொன்னான் கந்தன். வள்ளி ஓடிவந்து பெட்டியைப் பார்த்தாள். மெதுவாக அந்தப் பெட்டியைத் திறந்தாள். உள்ளே நிறையத் தங்கக் காசுகள் இருந்தன! ''நீங்கள் சொன்னது உண்மைதான். கடவுள் நமக்கென்று அருளியது மட்டும் அல்ல; அதைப் பத்திரமாகக் காப்பாற்றி நம் கையிலேயே கொண்டு வந்து கொடுத்திருக்கிறார்!'' என்று சொல்லி மகிழ்ந்தாள்.

அன்றிலிருந்து அவளும் கடவுள் பக்தி மிகுந்தவளாக மாறி விட்டாள். கந்தனின் தொல்லையும் நீங்கியது.

நமக்கு எது கிடைக்க வேண்டும் என்று ஆண்டவன் தீர்மானிக்கிறானோ அது நமக்கு எப்படியும் நிச்சயமாகக் கிடைக்கும். ஆனால் அது நமக்குக் கிடைக்க ஆண்டவனிடம் அசைக்க முடியாத நம்பிக்கை மட்டும் இருக்க வேண்டும்.

● ●

# 52

அந்தக் காலத்தில் மாணவர்கள் குருகுலவாசம்செய்து தான் பாடங்களைக் கற்பது வழக்கம். ஆசிரியருடைய ஆசிரமத்துக்குப் போய் அவருக்குத் தொண்டு செய்வார்கள். குப்பையைப் பெருக்குவார்கள், துணிகளைத் தோய்த்துப் போடுவார்கள், தூங்கும் போது காலைப் பிடிப்பார்கள். புழுக்கமாக இருந்தால் விசிறுவார்கள், அப்படியே ஆசிரியர் சொல்லிக்கொடுக்கும் பாடங்களைக் கற்றுக் கொள்வார்கள். அவர் சொல்லுவதை ஓலைச்சுவடிகளில் எழுதிக் கொள்வார்கள், குருகுலவாசம் இப்படி மனத்தையும், அறிவையும் பண்படுத்தும் பயிற்சியாக அமைந்துவிடும்.

இதைப்போல ஒரு குருகுலத்தில் கல்விகற்கப் பாண்டவர்கள் போனார்கள். அங்கே அவர்களைத் தவிரப் பதினைந்து மாணவர்கள் இருந்தார்கள். இருபது பேரும் அந்த முனிவரிடம் ஆர்வத்தோடு கல்வி கற்றார்கள். இரண்டு ஆண்டுகள் போனது தெரியாமல் ஓடி மறைந்துவிட்டன. முனிவர் மாணவர்களுக்கு விடை கொடுத்து அனுப்ப வேண்டிய நாளும் வந்துவிட்டது. அவர்கள் என்னைக்

கற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்று அறிய விரும்பினார் ஆசிரியர்.

ஒவ்வொரு மணுக்கனையும் அழைத்து அவன் எழுதிக் கற்றுக் கொண்ட பாடங்களைப் பற்றிக் கேட்டார். அவரிடம் பயின்ற மாணவர்கள் எல்லாருமே புத்திசாலிகள். இளவரசர்களாக இருப்பவர்கள். அதனால் அவர்களிடம் அபாரமான கல்வியறிவை எதிர்பார்த்தார் அந்த முனிவர்.

ஒரு மாணவன் முன்னால் வந்து அவன் எழுதிக் கற்றுக் கொண்ட சரித்திர பாடம் அவ்வளவையும் படித்துக் காண்பித்தான். இன்னொருவன் அவன் அறிந்திருந்த பூகோளப் பாடத்தை விளக்கினான். விலங்கியல், தாவர இயல், மனோதத்துவம், மருத்துவம் இப்படிப் பல பகுதிகளையும் ஒவ்வொருவரும் விளக்கிக் கொண்டே போனார்கள்.

தர்மராஜாவின் முறையும் வந்தது. அவர் தன் கையிலிருந்த ஓலைச்சுவடிக் கட்டைப் பிரிக்கவே இல்லை. மற்ற மாணவர்களைக் காட்டிலும் அவர்தான் நிறையக் கற்றுக் கொண்டிருப்பார் என்று ஆசிரியர் எண்ணினார். அதனால், தர்மரிடம், "நீ கற்றுக் கொண்டதைச் சொல். ஓலைச் சுவடிகளைப் பிரித்துப் படி!" என்றார் அந்த முனிவர். தர்மர் அசைந்து கொடுக்கவில்லை. அந்தச் சுவடிக்கட்டைப் பிரிக்கவும் இல்லை.

"ஐயா! நான் கற்றுக் கொண்டது ஒன்றே ஒன்றுதான். அதுவே வாழ்க்கையில் எனக்கு மிகவும் முக்கியமான பாடமாக அமையும்!" என்றார் தர்மராஜா.

"ஒன்றே ஒன்றுதானா? இரண்டு ஆண்டுகளாகப் பாடங்களைப் படித்துக் கற்றுக்கொண்டது ஒன்றே ஒன்றுதானா?" என்று திரும்பவும் கேட்டார் முனிவர். அவருக்கு ஒன்றும் புரியவில்லை. வயதில் மற்ற மாணவர்களைவிட முதிர்ந்தவர். பண்புகளில் உயர்ந்தவர். அவர் இப்படிப் பதில் சொன்னால்

மற்ற மாணவர்களின் நிலை என்ன? அவர்கள் கெட்டுப் போய்விடுவார்களே?

''தர்மா! நன்றாகச் சிந்தித்துப் பதில் சொல்! நான் உன்னை இந்த இரண்டு ஆண்டுகளில் கற்றுக்கொண்டது என்ன என்று கேட்கிறேன்!'' என்று கூறினார். தர்மரின் முகத்தில் சிறு மாறுதல்கூட இல்லை. ''இல்லை ஐயா! நான் கற்றுக் கொண்ட முக்கியமான பாடம் ஒன்றே ஒன்று மட்டும்தான்'' என்றார்.

முனிவருக்குக் கடுங்கோபம் வந்து விட்டது. ''உனக்கு வெட்கமாக இல்லையா? உன்னைவிட வயதில் இளையவர்கள் எவ்வளவு பாடங்களைக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள்? எவ்வளவு விரிவாக எடுத்துச்சொன்னார்கள்? நீயும் ஓலைச் சுவடிகளில் நிறையக் குறித்து வைத்திருக்கிறாய், அவற்றைஏன் எடுத்துப் படிக்கக் கூடாது? இப்போதாவது மனத்தெளிவுடன் பதில் சொல்லு!'' என்று கேட்டார்.

''ஐயா! இது உங்களுக்கு ஏமாற்றம் அளிப்பதானால், அதற்காக நான் மிக வருந்துகிறேன். ஆனால் நான் மிக முக்கியமான பாடமாகக் கற்றுக் கொண்டிருப்பது ஒன்றே ஒன்றுதான். மற்ற எதையும் எடுத்துச் சொல்லநான் விரும்பவில்லை''' என்று உறுதியாகச் சொன்னார். இதைக் கேட்டு எல்லா மாணவர்களும் சிரித்தார்கள். முனிவரின் கோபம் எல்லை கடந்தது. கையை நீட்டி தர்மராஜாவின் கன்னத்தில் ஓங்கி அறைந்தார்.

தர்மரின் கன்னம் சிவந்துவிட்டது. கண்கள் கலங்கி விட்டன. ஆனால் அவர் அமைதியை இழக்கவில்லை. தலையைக் குனிந்து கொண்டு நின்றார். அவருடைய பிடிவாதம் முனிவருக்கு மேலும் ஆத்திரத்தையே உண்டு பண்ணிற்று. மற்ற கன்னத்திலும் ஓங்கி அறைந்தார். இதைக் கண்ட மாணவர்களுக்குப் பயமாகப் போய்விட்டது. ஆனால் தர்மர் நின்ற நிலையிலேயே பேசாமல் தலையைக் குனிந்து கொண்டிருந்தார்.

"அப்படி நீ கற்றுக் கொண்டு விட்ட முக்கியமான பாடம்தான் என்ன? அது எல்லாருக்கும் புரியும்படி நீயே எடுத்துச் சொல்லு!" என்று இடிபோன்ற குரலில் முழங்கினார்.

"ஐயா! அதை மட்டும் நான் ஓர் ஓலைச் சுவடியில் தனியாகக் குறித்து வைத்திருக்கிறேன். இதோ பாருங்கள். தாங்களேபடியுங்கள்!" என்று அந்தச் சுவடியை எடுத்து நீட்டினார் தர்மர். அதை வாங்கி உரத்த குரலில் படித்தார் அந்த முனிவர்.

"எப்படிப்பட்ட சோதனை ஏற்பட்டாலும், நிதானம் இழந்து கோபத்துக்கு ஆளாகிவிடக் கூடாது!"

அந்த ஒரு கணத்தில் முனிவரும், எல்லா மாணவர்களும் தர்மரைப் புரிந்து கொண்டார்கள். அவர் கற்றுக் கொண்டது ஏட்டுச் சுரைக்காய் அல்ல என்பதைத் தெரிந்து கொண்டார்கள். வாழ்க்கையில் பயன்படக் கூடிய மிக முக்கியமான அனுபவ பாடம் அது.

முனிவரின் கண்களில்நீர் நிறைந்தது. தர்மராஜாவை அன்போடு அணைத்துக்கொண்டார். "தர்மா! என்னை மன்னித்துவிடு. நீ மாணவன் அல்ல. நீயே ஆசிரியன்! நான் தெரிந்து கொள்ளாத, இதுவரை அனுபவ முறையில் கற்றுக் கொள்ளாத மிக முக்கியமான பாடத்தை நீ இப்போது எனக்குக் கற்றுக் கொடுத்து விட்டாய். நான் உனக்கு ஆசிரியன் என்று சொல்லிக் கொள்வதில் மிகுந்த பெருமைப் படுகிறேன்!" என்று கனிந்த குரலில் சொல்லித் தர்மரைப் பாராட்டினார்.

● ●

# 53

ஒரு பெரிய சாம்ராஜ்ஜியத்தின் அரசனுக்குப் பணி புரியும் பாக்கியம் ஒரு நாவிதனுக்குக் கிடைத்தது. அவனுக்குச் சம்பளமாக அரசன் மாதம் பத்து பொற்காசுகள் கொடுத்து வந்தான். நாவிதனுக்குக் குழந்தைகள் இல்லை. பூர்வீக சொத்தும் கொஞ்சம் இருந்தது. அதனால் அவன் அந்தச் சம்பளத்தில் சௌகரியமாக வாழ்ந்து வந்தான்.

ஒரு நாள் அவன் அரண்மனைக்கு வந்து விட்டுத் திரும்பும் போது மழையிலிருந்து ஒதுங்க ஒரு பாழ் மண்டபத்தில் தங்க வேண்டியதாயிற்று. அப்போது அங்கே அவன் மட்டுமே தனியாக இருந்தான். திடீரென்று ஒரு குரல் அவனை, "நீ யார்?" என்று கேட்டது. நாவிதன் தன் பெயரைச் சொன்னதும், "நீ ஒரு ஏழைதானே? நீ பணக்காரனாக விரும்புகிறாயா?" என்று அந்தக் குரல் கேட்டது. நாவிதனுக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாயிற்று.

"நிச்சயமாக நான் பணக்காரனாக விரும்புகிறேன். நீ எனக்கு என்ன கொடுக்கப் போகிறாய்?" என்று கேட்டான்.

"இப்போது சொல்ல மாட்டேன். நீ வீட்டுக்குப் போய்ப் பார், அங்கே ஏழு ஜாடிகள் இருக்கும். அவற்றில் உனக்கு வேண்டியது இருக்கும். அவற்றை நீ பத்திரமாகப் பாதுகாத்து வா!" என்று சொல்லிவிட்டு அந்த அசரீரிக் குரல் அடங்கி விட்டது.

நாவிதன் வீட்டுக்குப் போனான். அங்கே ஏழு ஜாடிகள் இருந்தன. நாவிதனுக்கு மிகுந்த ஆச்சரியம் உண்டாயிற்று. அவற்றைத் திறந்து பார்த்தான். அவற்றில் ஆறு ஜாடிகளில் பொற்காசுகள் குவிந்து கிடந்தன. ஏழாவது ஜாடி

மட்டும் பாதி அளவே நிரம்பி இருந்தது. நாவிதனுக்கும் அவன் மனைவிக்கும் மிகுந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. அதே சமயம் ஒரு சிறு குறையும் மனத்தில் தலைகாட்டிற்று. "இந்த ஏழாவது ஜாடியிலும் நிறைய பொற்காசுகள் இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்? அது இப்படி அரை குறையாக நின்றுவிட்டதே?" என்று வருத்தப்பட்டார்கள்.

"எப்படியாவது சிரமப்பட்டு இந்த ஏழாவது ஜாடியிலும் பொற்காசுகளைக் குவித்துவிடவேண்டும். அதுவரையில் நாம் அனுவசியச் செலவு எதுவும் செய்யக்கூடாது!" என்று இருவரும் தீர்மானித்துக் கொண்டார்கள். அன்று முதல் சாப்பாட்டின் அளவைக்கூடக் குறைத்துக் கொண்டு பணம் சேர்க்க ஆரம்பித்தார்கள். அப்படிச் சேர்த்தும் போதவில்லை. ஒரு ஆண்டு ஆயிற்று. "அரசனிடம் நீங்கள் கூடுதலாகச் சம்பளம் கேட்டுப் பாருங்களேன்!" என்று தூண்டினாள் நாவிதனின் மனைவி.

தயங்கித் தயங்கி நாவிதனும், அரசனிடம் "எனக்குச் சம்பளம் போதவில்லை. கூடுதலாக நீங்கள் ஏதாவதுகொடுத்தால் தேவலை" என்று கேட்டான். அரசனுக்கு ஒரே ஆச்சரியம்! அத்தனை ஆண்டுகளில் ஒருமுறைகூட அவன் சம்பளம் போதவில்லை என்று சொன்னது கிடையாது. இருப்பினும் அவனே இப்போது வாய்விட்டுக் கேட்ட போது அரசனுக்கு மறுக்க மனம் இல்லை. மேலும் பத்து பொற்காசுகள் கூடுதலாகச் சம்பளம் கொடுக்க உத்தரவிட்டான்.

அந்த இருபது பொற்காசுகளையும் செலவு செய்யாமல் அப்படியே மீந்து ஏழாவது ஜாடியில் போட்டு வந்தான் நாவிதன். அப்படியும் அந்த ஏழாவது ஜாடி நிறைவதாகக் காணோம். நாவிதனின் மனைவி மறுபடியும் தூண்டினாள். அரசனிடம் போய் சம்பள உயர்வு கேட்டான் நாவிதன். அரசன் அதிர்ச்சி அடைந்தான். 'அதற்குள் இரண்டாவது முறையாக அதிகச் சம்பளம் கேட்கிறானே?' என்று திடுக்கிட்டுப் போனான்,

''நீ இந்தப் பணத்தை என்ன செய்கிறாய்? நீ சரியாகச் சாப்பிடுவதாகக் கூடத் தோன்றவில்லை. உண்மையைச் சொல். நான் உன் குறையைத் தீர்த்து வைக்கிறேன்!'' என்றான் அரசன். நாவிதன் நடந்தது அவ்வளவையும் சொல்லி, அரசனின் காலில் விழுந்து மன்னிப்பு கேட்டுக் கொண்டான்.

''உனக்கு இந்த ஏழு ஜாடிகளையும் கொடுத்தது ஏதோ ஒரு கெட்ட தேவதை என்று நினைக்கிறேன். ஒரு பாவமும் அறியாமல் வாழ்ந்த உங்களை அது பேராசை வளரும்படி தூண்டி விட்டிருக்கிறது. அந்த தேவதை கொடுத்த ஆறரை ஜாடி பொற்காசுகளை உங்களால் செலவு செய்து மகிழ்ச்சியாக இருக்க முடியவில்லை. ஏழாவது ஜாடியை நிரப்புவதில் உங்களிடம் உள்ளதையும் மீத்துப் போட்டுக் கொண்டிருக்கிறீர்கள். உங்களால் வாழ்க்கையில் இனி திருப்தியோடு வாழவே முடியாது. இந்தப் பேராசை உங்களைக் கொன்று விடும்!'' என்றான் அரசன்.

''அரசே! நான் செய்தது முட்டாள் தனம். நான் எப்படி இதிலிருந்து மீளுவது? எனக்கு வழிகாட்டுங்கள்'' என்று கெஞ்சினான் நாவிதன்.

''இன்று மறுபடியும் அந்தப் பாழ்மண்டபத்துக்குக் போய் இரவு வரையில் காத்திரு. இரவு தனிமையாக இருக்கும் போது 'எனக்கு இந்த ஏழு ஜாடிகளும் தேவை இல்லை. நீ கொடுத்த செல்வத்தால் எனக்குத் துன்பம்தான் மிஞ்சிற்று. இவற்றைத் திரும்ப எடுத்துக் கொண்டுவிடு!' என்று உரக்கச் சொல். நீ வீட்டுக்குப் போய்ப் பார்த்தால் அவை மறைந்து போயிருக்கும்'' என்று புத்திமதி சொன்னான் அரசன்.

நாவிதன் அரசன் சொன்னபடி செய்தான். ஏழு ஜாடிகளும் மறைந்து விட்டன. அவனுக்குக் கிடைத்த ஆறரை ஜாடி பொற்காசுகளுடன் அவன் சேமித்துப் போட்ட காசு

களும் மறைந்து விட்டன. ஆனால் அதற்காக அவன் வருத்தப் படவில்லை. அந்தப் பணத்துடன் அவனுடைய கவலைகளும் மறைந்து விட்டன. அதுவே அவனுக்கு மிகுந்த மனத்திருப் தியை அளித்தது!



## 54

துரோணாச்சாரியாரிடம் பாண்டவர்களும் கௌரவர் களும் வில்வித்தை கற்றுக் கொண்டார்கள். ஐந்து ஆண்டு கள் முடிந்த பிறகு துரோணர் அவர்களுடைய திறமையைச் சோதிக்க விரும்பினார். தோட்டத்துக்கு அவர்களை வர வழைத்தார். அங்கே அவர்களுடைய வில் பயிற்சித் திறமையைப் பார்க்கப் பெருங்கூட்டமே கூடி இருந்தது.

முதலாவதாகத் தர்மரைக் கூப்பிட்டார் துரோணர். அவர் வில்லையும், அம்பையும் எடுத்துக் கொண்டு வந்தார். மாமரம் ஒன்றின் கிளையில் பறவையின் வடிவத்தில் ஒரு மரப்பொம்மை வைக்கப்பட்டிருந்தது. அங்கிருந்து நூறு கஜதூரத்தில் ஒரு கோட்டைப் போட்டு, ''இங்கிருந்து நீ அந்தப் பறவையை அடித்து வீழ்த்த வேண்டும்!'' என்றார் துரோணர்.

''சரி அப்படியே செய்கிறேன் ரொம்ப சுலபம்'' என்றார் தர்மர்.

''நீ தயார்தானா? வில்லை எடுத்துக்குறிபார். இப்போது சொல்! உன் பார்வைக்கு நான் தெரிகிறேனா?'' என்று கேட்டார். துரோணர்.

''இது என்ன கேள்வி சுவாமி? தாங்கள் தெரியாமலா? ஆசிரியரான தங்கள் மீதுதானே என்னுடைய முழுக்கவனமும் இருக்கிறது?'' என்று பதில் சொன்னார் தருமர். ''அப்படியானால் நீ வில்லை வைத்துவிட்டுப் போய்விடு!'' என்று கூறி விட்டார் துரோணர். தர்மருக்கு மிகவும் தலைகுனிவாகப் போய் விட்டது, வந்தவர்கள் எல்லாரும் பார்த்துக் கொண்டிருக்கத் தன் இருப்பிடத்துக்கு வந்து அமர்ந்துவிட்டார்.

அடுத்ததாகப் பீமன் வந்தான். வில்லை எடுத்துக் குறி பார்த்தான். ''பீமா! ஒரு நிமிடம் இங்கேபார்க்க வந்துள்ள பெரியோர்களைக் கவனிக்கிறாயா?'' என்று கேட்டார் துரோணர். ''கட்டாயமாகக் கவனிக்கிறேன் சுவாமி! அவர்கள் பெரியோர்களாயிற்றே?'' என்றான் பீமன்.

''நீ வில்லை வைத்துவிட்டுப் போய்விடலாம்!'' என்று கூறிவிட்டார் துரோணர். வெட்கித் தலைகுனிந்து போய் விட்டான் பீமன்.

துரியோதனன் வந்தான். அவன் வில்லை எடுத்துக் குறி பார்த்ததும் ''உன் கண்ணிற்படுவது என்ன?'' என்று கேட்டார் துரோணர். ஏன் சுவாமி இந்தப் பெரிய மரம், அதன் கிளைகள் கிளையில் அமர்ந்துள்ள பறவை எல்லாமே எனக்குத் தெளிவாகத் தெரிகின்றன!'' என்றான் அவன். ''துரியோதனா வில்லைக் கீழே போடு! உன்னால் அந்தப் பறவையை வீழ்த்த முடியாது'' என்று கூறிவிட்டார் துரோணர். முணுமுணுத்துக் கொண்டே திரும்பிப் போய் விட்டான் துரியோதனன்.

இப்படி ஒவ்வொருவராக வந்து போய்க் கொண்டிருந்தார்கள். மாணவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. பார்க்க வந்த பெரியோர்களுககும் துரோணர் சோதிக்க விரும்புவது என்ன என்று தெரியவில்லை. கடைசியாக அர்ஜுனன் வந்தான். வில்லை எடுத்து உயரே தூக்கி, அம்பை வைத்துக் குறிபார்த்தான்.

''ஒரு நிமிடம் பொறு! நீ அம்பை எய்யத் தயாராக இருக்கிறாயா?'' என்று கேட்டார் துரோணர். ''தயார் சுவாமி!'' என்று பார்வையை மாற்றிக் கொள்ளாமலே சொன்னான் அர்ஜுனன்.

''நான் உன் பார்வைக்குத் தெரிகிறேனா அர்ஜுனா?'' என்று கேட்டார் துரோணர்.

''தெரியவில்லை சுவாமி!'' என்றான் அர்ஜுனன்.

''உன் சகோதரர்களோ, பார்க்க வந்த பெரியோர்களோ தெரிகிறார்களா?''

''யாரும் தெரியவில்லை சுவாமி!''

''மரமோ, அதன் கிளைகளோ, அந்தப் பறவையோ, உன் பார்வையில்படுகிறதா?''என்று கேட்டார் துரோணர்.

''எதுவுமே தென்படவில்லை சுவாமி!'' என்றான் அர்ஜுனன்.

''பின் எதைத்தான் பார்க்கிறாய் அர்ஜுனா?'' என்று கேட்டார் துரோணர்.

''சுவாமி, அந்தப் பறவையின் கழுத்து மட்டும் தான் என் கண்ணிற்படுகிறது. அதுதான் என் இலக்கு. அது ஒன்றைத்தான் நான் குறிபார்க்க வேண்டும். வேறு எதையுமே நான் கவனிக்ககூடாது. சரிதானே! இப்போது அம்பை எய்ய உத்தரவு கொடுக்கிறீர்களா சுவாமி?'' என்று கேட்டான் அர்ஜுனன்.

''ரொம்ப சரி! பறவையை அடித்து வீழ்த்து!'' என்றார் துரோணர். அர்ஜுனன் வில்லின் நாணைக் காது வரை இழுத்து அம்பை எய்தான். மரப்பறவை கழுத்து அறுபட்டு விழுந்தது. எல்லோரும் கைதட்டி ஆரிப்பரித்தார்கள்.

"உங்களை எல்லாம் நான் திரும்பிப் போகச் சொன்னதின் காரணம் இப்போது புரிந்ததா?" என்று மற்ற மாணவர்களைப் பார்த்துக் கேட்டார் துரோணர். தலைகுனிந்தவர்களாக அவர்களும் தமது தவறை ஒப்புக் கொண்டார்கள்.

தியானத்திலும் அதைபோல இலக்கின் மீது கவனத்துடன் இருப்பதுதான் மிகவும் முக்கியம். கவனம் நாலாபுறமும் திரும்ப, பிரார்த்தனையில் ஈடுபடுவதானால் தாம் இறைவனை அணுக முடியாது.



# 55

'சுவர்க்கம்' என்பது என்ன? 'நரகம்' என்பது என்ன? நாம் புண்ணிய காரியங்கள் செய்தால் சுவர்க்கத்துக்குப் போகிறோம்; அங்கே இன்பம் ததும்பிக் கொண்டிருக்கிறது. நாம் பாபகாரியங்களைச் செய்தால் நரகத்துக்குப் போகிறோம். அங்கே துன்பம் நிறைந்திருக்கிறது.

இப்படித்தான் எல்லாரும் சொல்லுவார்கள். ஆனால், சுவர்க்கமும், நரகமும் நம் கையில்தான் இருக்கிறது. நாம் பிறர் நலத்துக்காகச் செய்யும் காரியங்களே நமக்குத் இன்பத்தைத் தருகின்றன. நாம் சுயநலத்தால் செய்யும் காரியங்களே நமக்குத் துன்பத்தைத் தருகின்றன. இவைகளே சுவர்க்கமும், நரகமும் ஆகும்.

சுவர்க்கம் எப்படி இருக்கிறது என்பதையும் நரகம் எப்படி இருக்கிறது என்பதையும் நேரில் பார்க்க சில முனிவர்கள் விரும்பினார்கள். கடவுள் அவர்களை இரண்டு இடத்துக்குப் போய்வர வழி செய்தார். முனிவர்கள் முதலில் நரகத்துக்குப் போனார்கள். நரகம் என்பது அசுத்தம் மிகுந்த, மிகவும் அவலமான ஓர் இடமாகத்தான் இருக்கும் என்று அவர்கள் எண்ணினார்கள். ஆனால், அவர்களுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. நரகத்தில் எல்லா சௌகரியங்களும் இருந்தன. எல்லாம் தாராளமாகக் கிடைத்தன. எல்லா வளங்களும் நிறைந்த, இவ்வளவு சௌகரியமான இடத்தில் போய் ஏன் துன்பப்பட வேண்டும் என்று அவர்களுக்குப் புரியவில்லை. அங்கேயே இருந்து கவனிக்கஎண்ணினார்கள்.

இடைவேளை வந்தது. அது உணவு அருந்தும் நேரம். எல்லாரும் வந்து கூடிவிட்டார்கள். அவர்களுக்கு உணவு கிடைக்காமல் சிரமப்படப் போகிறார்கள் என்று முனிவர்கள் எதிர்பார்த்திருந்தார்கள். ஆனால், அப்படி இல்லை! மேஜையில் ஏராளமான, வகை வகையான, ருசிகரமான உணவுப் பொருட்கள் வைக்கப்பட்டிருந்தன. அவர்களுக்கு ஒரே ஆச்சரியம்! 'இந்த நரகத்துக்கு என்ன குறைச்சல்?' என்று வியந்தபடி அங்கே வந்து அமர்ந்தவர்களைக் கவனித்தார்கள். அவர்கள் எல்லோருமே எலும்பும், தோலுமாக இருந்தார்கள். பசியினால் வாடிக் கோபம் மிகுந்தவர்களாகக் காணப்பட்டார்கள். ஒருவரோடு ஒருவர் சண்டை போட்டுக் கொண்டு, திட்டியபடி அமர்ந்திருந்தார்கள். வெறுப்பும் பொறாமையும் அவர்களுடைய முகத்தில் நிறைந்திருந்தது.

முனிவர்களுக்கு இதன் காரணம் புரியவில்லை. கிடைத்ததை அனுபவிக்கக் கொடுத்து வைக்காத பாபிகளாக இருக்கிறார்களே என்று எண்ணிக் கொண்டார்கள். கடவுள் அப்போது அங்கே வந்தார். ''இறைவா! இவர்களுக்கு வேண்டியதெல்லாம் கிடைக்கிறது. ஏராளமான உணவும்

பொருட்களும் இருக்கின்றன. இருந்தாலும் இவர்கள் அவதிப்படுகிறார்கள், சாப்பாடில்லாமல் பசியால் அவதிப்படுகிறார்கள். ஏன்?'' என்று முனிவர்கள் கேட்டார்கள்.

''அவர்களுடைய கைகளைக் கவனியுங்கள்!'' என்றார் கடவுள். முனிவர்கள் உற்றுப் பார்த்தார்கள். அவர்களுடைய புஜங்களையும், கைகளையும் இணைக்கும் மூட்டையே காணோம். அதனால் அவர்கள் கையை நீட்டி மடக்க முடியாமலே இருந்தது. எதிரே இருந்த உணவைக்கூட அவர்களால் கையை நீட்டி, எடுத்துச் சாப்பிட முடியவில்லை. எந்தப் பொருளையும் எடுத்து அனுபவிக்க முடியவில்லை.

''எல்லாவற்றையும் கொடுத்து அவற்றின் பலனை அனுபவிக்க முடியாமல் செய்து விட்டானே கடவுள்? இதைவிட எதுவும் கிடைக்காமலே இருந்தாலும் பரவாயில்லை. இது கொடிய நரகவேதனைதான்!'' என்று எண்ணிக்கொண்டே சுவர்க்கத்துக்கு புறப்பட்டுப் போனார்கள் அந்த முனிவர்கள்.

சுவர்க்கம் பார்ப்பதற்கு நரகத்தைப் போலவேதான் இருந்தது. அங்கேயும் எல்லா வளங்களும் பெருகி இருந்தன. நினைத்த மாத்திரத்தில் எல்லாமே கிடைத்தது. அவர்கள் எல்லாருமே அதை அனுபவிப்பது போலவும் தோன்றிற்று. 'சுவர்க்கத்துக்கும் நரகத்துக்கும் அப்படி என்ன பிரமாத வித்தியாசம்? ஒன்றும் புரியவில்லையே?' என்று எண்ணிக் கொண்டார்கள் அந்த முனிவர்கள்.

இடைவேளை வந்தது. எல்லாரும் சாப்பிட வந்து அமர்ந்தார்கள். இங்கேயும் மேஜை மீது ஏராளமான உணவு வகைகள் நிறைந்திருந்தன. அவற்றின் மணம் அந்த இடத்தை நிறைத்தது. முனிவர்கள் அங்கே வந்து அமர்ந்தவர்களைப் பார்த்தார்கள். எல்லாரும் நன்கு உணவருந்தி சௌக்கியமாக இருப்பவர்களாகத் தோன்றினர். முனிவர்கள் அவர்களுடைய கைகளைக் கூர்ந்து கவனித்தார்கள். அவர்களுக்கும் புஜத்தையும் கையையும் இணைக்கும் மூட்டு இல்லை! அவர்களாலும் நீட்டிய கையை மடக்க முடியாதுதான்!

கடவுள் அங்கே வந்தார். ''சுவாமி! சுவர்க்கத்தில் இருப்பவர்களையும் இப்படிச் செய்து விட்டீர்களே? இவர்களுக்கும் அதே பரிதாப நிலைதானா? இது நியாயமா?'' என்று கேட்டார்கள் முனிவர்கள். கடவுள் சிரித்துக் கொண்டே ''கொஞ்சம் பொறுத்திருந்து பாருங்கள்! உங்களுக்கு எல்லாம் புரியும்!'' என்றார்.

எல்லாருமே எழுந்திருந்தார்கள். உணவு வகைகளை எடுத்து மற்றவர்கள் வாயில் ஊட்டினார்கள். மற்றவர்கள் அருந்துவதற்கு எடுத்துக் கொடுத்தார்கள். தமக்கென்று எடுத்துக் கொள்ளவே இல்லை! கையை மடக்கி யாருமே தன் வாயில் எதையுமே போட்டுக் கொள்ளவில்லை! ஆனால் ஒருவருக்கொருவர் இப்படிக் கொடுத்துக் கொண்டபோது எல்லாருக்குமே எல்லாம் கிடைத்தது. எல்லாருமே அங்கே குவிந்து கிடந்த பொருட்களை அநுபவிக்க முடிந்தது!

கடவுள் சிரித்துக் கொண்டே ''இப்போது புரிகிறதா? அங்கேயும் இங்கேயும் ஒரே நிலைதான். ஆனால் அங்கே உள்ளவர்கள் தங்களுக்காகவே எல்லாவற்றையும் தேடுகிறார்கள். அவை கிடைக்காததால் வருந்துகிறார்கள். துன்பத்துக்கு ஆளாகிறார்கள். இங்கே இருப்பவர்களோ, பிறருக்குக் கொடுக்கவே எல்லாவற்றையும் தேடி எடுக்கிறார்கள். அதனால் எல்லாருக்கும் எல்லாமே கிடைக்கின்றன. மனக்குறைவின்றி எல்லாருமே சௌக்கியமாக இருக்கிறார்கள். புரிந்து கொள்ளுங்கள்! 'சுவர்க்கமும்—நரகமும்' நம் கையில்தான் இருக்கின்றன. பிறருக்காக நாம் வாழும் போது நமக்கு சுவர்க்கம் போன்ற இன்பநிலை கிடைக்கிறது. நமக்காக நாம் வாழ முயலும்போது நமக்கு 'நரகம்' போன்ற துன்பநிலை கிடைக்கிறது. சுயநலமில்லாத, பூர்ணமான அன்பே, சுவர்க்கத்தின் திறவுகோல்'' என்று சொன்னார்.

''சுவாமி! எல்லாம் புரிந்தது'' என்று முனிவர்கள் கடவுளை வணங்கி விட்டுச் சென்றார்கள்.

● ●

# 56

வெகு நாட்களுக்கு முன் ஆந்திரப் பிரதேசத்தில் ராயனபாஸ்கரர் என்ற பெயரில் வெகு புத்திசாலியான ஒரு அமைச்சர் இருந்தார். சிக்கலான பிரச்சினைகளுக்கு அவரிடம் தான் அரசர் ஆலோசனை கேட்பது வழக்கம். பாஸ்கரர் சிறந்த கொடையாளி. தனக்கு எது கிடைத்தாலும் அதைப் பிறருக்குத் தானமாகக் கொடுத்து விடுவார். அவருக்குக் 'இல்லை' என்றே சொல்லத் தெரியாது! அதனால் அவருடைய கொடை வன்மையின் புகழும் பெருகிற்று. தனக்கென்று எதையும் சேமித்துவைத்துக் கொள்ளாததால், சொத்தும் குறைந்து போயிற்று!

பாஸ்கரர் ஒரு நாள் இறந்து போய் விட்டார். அவருடைய பேரனும் மருமகளும் மட்டுமே கடைசி நாட்களில் அவருடன் இருந்து அவருக்குப் பணிவிடை செய்து வந்தார்கள். பழைய வீடு ஒன்றில் குடி இருந்து கொண்டு சொற்ப நிலத்திலிருந்து வந்த வருமானத்தை வைத்துக் கொண்டு அவர்கள் வாழத் தொடங்கினார்கள். பாஸ்கரரின் மருமகள் சாவித்திரிக்குத் தன் மகன் கிருஷ்ணனை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும் என்ற ஆசை. அதனால் அவனைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பினாள். அங்கே அவன் கண்ணுங் கருத்துமாக நன்கு படித்து வந்தான்.

அந்தப் பள்ளிகூடக் ஆசிரியருக்கு பாஸ்கரரிடம் மிகுந்த மதிப்பு உண்டு. அதனால் கிருஷ்ணனை மிகுந்த அக்கறையுடன் கவனித்துப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டு வந்தார். அந்தப் பள்ளிக்கூடத்துக்கு ஒரு கவிஞர் வந்தார். அவர் ராயன பாஸ்கரரிடம் கவி பாடிப் பரிசுகள் பெற்றவர். அதனால் அங்கு வந்த போது அவரால் ஆசிரி

யரிடம் பாஸ்கரரைப் பற்றி விசாரிக்காமல் இருக்க முடிய வில்லை. ஆசிரியர் அவரிடம் ''ஐயா! பாஸ்கரர் மறைந்து போய் விட்டார். அவருடைய பேரன்மட்டுமே இப்போது இங்கே படித்துக் கொண்டிருக்கிறான்'' என்று சொல்லி, கிருஷ்ணனை அவருக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

கவிஞர் உணர்ச்சி மிகுந்த குரலில் அந்தப் பையனைப் பாராட்டித் தழுவிக் கொண்டார். பாஸ்கரரின் நினைவாக ஒரு கவிதை எழுதிக் கொடுத்தார். கிருஷ்ணனுக்கு மிகுந்த பெருமை ஏற்பட்டது. தாத்தாவின் சார்பில் அவருக்கு ஏதாவது கொடுக்க வேண்டும் என்று நினைத்தான். தன் காதில் போட்டுக் கொண்டிருந்த தங்கத் தோடுகளில் ஒன்றைக் கழற்றி அவரிடம்கொடுத்து காலில் விழுந்து வணங்கினான்.

வகுப்பில் எல்லாருக்கும் ஒரே ஆச்சரியம்! ஆசிரியரும் மாணவர்களும் கிருஷ்ணனைச் சூழ்ந்து கொண்டு பாராட்டினார்கள். அந்த ஏழைக் கவிஞரைத் தன் வீட்டுக்குச் சாப்பிட அழைத்துச் சென்றார் ஆசிரியர். அந்த ஆசிரியரின் மனத்தின் உள்ளே ஒரு கவலை உறுத்திக் கொண்டே இருந்தது. கிருஷ்ணனுடைய குடும்பத்தின் நிலை அவருக்குத் தெரியும். அவனுடைய தாய் அந்தச் சிறுவன் 'இதைப் போல அவசரப்பட்டு செய்து விட்டதை எண்ணி வருந்த மாட்டாளா? அவரிடமே வந்து கேட்க மாட்டாளா? என்ன செய்வது? கிருஷ்ணனிடமும் தனது கவலையைத் தெரிவித்தார். பிறகு அவனிடம், ''உன் தாய் ஒரு வேளை கோபித்துக்கொண்டால் என்னிடம் வந்து சொல்லு! கவிஞரிடமிருந்து அந்த ஒற்றைத் தோட்டைக் கழற்றி வாங்கிக் கொடுத்து விடுகிறேன்!'' என்று சொல்லி அனுப்பினார்.

இப்போது கிருஷ்ணனுக்கும் கவலை வந்து விட்டது. எங்கே தன்னுடைய தாய் தன்னைக் கோபித்துக் கொள்வாளோ என்று பயந்து கொண்டு, மெதுவாக வீட்டுக்குத் திரும்பிப் போனான். தாயின் கண்ணிற்படாமலே இருந்

தான். இரவு நேரம் ஆகி விட்டது. சாப்பிடும் போதும் வெளிச்சம் குறைவாக உள்ள இடத்திலேயே அமர்ந்து சாப்பிட்டான். முகம் நிமிர்ந்து தாயைப் பார்க்கவே இல்லை!

சாவித்திரிக்கு இது ஆச்சரியமாக இருந்தது. கிருஷ்ணன் அதைப் போல இருந்தது. அவள் பார்த்ததே இல்லை. அதனால் அவன் சாப்பிடும் போது, அருகில் வந்து அமர்ந்து, ''உனக்கு உடம்பு சரியில்லையா? ஏன் என்னவோ போல இருக்கிறாய்? உன் முகத்தை ஏன் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டாள். பையனின் முகத்தை நிமிர்த்தினாள். ஒரு காதில் தோடு இல்லாதது அவளுடைய கண்களில் பட்டது. ''உன் வலது காதில் இருந்த தோடு எங்கே?'' என்று கேட்டாள்.

கிருஷ்ணன் அழுதுகொண்டே நடந்ததைச் சொன்னான். ''அம்மா! தாத்தாவைப் பற்றி அவர் புகழ்ந்து பாடியதும், என்னால் என்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள முடியவில்லை அவருக்கு ஏதாவது கொடுத்தே ஆகவேண்டும் என்று தோன்றிற்று. அதனால் வலது காதில் இருந்த தோட்டைக் கழற்றிக் கொடுத்து விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்!'' என்று தாயின் காலில் விழுந்தான் கிருஷ்ணன்.

சாவித்திரிக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று. முகம் சிவந்து போய்விட்டது. ''மன்னிப்பதா? அந்தக் கவிஞர் எங்கே இருக்கிறார்? உடனே புறப்படு! நாம் அவரைப் போய்ப் பார்த்தாக வேண்டும்!'' என்று சொன்னாள். கிருஷ்ணன் மெய் நடுங்க, தாயைத் தனது ஆசிரியரிடம் அழைத்துக்கொண்டு போனான். அங்கே, ஆசிரியர் இல்லத்தில், கவிஞரும் ஆசிரியரும் உணவருந்திவிட்டு, வாசலில் அமர்ந்து இளைப்பாறிக் கொண்டிருந்தார்கள்.

கிருஷ்ணன் தாயுடன் வருவதைக் கண்டார் ஆசிரியர், தான் பயந்தபடி நடந்து விட்டது என்று எண்ணிக் கொண்டார். கவிஞரை எப்படியாவது சமாதானப் படுத்தி தோட்டை வாங்கித் திருப்பிக் கொடுத்துவிட வேண்டியது தான் என்று எண்ணிக் கொண்டார். மகனுடன் வந்த சாவித்திரியை உள்ளே அழைத்துக் கொண்டு போய் நடந்ததை அவளிடம் சொன்னார். கவிஞரையும் அங்கே அழைத்து வந்து அறிமுகம் செய்து வைத்தார்.

அந்தக் கவிஞரின் காலில் விழுந்து வணங்கினாள் சாவித்திரி. ''ஐயா! என் மகன் தவறு செய்து விட்டான். தாங்கள் மன்னிக்க வேண்டும். நாராயண பாஸ்கரரின்பேரனாக இருந்தும் அவனிடம் அந்தக் கொடை வன்மை பூரணமாக இல்லை. ஒரே ஒரு தங்கத் தோட்டை வைத்துக் கொண்டு தாங்கள் என்ன செய்வீர்கள்? இந்த இன்னொரு தோட்டையும் தாங்கள் ஏற்றுக் கொண்டு எங்களை ஆசீர்வதிக்க வேண்டும்!'' என்று கூறி, மகனின் மற்றொரு தோட்டையும் கழற்றிக் கவிஞரிடம் கொடுத்தாள் சாவித்திரி. கவிஞரும் ஆசிரியரும் மெய் சிலிர்த்துப் போனார்கள்!

கடுகு சிறுத்தாலும் காரம் போகாது. நல்ல பண்புள்ள மனிதர்கள் தாழ்மை நிலையை அடைந்தாலும், அவர்களுடைய பண்புகள் தாழ்வதில்லை!

● ❁

## 57

ஆந்திரப் பிரதேசத்தில் மிகச் சிறந்த கவியாக விளங்கியவர் போதனு. அவருடைய பாடல்கள் பக்தி மிகுந்தும், எளிய சொற்கள் நிறைந்தும் இருக்கும். அவருடைய தமையனார் சித்தனு அதே போலப் புலமை மிகுந்த கவிஞர். ஆனால் அவருக்கு எளிய கவிதைகள் பிடிக்காது. சம்பிரதாய முறைப்படி, இலக்கணப்படி, கடினமான சொற்களை வைத்துத்தான் எழுதுவார்.

'கஜேந்திர மோட்சம்' என்ற தலைப்பில் போதனு ஒரு கவிதை நாடகம் எழுதி இருந்தார். அதில் கஜேந்திரன் என்ற யானை முதலையின் வாயில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடுவதையும், பகவான் அங்கு ஓடோடி வந்து முதலையைக் கொன்று, பக்தனான அந்த யானையைக் காப்பாற்றுவதையும் மிக அழகாக எழுதி இருந்தார். கஜேந்திரனின் வேதனையை வருணிக்கும் போது, ''பகவான் மகாவிஷ்ணு, தேவி மகாலட்சுமியுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருக்கிறார். திடீரென்று அவருடைய கைவிரல்கள் ஆடாமல் நின்று விடுகின்றன. எதையோ காது கொடுத்துக் கேட்கிறார். 'சுவாமி! ஏன் ஆட்டத்தை நிறுத்தி விட்டீர்கள்? என்ன நடந்தது?' என்று கேட்கிறாள் மகாலட்சுமி. பகவான் பதில் சொல்லாமல் எழுந்து ஓடுகிறார். கிரீடம் அணியவில்லை. உத்தரீயம் நழுவி ஓடுவதைக் கவனிக்கவில்லை. கச்சையில் தங்க நிறப்பட்டை நழுவியதையும் பொருட்படுத்தவில்லை. கருடவாகனம் கூட இன்றி, பரபரப்புடன் பூமியை நோக்கி விரைந்து ஓடுகிறார். கஜேந்திரனின் அபயக்குரல் மட்டும் தான் அவருடைய காதில் விழுந்தது. தேவி கூப்பிடுவதைக் கூட அவர் கவனிக்கவில்லை...'' என்று எழுதியிருந்தார் போதனு.

தமையனுருக்கு இதைப் படித்ததும் மிகுந்த கோபம் வந்து விட்டது. ''பகவானை இதைப்போல நீ எப்படி வருணிக்கலாம்? அவர் லோகநாயகன் அல்லவா? சாதாரண அரசன் கூட அப்படி வெளிவருவதில்லையே? சங்கு சக்கர கதாபாணியாக, சர்வாலங்காரங்களுடன், ஸ்ரீதேவி பூதேவி சமேதராக, கருட வாகனத்தில் வந்து பிரசன்னமாக வேண்டியவரை நீ இப்படி வருணிக்கலாமா? இது மிகுந்த அபச்சாரம் அல்லவா?'' என்று சொல்லி, ''இதைச் சரி செய்யாமல் நீ இந்த நாடகத்தை அரங்கேற்றம் செய்யக் கூடாது!'' என்று தடையும் விதித்து விட்டார்.

போதனு தனது தமையனுரின் தடையை மீறமுடிய வில்லை. அவருடையவிருப்பப்படி நாடகத்தின் வருணனையை மாற்றி அமைக்கவும் அவரால் இயலவில்லை. மிகுந்த யோசனையில் ஆழ்ந்தார். அப்போது அவருக்கு ஒருயோசனை தோன்றிற்று.

போதனுவின் மகன் வேதகிரி நான்கு வயதுச் சிறுவன். மிகுந்த ஆவலோடு துள்ளி ஓடி விளையாடுவான்! அவனுடைய குறும்புகளுக்கு எல்லையே இல்லை. போதனுவின்வீட்டு வாசலில் ஒரு கிணறு இருந்தது. வேதகிரி அடிக்கடி அங்கே போய் விளையாடுவான். சித்தனு அந்தச் சிறுவனிடம் மிகுந்த பிரியம் கொண்டிருந்தார். அதனுல் அவன் எங்கே விளையாடப் போனுலும் அவன் மீது ஒரு கண் வைத்திருப்பார்.

அன்று போதனு வீட்டின் முற்றத்தில் அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். சித்தனு கீழே மணலில் உட்கார்ந்து எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தார். உடம்பு முழுவதும் எண்ணெய்க் கசடு கறுப்பாகத் திட்டு திட்டாகத் தடவப்பட்டு, அவரைப் பார்க்கவே வேடிக்கையாக இருந்தது.

திடீரென்று வாசலிலிருந்து வேதகிரி கூச்சல் போடும் சத்தம் கேட்டது. போதனு எழுந்து வாசலுக்கு ஓடினுர். அங்கிருந்தே ''அண்ணு! ஓடி வாருங்கள்! வேதகிரி கிணற்றில் விழுந்து விட்டான்!'' என்று குரல் கொடுத்தார். சித்தனு அப்படியே எழுந்து வாசலை நோக்கி ஓடினுர்.

போதனு கிணற்றங்கரையில் நின்று கொண்டிருந்தார். சித்தனு கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு உள்ளே குனிந்து பார்த்தார். உள்ளே எதுவும் தெரியவில்லை. உள்ளே குதிக்க முயன்ருர். போதனு அதைத் தடுத்து நிறுத்தினுர்.

''என்னடா! குழந்தை எங்கே?'' என்று பதறினுர் சித்தனு!

''அண்ணு! உங்களை ஒரு முறை குனிந்து பார்த்துக் கொள்ளுங்கள். கோவணம் அணிந்து, உடம்பெல்லாம் எண்ணெயும் கறுப்புத் திட்டுமாக, இப்படி வாசலுக்கு ஓடி வரலாமா?'' என்று கேட்டார் போதனு. ஆனுல் அது அவர் காதில் விழுந்ததாகவே தெரியவில்லை. ''குழந்தையின் கதி என்ன? அதை முதலில் சொல்லு!'' என்று தம் தம்பியின் கையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினுர் சித்தனு.

''அண்ணு! வேதகிரி உள்ளே சாப்பிட்டுக் கொண்டிருக்கிறுன். அவனுக்கு ஓர் ஆபத்தும் இல்லை. உள்ளே வாருங்கள்!'' என்று அழைத்துக் கொண்டு போனுர் போதனு. அவரும் பேசாமல் உள்ளே வந்து மணையில் அமர்ந்தார்.

''அண்ணு! வேதகிரி உங்கள் குழந்தையைப் போல! அவனுக்கு ஒரு ஆபத்து என்றதும் உங்களால் தாங்க முடியவில்லை. இந்த நிலையில் அப்படியே எழுந்து வாசலுக்கு ஓடினீர்கள். மகாகவி சித்தனு, தலைப்பாகையும், உத்தரீயமும், அலங்காரமும், குங்குமப் பொட்டும் இன்றி வெளியே வரலாமா? அதுவும் கோவணம் அணிந்து எண்ணெய் பூசிய

வராக வந்திருக்கலாமா? ஆனால் உங்கள் அன்பின் வேகத்தில் அதை நீங்கள் பொருட்படுத்தவில்லை. மகாவிஷ்ணு எல்லாருக்கும் தந்தை. அனாதை ரட்சகனாக விளங்குபவர். அவருடைய குழந்தை கஜேந்திரன் மரண ஆபத்தில் அலறுகிறான். அந்த அபயக்குரல் காதில் விழுந்ததும், அவனைக் காப்பாற்ற அவர் அப்படியே ஓடினார். அந்த இயற்கையான நிலையைத்தான் நான் வருணித்தேன்! உங்களுடைய அன்பின் வேகத்துக்குப் பகவானின் கருணை வேகம் குறைந்ததென்று சொல்ல முடியுமா?'' என்று கேட்டார் போதனா.

சித்தனா வெட்கித் தலையைக் குனிந்து கொண்டார். ''தம்பி! உன் நாடகத்தை நீ அப்படியே அரங்கேற்றலாம். நான்தான் அதை நுட்பமாக ரசிக்கத் தவறி விட்டேன்!'' என்று சொல்லி மன்னிப்பு கேட்டுக் கொண்டார்.

ஆண்டவனின் கருணை, எல்லையில்லாதது. அதை எட்டுவதற்கு நமக்கு உள்ளமார்ந்த ஒரு நிமிடப் பிரார்த்தனை போதும். அவர் எங்கிருந்தாலும் நம்மைக் காப்பாற்ற ஓடி வந்து விடுவார்....

● ●

# 58

ஒரு கிராமத்தில் குடிசை ஒன்றில் வாழ்ந்து வந்தாள் ராமாயி. அவளுடைய கணவன் இறந்துபோய்விட்டான். ஒரே மகனான கண்ணன் செல்லமாக வளர்ந்து வந்தான். அவனுக்கு ஐந்துவயது நிறைந்ததும் தாய் அவனைப் பள்ளி

கூடத்துக்கு அனுப்ப எண்ணினாள். ஆனால், பள்ளிக்கூடம் அந்தக் கிராமத்திலிருந்து இரண்டு மைல்கள் தூரத்தில் இருந்தது. இடையில் அடர்த்தியான மரங்கள் கொண்ட காடும் இருந்தது.

மகன் அந்தக் காட்டைக் கடந்து போய் படிக்க வேண்டுமே என்ற கவலை ராமாயிக்கு இருந்தது. ஆனால், மகன் பள்ளிக்கூடத்தில் படித்து முன்னுக்கு வரவேண்டும் என்ற ஆசையும் இருந்தது. குழந்தையை முதல்நாள் தானே பள்ளிக்கூடத்துக்கு அழைத்துக்கொண்டு போனாள். போகும் வழியான ஒற்றையடிப் பாதையையும் காட்டினாள்.

மறுநாள் அவள் தன்னுடைய வேலைக்குப்போக வேண்டியதாயிற்று. அவளால் குழந்தையுடன் போக முடிய வில்லை. கண்ணன் தனியே போவதற்குப் பயந்து அழுதான். ராமாயி அவனுக்குத் தைரியம் சொல்லித் தேற்றி, "உன்னுடைய அண்ணன் கோபால் உனக்குத் துணையாக இருப்பான். பயப்படாதே! உனக்குப் பயமாக இருந்தால் அவனைப் பெயர்சொல்லிக் கூப்பிட்டுக்கொண்டே போ. உனக்கு ஓர் ஆபத்தும் வராது!" என்று சொல்லி அனுப்பினாள். "எனக்கு அண்ணனா? அம்மா! நீ இதுவரை அப்படி எனக்கு ஒரு சகோதரன் இருப்பதாகச் சொல்லவே இல்லையே? அவன் அங்கே என்ன வேலை செய்கிறான்?" என்று கேட்டான், கண்ணன்.

"குழந்தாய்! அங்கே அவன் பசுமாடுகளை மேய்த்துக் கொண்டிருப்பான். நீ அழைத்ததும் அவன் பதில் குரல் கொடுப்பான். அவன் வரவில்லையே என்று நீ பயப்படாதே அவனுடைய பெயரைச் சொல்லிக்கொண்டே நீ போகலாம். உனக்கு அவனுடைய துணை கிடைக்கும்!" என்று சொல்லி ராமாயி அவனைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி வைத்தாள்.

கண்ணன் பள்ளிக்கூடத்துக்குப் போனான். பாதிவழியில் அவனுக்குப் பயமாக இருந்தது. "கோபாலா! நீதான் எனக்குத் துணை செய்து காப்பாற்றவேண்டும்; உடனே வா!" என்று கூப்பிட்டான் கண்ணன். யாரும் வரவில்லை. மூன்று தடவை அழைத்துவிட்டு "என் தாய் சொன்னது பொய்யாகிவிடக்கூடாது! நான் உன்னையே நம்பி வந்திருக்கிறேன். நீதான் எனக்கு உதவவேண்டும் கோபாலா!" என்று மனம் உருகி அழைத்தான் கண்ணன்.

அப்போது அங்கே பசுமாடுகள் வரும் ஒலிகேட்டது. இனிமையான குழலிசை கேட்டது. மஞ்சள் நிற வேட்டி அணிந்து அழகான ஒரு சிறுவன் புன்சிரிப்புடன் அங்கே வந்தான். "பயப்படாதே கண்ணா! நான் இங்கேதான் இருக்கிறேன். நீ எப்போது அழைத்தாலும் வருவேன். எதற்காக அழுகிறாய்? என்கூட வா! காடுகள் முடியும் வரை நான் உனக்குத் துணை வருகிறேன்" என்று கோபாலன் அவனை அழைத்துக்கொண்டு போனான்.

தினமும் அதைப்போலக் கோபாலன் அவனுக்குத் துணை வருவான். இதைக் கண்ணன் தாயிடம் சொல்லுவான். குழந்தை தான் சொன்னதை அப்படியே நம்பிவிட்டதையும் கோபாலன் மெய்யாகவே கூடவருவதாக ஒரு பிரமையில் இருப்பதையும் எண்ணி தனக்குள் சிரித்துக் கொள்வாள் ராமாயி. ஆயினும், அப்படி ஒரு தைரியம் கண்ணனுக்கு ஏற்பட்டது அவளுக்கு ஆறுதலாகவே இருந்தது.

ஓர் ஆண்டுப்படிப்பு முடியும் நாள் வந்தது. ஆசிரியருக்கு ஒவ்வொரு மாணவனும் ஏதாவது பரிசு கொடுத்தாக வேண்டும். அதைக் குருதட்சிணை என்று சொல்லிச் சமர்ப்பிப்பார்கள். ஆசிரியர் ஆசி கூறி அனுப்புவார். கண்ணனுடைய வகுப்பில் படித்தவர்கள் எல்லாருமே வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அதனால் அவர்கள் ஒவ்வொருவரும் விலையுயர்ந்த பொருள் ஒன்றைத் தட்சிணையாகக் கொடுக்கத் திட்டம் போட்டிருந்தார்கள்.

கண்ணனும் தன் தாயிடம் போய் ஆசிரியருக்குக் குரு தட்சிணையாக ஏதாவது கொடுக்க வேண்டும் என்று கேட்டான். ஆனால், அவளால் என்ன கொடுக்க முடியும்! தன் இயலாமையைக் குழந்தைக்குச் சொன்னால் புரியாது என்று ஆகட்டும் பார்க்கலாம்!'' என்று சொல்லி அனுப்பிவிட்டாள். குழந்தை மிகுந்த ஆவலோடு இருந்தான். குரு தட்சிணை கொடுக்கப்படவேண்டிய நாளும் வந்தது. ஆனால் ராமாயி அவனுக்கு ஏதும் கொடுக்கவில்லை. கண்ணன் அழுது பிடிவாதம் செய்தபோது அவனை அடித்து அனுப்பி விட்டாள்.

கண்ணன் அழுதுகொண்டே பள்ளிக்கூடத்துக்குப் போனான். வழக்கம் போலக் கோபாலன் அவனுக்குத்துணை வருவதற்கு வந்து சேர்ந்தான். கண்ணன் அழுவதைக் கண்டு அதன் காரணத்தை விசாரித்தான். அவன் சொன்னதும், ''இதற்காகவா அழுகிறாய்? நீ என்னைக் கேட்டிருக்கலாமே?'' என்று தன்னுடைய உறியிலிருந்து ஒரு சிறு சட்டி நிறையத் தயிரை எடுத்துக் கொடுத்தான் கோபாலன். கண்ணனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. அதை வாங்கிக் கொண்டு பள்ளிக்கூடத்துக்கு ஓடினான் அவன்.

பள்ளிக்கூடத்தில் விலையுயர்ந்த பொருட்கள் பலவும் குருதட்சிணையாக வந்து குவிந்திருந்தன. தன்னுடைய தயிர்ச்சட்டியைக் கொடுக்கத் தயங்கியபடி நின்று கொண்டிருந்தான் கண்ணன். ஆசிரியர் அவனை அருகில் அழைத்து முதுகில் தட்டிக்கொடுத்து, ''ஏன் வெட்கப்படுகிறாய்? உன்னிடம் இருப்பதை நீ அளிக்கலாம். பக்தியுடன் நீ எதைக் கொடுத்தாலும் நான் ஏற்றுக் கொள்கிறேன்!'' என்றார்.

கண்ணன் வெட்கத்துடன் தயிர்ச் சட்டியை எடுத்துக் கொடுத்தான். அதை ஆசிரியர் வாங்கிக் கொண்டார். அதில் ஒரு சிறிது எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். அது தேவாமிர்தம் போல இருந்தது. உடனே அதை எல்லா குழந்தைகளுக்கும் கொடுக்கத் தொடங்கினார்.

கொடுக்கக் கொடுக்க அந்த சட்டி நிறைந்துக் கொண்டே இருந்தது. ஆசிரியர் பிரமித்துப் போனார். "கண்ணா! இதை உனக்குக் கொடுத்தது யார்?" என்று வியப்புடன் கேட்டார். கண்ணன் நடந்ததைச் சொன்னான். ஆசிரியருக்கு அந்த கோபாலன் யார் என்று புரிந்து விட்டது.

"கண்ணா, என்னுடன் வா. எனக்கு உன் சகோதரனைக் காட்டு!" என்று காட்டுக்கு அழைத்துக்கொண்டுபோனார். அங்கே போய்க் கானகத்தின் நடுவில் நின்று கண்ணன் பல முறை கூவி அழைத்தான், ஆனால், கோபாலன் வரவே இல்லை. கடைசி முறையாகக் கண்ணன் "கோபாலா! நீ இப்போது வராவிட்டால் என்னுடையஆசிரியர் என்னைப் பொய்யன் என்று சொல்லி விடுவார். நான் உன்னை நம்பியல்லவா இருக்கிறேன்? வரமாட்டாயா?" என்று கூறி அழுதது ம், குழலிசை கேட்டது. "கண்ணா! என்னையே நம்பி, முழு மனத்துடன் நிராதரவாக என்னிடம் வரும் கள்ளமற்ற ஆத்மாக்களுக்குத்தான் நான்புலப்படுவேன். அதனால்தான் மற்றவர்கள் என்னைப்பார்க்க முடியாது. உனக்கு நான் என்றும் கண்ணிற்படுவேன். துணை இருப்பேன்!" என்று அசரீரியான அந்தக் குரல்கேட்டது.

ஆசிரியருக்கு உண்மை புரிந்தது. வீட்டில் இருந்த ராமாயிக்கும் உண்மை புரிந்தது! நமக்கும் அது புரிய வேண்டும்.

## 59

உலகத்தில் உள்ள எல்லா உயிர்களையும் காப்பவன் நாராயணன். அவன் கோகுலத்தில் வந்து பிறந்தபோது, ராதை அவனுக்குத் தொண்டு செய்த பக்தை. அரங்கனின் அருள் அவளுக்கு அளவில்லாமல் இருந்தது. இதுவே மற்ற பக்தர்களுக்கு அவள் மீது பொறாமை ஏற்படவும் செய்தது. இப்படிப் பொறாமைப் பட்டவர்களில் நாரதரும் ஒருவர்.

இதை நாராயணன் புரிந்து கொண்டார். ஒரு நாள் அவர் துதி பாடிக் கொண்டிருந்த சமயம், தனது தலையை கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். ''ஐயனே! தங்களுக்கு என்ன நேர்ந்தது? ஏன் இப்படி சிரமப்படுகிறீர்கள்?'' என்று துடித்துப் போய்க் கேட்டார் நாரதர்.

''பக்தா! உன்னுடைய தவிப்பு எனக்குப் புரிகிறது. என்றால் இந்தத் தலைவலியைத் தாங்க முடியவில்லை. இதற்கு ஒரே ஒரு மருந்துதான் உண்டு. அது எனக்கு கிடைக்காமல் திண்டாடுகிறேன்!'' என்றார் பரந்தாமன்.

''அப்படியா? நான் மூன்று உலகங்களையும் பார்த்து வருகிறேன்? என்னிடம் சொல்லக் கூடாதா? தங்களுக்குத் தேவையான மருந்து எங்கே இருந்தாலும் சொல்லுங்கள். உடனே கொண்டு வந்து கொடுக்கிறேன்!'' என்றார் நாரதர்.

''இது மிகவும்எளிய மருந்து. என்னிடம் உண்மையான பக்தி கொண்ட ஒருவர் தனது கால்களைக் கழுவி, அந்தப் பாதத்தில் பட்ட நீரை எனக்குத் கொடுக்க வேண்டும். அதில் ஒருவாய் நான் அருந்தினால் போதும். என்னுடைய நோய் தீர்ந்து விடும். நாரதா! என்னிடம் நீ அளவில்லாத பக்தி கொண்டவன். நீ எனக்கு அந்த உதவியைச் செய்ய முடியுமா?'' என்று கேட்டார் பகவான்.

''அபச்சாரம்! அபச்சாரம்! என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. என்னிடம் மறுபடியும் இந்த வார்த்தையைச் சொல்லாதீர்கள்!'' என்று தனது காதுகளை இறுக மூடிக் கொண்டார் நாரதர்.

''அப்படியா? நீர் இந்த வைகுந்தத்திலும், பிற லோகங்களிலும் செல்லும் போது, எனக்கு இப்படி உதவக்கூடியவர்கள் யாரேனும் இருந்தால், அவர்களிடமிருந்து பெற்று வாருங்களேன். எனக்கு மருந்து அவசரமாகத் தேவை!'' என்று தலையைப் பிடித்துக் கொண்டார்.

''உடனே புறப்படுகிறேன்!'' என்று கிளம்பிப் போனார் நாரதர்.

வைகுந்தத்திலேயே மகாலட்சுமியை அணுகினார். தேவியிடம் பகவானின் விருப்பத்தைத் தெரிவித்தார். தேவிக்கு அசாத்தியக் கோபம் வந்துவிட்டது. ''முனிவரே! என்ன வார்த்தை சொல்லுகிறீர்? என்னுடைய பாத துளியில் பட்ட நீரை நாராயணன் அருந்துவதா? நான் அப்புறம் பதிவிரதை என்றுசொல்லிக் கொள்ள முடியுமா?'' என்று கோபித்து அவரை வெளியே அனுப்பி விட்டார் ஸ்ரீதேவி. அதே போல் பூதேவியும் இதற்கு ஒப்புக் கொள்ளவில்லை.

நாரதர் தேவர்களையெல்லாம் அணுகினார். பிறகு பூமியில் உள்ள, அவருக்குத் தெரிந்த நாராயணனின் பக்தர்களையும் கேட்டுப் பார்த்தார். ''எங்கள் பாதத்தில், பட்ட நீரை பகவான் அருந்தினால், எங்களுக்குப் பெரும் பாவம் வந்து சேரும். அதை எங்களால் ஏற்க முடியாது, மன்னித்துக் கொள்ளுங்கள்!' என்று எல்லோருமே ஒரு முகமாகச் சொல்லி அனுப்பி விட்டார்கள்.

நாரதருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அப்போது ராதையின் ஞாபகம் வந்தது. அவளிடம் போய்க் கேட்போம். அவளும் மறுத்து விட்டால் அதையும்

நாராயணனிடம் சொல்லலாம். அவள்தான் சிறந்த பக்தை என்று பெருமை அடித்துக் கொண்டதெல்லாம் வெறுங் கதையாகி விடும். அவள் ஒப்புக் கொண்டாலோ பெரும் பாவத்துக்கு ஆளாவாள். அதற்குப் பிறகு பரந்தாமனிடம் எவ்வளவு பக்தி செலுத்தினாலும், அவளால் அந்தப் பாவச் சுமையிலிருந்து மீள முடியாது!' என்று எண்ணிக்கொண்டே ராதையிடம் சென்றார்.

எதிர்பாராத விதமாக நாரதர் தன்னிடம் வந்து நின்றதைக் கண்டு பிரமித்துப் போனாள் ராதை. தரையில் விழுந்து அந்த மகாமுனிவரை வணங்கி உபசரித்தாள். அவர் அங்கு வந்த காரணத்தை விசாரித்தாள்.

''நாராயணன் தலைவலியால் அவதிப்படுகிறார். அதற்கு எங்கு தேடியும் மருந்து கிடைக்கவில்லை!'' என்றார் நாரதர். அதைக் கேட்டதும் ராதை பதறிப் போனாள். 'அப்படியா? அதற்கு என்ன மருந்து? எங்கே அது கிடைக்கும்? சொல்லுங்கள்! நான் உடனே போய் எடுத்துக் கொண்டு வருகிறேன்!'' என்று கூறி அவருடைய கால்களைப் பிடித்துக் கொண்டாள்.

'ராதே! நான் என்ன சொன்னாலும் செய்வாயா? அப்புறம் மறுக்கக் கூடாது!' என்று எச்சரித்தார் நாரதர்.

''பகவானுக்கு உபாதை என்றால், அது நீங்குவதற்கு நான் என் உயிரையும் கொடுப்பேன். நான் செய்ய வேண்டியது என்ன? உடனே சொல்லுங்கள்!'' என்று பதறினாள் ராதை.

''உன்னுடைய பாதங்களைக் கழுவி அந்த நீரை என்னிடம் கொடுக்க வேண்டும். அதில் ஒரு வாய் அருந்தினால் பரந்தாமனின் தலைவலி தீர்ந்து விடும். ஆனால், நன்றாக யோசித்துச் செய்! இதனால், நீ பெரும் பாவத்துக்கு ஆளாவாய்!'' என்று மீண்டும் எச்சரிக்கை செய்தார் நாரதர்.

''சுவாமி! என்ன சொல்லுகிறீர்? பகவான் வலியால் துடித்துக் கொண்டிருக்கும்போது, நான் என்னுடைய பாவத்தைப் பற்றி எண்ணிக் கொண்டிருப்பதா? இதோ எனது பாதங்களைக் கழுவித் தருகிறேன். எடுத்துச் செல்லுங்கள். நான் நரகத்துக்குப் போனாலும் பரவாயில்லை!' என்றாள் ராதை.

ராதை கழுவிக் கொடுத்த நீரைப் பாத்திரத்தில் எடுத்துக் கொண்டு, வைகுந்தத்துக்குத் திரும்பி வந்தார் நாரதர். அவருடைய வருகையை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த நாராயணன் அந்த பாத்திரத்தை, வாங்கி அந்த நீரை அருந்தினார்.

தலைவலி நீங்கியவராகப் புன்னகை செய்தார் பரந்தாமன் தன்னுடைய மனத்தைப் புரிந்துக் கொண்டு ஆடிய நாடகமே இது என்பதை நாரதர் உணர்ந்து கொண்டார். ''ஐயனே ராதையைக் காட்டிலும் சிறந்த பக்தை வேறு யாரும் இல்லை. நான் தவறாக எண்ணியதற்கு என்னை மன்னிக்க வேண்டும்!'' என்று கூறிக் கீழே விழுந்து நாராயணனை வணங்கினார்.

தனக்குத் தீங்கு ஏற்பட்டாலும், பிறருக்கு நன்மை செய்பவனே ஆண்டவனுக்குப் பிரியமானவனாகிறான்.

● ●

# 60

மகாபாரத யுத்தம் முடிந்து, பாண்டவர்களின் மூத்தவரான தர்மராஜா அரியாசனம் ஏறிவிட்டார். யுத்தத்தில் லட்சக் கணக்கான மக்கள் உயிரிழந்தனர். பல மனைவியர் மாங்கல்ய பாக்கியத்தைப் பறிகொடுத்தனர். பல குழந்தைகள் அனாதைகளாயினர்.

இதையெல்லாம் எண்ணி தர்மராஜா மிகவும் மனம் வருந்தினார். தனக்கு மன அமைதி கிடைக்க, எல்லாருக்கும் பொருளை வாரிவாரி வழங்கி வாழ்த்துக்களைப் பெறத் திட்டமிட்டார். ஹோமங்களைச் செய்து மக்களுக்கு நலன் தேடவும், யாகங்களின் மூலம் தேவதைகளின் ஆசிகளைப் பெறவும் ஏற்பாடு செய்தார்.

இவையெல்லாம் தொடர்ந்து பல நாட்கள் நடைபெற்றன. ஏழை மக்களுக்குப் பொருட்கள் கிடைத்தன. ஹோமங்களும், யாகங்களும் நடைபெற்றன. மழை பொழிந்து நிலம் வளம் அடைந்தது. ஆறுகள் நீர் நிறைந்து பெருகின. மக்கள் தர்மராஜாவின் சிறப்பு மிகுந்த அரசாட்சியை மனமார வாழ்த்தினார்கள். தர்மராஜா இதனால் பெருமை அடைந்தார். ஓரளவு கர்வமும் உண்டாயிற்று.

ஒரு நாள் அவர் அதைப் போலத் தனது அரண்மனையில் ஏழைகளுக்கு தானம் செய்து கொண்டிருந்தபோது, அங்கே திடீரென்று ஒரு கீரிப்பிள்ளை வந்து நின்றது. காவலாட்கள் அதைத்துரத்தப் போனார்கள். தர்மர் அவர்களைத் தடுத்து நிறுத்தி அந்தக் கீரிப்பிள்ளையைக் கவனித்தார். அதன் உடலின் ஒரு பகுதியில் மட்டுமே தங்கநிறம் பளபளவென்று மின்னிற்று. மறுபாதி கறுப்பாகவே இருந்தது.

அந்தக் கீரிப்பிள்ளை அந்தத் தரையில் விழுந்து புரண்டது. அப்போதும் அதன் உடல் கறுப்பு நிறமாகவே இருந்தது. ''மிகப் பெரிய தர்மத்தை மகாராஜா தியாக உள்ளத்துடன் செய்வதாகக் கேள்விப்பட்டு இங்கே வந்தேன். அப்படி ஒன்றும் நடக்கவில்லையே? சக்துப்ரஸ்தனின் தியாகத்தை விட இது ஒன்றும் பெரிதல்ல!'' என்று அது சொல்லிக் கொண்டது.

இதைக் கேட்ட எல்லாரும் திடுக்கிட்டுப் போனார்கள். காவலாளிகள் அந்தக் கீரிப்பிள்ளையை அழித்துக் கொல்லவும் முனைந்தார்கள். ஆனால் தர்மராஜா அவர்களைத் தடுத்து விட்டு, கைகூப்பி அந்தக் கீரிப்பிள்ளையை வணங்கினார்.

''தாங்கள் யாரோ ஒரு மகான்! அபூர்வசக்தி படைத்தவர். அதனால்தான் இந்த உருவத்தில் வந்து பேசுகிறீர்கள். தாங்கள் குறிப்பிடும் சக்துப்ரஸ்தன் யார்? அவர் செய்த தியாகம் என்ன? அடியேனுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும்!'' என்று கேட்டுக் கொண்டார்!

கீரிப்பிள்ளை சொல்ல ஆரம்பித்தது:

வெகு நாட்களுக்கு முன்பு குருக்ஷேத்திரத்தில் சக்துப்ரஸ்தன் என்ற ஓர் அந்தணன் வசித்து வந்தான். அவனுக்கு ஒரு மனைவியும், மகனும், மருமகளும் இருந்தார்கள். அவர்கள் ஏழைகள். ஆனால், அவர்களுடைய உள்ளம் பரந்த மனப்பான்மை கொண்டதாக இருந்தது. அவர்கள் செல்வத்துக்காக ஆசைப்படவில்லை. தங்களிடம் கிடைத்ததையும், பிறருக்குத் தானம் செய்வதில் முனைந்திருந்தார்கள்.

அப்போது ஊரில் கடும்பஞ்சம் ஏற்பட்டது. சில நாட்களுக்குத்தான் அவர்களுக்குச் சாப்பிட உணவு கிடைக்கும். மற்ற நாட்களில் பட்டினி கிடப்பார்கள். அப்படியும் அவர்களுடைய கருணை உள்ளம் வற்றிப் போகவில்லை. தங்களுடைய சக்திக்கு இயன்ற அளவு தானம் செய்து வந்தார்கள்.

தொடர்ந்து மூன்று நாட்கள் பட்டினியுடன் இருந்த பிறகு, ஒருநாள் சக்துப்ரஸ்தன் எங்கிருந்தோ கொஞ்சம் தினைமாவு கொண்டுவந்தார். அதை நான்கு பாகமாகப் பகிர்ந்துகொண்டு, அவர்கள் உணவுஅருந்தத் தயாரானார்கள். அப்போது எங்கிருந்தோ ஓர் ஏழை அந்தணன் வந்து சேர்ந்தான். பசியால் அவன் முகம் வாடி இருந்தது. சக்துப்ரஸ்தன் நிலைமையைப் புரிந்து கொண்டார். அவனை வரவேற்றுக் காலைக் கழுவி அமரச் செய்து, தன்னுடைய பங்கான தினைமாவை அவனுக்குக் கொடுத்துவிட்டார்.

அவனும் அதை ஆவலோடு வாங்கிச் சாப்பிட்டுவிட்டான். ஆனால், அவனுடைய பசி தீரவில்லை! அதை உணர்ந்து கொண்ட சக்துப்ரஸ்தன் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தான். அப்போது அவருடைய மனைவி தன்னுடைய பங்கை அந்த ஏழையின் முன் வைத்து அவரைச் சாப்பிடும்படி வேண்டிக் கொண்டாள்.

'குடும்பத் தலைவனை நான் பிறருக்கு உணவு அளிக்க வேண்டியது என் கடமை என்று கருதலாம். ஆனால், என் மனைவி என்னால் பசி பொறுக்க வேண்டியநிலை ஏற்பட்டதே? என்று அவர் மிக வருந்தினார். மனைவி கொடுத்த பங்கும் முடிந்தது. ஆனால், ஏழையின் பசி தீரவில்லை. சக்துப்ரஸ்தனின் மகனும் தன் பங்கைக் கொடுக்க முன்வந்தான். முதலில் அவர் தன்னுடைய இளம்வயது மகன் பசியால் வாட வேண்டி இருப்பதை எண்ணி வேதனைப்பட்டார். ஆயினும் விருந்தாளிக்கு உதவவேண்டிய கடமையை எண்ணிஅதைப் பொறுத்துக் கொண்டார்.

மகனின் பங்கும் முடிந்தது. ஆனால், ஏழையின் பசிதீரவில்லை! அப்போது சக்துப்ரஸ்தனின் மருமகள் தனது பங்கைக் கொடுக்க முன் வந்தாள். அவருக்கு மனந்தாளவில்லை. ''அம்மா! நாங்கள் உன்னைக் காப்பாற்றக் கடமைபட்டவர்கள். அதற்காகவே உன்னை வேறுகுடும்பத்திலிருந்து அழைத்து வந்து எங்கள் மகளைப் போல வளர்க்கிறோம்.

எங்களால் நீ பசி மிகுந்து வாடலாமா? அது அதர்மம்'' என்று மனம் குமுறிச் சொன்னார். ஆனால், அந்தப் பெண் அதை ஏற்றுக் கொள்ளவில்லை.

''ஐயா! நான் என்று உங்கள் மகனை மணந்தேனோ அன்றே உங்கள் குடும்பத்தில் ஒருத்தியாகிவிட்டேன். உங்களுடைய சுகதுக்கங்கள் என்னையும் சேர்ந்தவை. நான் மனதார என் பங்கைக் கொடுக்கிறேன். அதை இந்த விருந்தாளிக்குக் கொடுங்கள்'' என்று கொடுத்துவிட்டாள். விருந்தினராக வந்த ஏழை அதை வாங்கிச் சாப்பிட்டார். அவருடைய பசியும் தீர்ந்தது!

மறுகணமே அந்த ஏழை மறைந்து விட்டார். அங்கே எமதர்மராஜன் பிரசன்னமானான். ''சக்துப்ரஸ்தா உன்னைச் சோதிக்கவே இப்படி வந்தேன். பொருள் படைத்தவன் தர்மம் செய்வதில் அதிசயம் இல்லை. ஆனால், பட்டினி கிடப்பவன் தனது கையில் உள்ள உணவைத் தானமாகக் கொடுப்பது மிகப் பெரிய தியாகமாகும். உங்கள் எல்லாரையும் நான் பாராட்டி ஆசிர்வதிக்கிறேன். சுவர்க்க போகம் உங்களுக்காகக் காத்திருக்கும்!'' என்று கூறிவிட்டு மறைந்தான் எமதர்மராஜன்.

அந்த இடத்துக்கு நான் போயிருந்தேன். கீழே சிந்திய தினைமாவை நானும் ருசி பார்த்தேன். அதில் கீழேவிழுந்து புரண்டேன். என் உடலின் ஒரு பாதிபொன்மயமாயிற்று! அதற்குப் பிறகு நானும் பல யாகங்களுக்கு போய் வருகிறேன். என் உடலின் மறுபாதி பொன்மயமாக வில்லை. இங்கேயும் முயன்று பார்த்தேன். என் உடல் மாறவில்லையே?'' என்றது கீரிப்பிள்ளை.

''சுவாமி! சக்துப்ரஸ்தனின் தியாகத்துக்குமுன், என்னுடைய தானதர்மங்கள் ஒரு பொருட்டே அல்ல! இது பற்றி நான் கொண்டிருந்த கர்வமும் இப்போது மறைந்

தது'' என்று கைகுவித்து வணங்கிச் சொன்னார் தர்மர். அதைக் கேட்டதும் அந்தக் கீரிப்பிள்ளை கீழே விழுந்து புரண்டது. மறுகணமே அதன் உடலின் மறுபாதியும் பொன்மயமாயிற்று!

● ●

# 61

கருணைக்கும் கொடைத் திறனுக்கும் பெயர் பெற்ற அரசர்கள் பலர் அந்தக் காலத்தில் இருந்தார்கள். அப்படிப் பட்டவர்களில் ஒருவன் சிபி. அவன் மிருகங்கள், பறவைகளிடம் கூடக் கருணை காட்டுபவன். அவனிடம் கொடை வேண்டிச் சென்றவர்கள் யாரும் வெறுங்கையுடன் திரும்பியதில்லை.

சிபியின் புகழ் தேவலோகத்துக்குக் கூட எட்டி விட்டது. தேவேந்திரன் சிபியைச் சோதனை செய்து பார்க்க எண்ணினான். அக்கினிபகவானை அழைத்துக் கொண்டு பூமிக்கு வந்தான். இந்திரன் ஒரு கழுகு வடிவத்திலும், அக்கினி ஒரு புறு வடிவத்திலும் வந்து சேர்ந்தார்கள். புறுவைக் கழுகு துரத்திக் கொண்டு பறந்து வந்தது.

தனது நந்தவனத்தில் சிபிச் சக்கரவர்த்தி ஏழைகளுக்கு உணவு அளித்துக் கொண்டிருந்தான். அவர்கள் எல்லாரும் திரும்பிய பிறகு அரண்மனைக்குச் செல்லத் திரும்பிய சிபியின் கையில் ஒரு புறு வந்து விழுந்தது. அந்தப் புறுவின் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. கண்கள் பரிதாபமாக அவனைப் பார்த்தன. 'என்னை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்' என்பது போல அவன் மடியில் சுருண்டு விழுந்தது.

"கவலைப்படாதே! நான் உன்னை எப்படியும் காப்பாற்று கிறேன்!" என்று அந்தப் புறவை எடுத்துத் தடவிக் கொடுத் தான் சிபி. அப்போது ஒரு பெரிய கழுகு வந்து அவன் எதிரே உட்கார்ந்து கொண்டது. சிபியின் மடியில் கிடந்த புறவைக் கவ்வி எடுத்துக் கொண்டு போக முயன்றது. சிபி அதைத் தடுத்து ஒதுக்கினான். புறவின் பயத்துக்குக் காரணம் என்ன என்பது சிபிக்கு இப்போது புரிந்தது.

"அரசனே! அந்தப் புறு என்னுடைய பசியைத் தீர்க்க வேண்டிய இரையாகும். என்னை நீ தடுக்காதே! புறுவைக் கீழே விடு;" என்றது கழுகு. மனிதனைப் போல அது பேசி யதைக் கேட்க, சிபிக்குப் பெரும் வியப்பாக இருந்தது.

"நீ யார் என்பது எனக்குத் தெரியவில்லை. மனிதனைப் போலப் பேசும் உன் சக்தியும் என்னை வியப்படையச் செய் கிறது. எதுவானாலும் இந்தப் புறு என்னை நாடி வந்து சரண் அடைந்திருக்கிறது. அதைக் காப்பாற்ற வேண்டியது என்னு டைய கடமை. அதனால் இந்தப் புறுவை நீ பறித்துச் செல்ல நான் அனுமதிக்க முடியாது!" என்றான் சிபி.

"அரசே! நீங்கள் எல்லாருக்கும் நியாயம் சொல்லக் கடமைப்பட்டவர்கள். புறுவுக்காக மட்டும் நீங்கள் பரிந்து பேச முடியாது. புறுவைப் போல என்னையும் நீங்கள் காப் பாற்ற வேண்டும். பசியால் வாடும் என் கதி என்ன? எனக் குக் கிடைத்திருக்க வேண்டிய இரையை நீங்கள் பிடுங்கிக் கொண்டு விட்டீர்களே? நான் பசியால் இறந்து போக வேண்டும் என்பதுதான் நீங்கள் கூறும் தர்ம நியாயமா?" என்று கேட்டது கழுகு.

அதைக் கேட்டதும் சிபி ஒரு கணம் திகைத்துப்போனான். மனிதனைப் போலவே பேசுவதல்லாமல், விவாதம்செய்யவும் அந்தக் கழுகுக்கு வல்லமை இருப்பது அவனுக்குப் பெரும் வியப்பாக இருந்தது. புறுவுக்கு ஆதரவுகொடுத்ததைப்போல

கழுகைக் காப்பாற்ற வேண்டியதும் தன் கடமை என்பதை உணர்ந்தான். கழுகிடம் ''உன் பசி தீருவதற்கு, உனக்கு என்ன வேண்டுமோ கேள், தருகிறேன்! புறாவை விட்டுவிடு'' என்று சொன்னான்.

''அரசே! புறாவுக்குப் பதிலாக எனக்கு மாமிசம் உடனே தேவை. அது மனித மாமிசமாக இருந்தாலும் பரவாயில்லை. உங்களுக்கு உட்பட்ட மிருகம் அல்லது மனிதனை உடனே கொன்று எனக்குக் கொடுங்கள். என்னால் பசி பொறுக்க முடியவில்லை!'' என்றது கழுகு.

''உன் பசியை ஆற்ற ஒப்புக் கொண்டேன். ஆனால் அதற்காகப் பிறரைத் துன்புறுத்த நான் விரும்பவில்லை. உனக்குத் தேவையானது புறாவுக்குப் பதிலாக மாமிசம் தானே? புறாவின் நிறையளவு மாமிசத்தை நான் என் உடலிலிருந்தே வெட்டித் தருகிறேன்.'' என்று கழுகிடம் உறுதி கூறிவிட்டு சிபி திரும்பினான். பணியாளரை அழைத்து ஒரு தராசைக் கொண்டு வரச்செய்தான்.

தராசின் ஒரு தட்டில் சிபி அந்தப் புறாவை வைத்தான். மறு தட்டில் தன் உடலிலிருந்து ஒரு சிறு பகுதியைச்செதுக்கி எடுத்து வைத்தான். புறா அமர்ந்த தட்டு இறங்கவில்லை. தொடர்ந்து சிபி தனது உடலிலிருந்து பகுதி பகுதியாக வெட்டி வைக்கத் தொடங்கினான். எவ்வளவு வெட்டி வைத்தாலும் புறாவின் தட்டுக்குச் சமமாக முடியவில்லை. கடைசியில் சிபி கழுகை பார்த்து புறாவுக்கு கொடுத்தவாக்கைக் காப்பாற்ற என்னையே கொடுப்பது அல்லாமல் வேறு வழி இல்லை. நானே தட்டில் ஏறி அமர்ந்து கொள்ளுகிறேன். என்னை ஏற்றுக் கொள்'' என்று கூறிவிட்டுத் தராசில் ஏறி அமர்ந்தான். உடனே புறா அமர்ந்த தட்டு சமநிலையில் இறங்கிவிட்டது!

மறுகணமே கழுகு இந்திரனாகவும், புறா அக்னி பகவானாகவும் மாறினார்கள். சிபியை அன்புடன் தொட்டு அவன் உடல், சிதைவு எல்லாவற்றையும் ஆற்றி விட்டார்கள். தேவர்களைக் காலில் விழுந்து வணங்கினான் சிபி. ''என்னைக் காணத் தாங்கள் மாறுவேடத்தில் வந்த காரணம் என்னவோ?'' என்று கேட்டான்.

''அரசே! உங்களுடைய புகழைக் கேட்டுச் சோதித்துப் பார்க்கவே வந்தோம். உங்களுடைய கருணையையும் கொடைத் திறனையும் புரிந்து கொண்டோம். நீ எல்லா நலமும் பெற்றுச் சிறப்புடன் நீடு வாழ வேண்டும்!'' என்று வாழ்த்தி மறைந்தார்கள்.

அரசாட்சி செய்பவன் தன்னலமின்றி இருக்கவேண்டும். தியாகம் செய்ய வேண்டும் என்று வரும்போது தன்னையே முதலில் அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும். எளியாரை வலியார் துன்புறுத்த வந்தால் எளியவர்களுக்கு ஆதரவு கொடுக்க வேண்டும். எல்லாருடைய குறைகளையும் சமமாகப் பாவித்து நியாயம் வழங்க வேண்டும். அப்படிப்பட்ட அரசன் ஆளும் நாட்டுக்கு எந்தக் குறைவும் ஏற்படாது. இந்த நியாயத்தை எடுத்துச் சொல்வது தான் சிபிச்சக்கரவர்த்தியின் கதை.

# 62

பல ஆண்டுகளுக்கு முன்ஒரு காட்டில் கொள்ளைக்காரன் ஒருவன் இருந்தான். வேடனாகத் தொழில் செய்து பிழைப்பு நடத்திவந்த அவன், காட்டிற்கு வழி தவறிவரும் பிரயாணி களைப் பிடித்துக் கொன்று அவர்களுடைய பணத்தைப் பறித்துக் கொண்டுவிடுவான்.

ஒரு நாள் அந்த வேடனிடம் ஒரு முனிவர் அகப்பட்டுக் கொண்டார். அவர் கையில் வீணை இருந்தது. மேலே அலங்காரமான நகைகள் போட்டிருந்தார். "முனிவரே! மரியாதையாக எல்லாவற்றையும் கொடுத்துவிடும். இல்லா விட்டால் நான் உம்மைக் கொன்று விடவேண்டி நேரும்!" என்றான் வேடன்.

"அப்பா! நான் உலக சஞ்சாரம் செய்பவன். என்னை நாரதர் என்று சொல்வார்கள். நான் உனக்கு ஒரு கெடுதலும் செய்யவில்லையே? என்னை ஏன் கொல்ல விரும்புகிறாய்? உனக்கு அந்தப் பாவம் வந்து சேராதா?" என்று கேட்டார் நாரத முனிவர்.

"நான் எனது பெற்றோர், மனைவி, குழந்தைகள் எல்லா ருக்கும் சோறுபோட வேண்டும். அதற்குப் பணம் வேண்டும் அதற்காகவே இப்படிக் கொள்ளை அடிக்கிறேன். நீ என்னைத் தடுத்தால் உன்னைக் கொன்று விடுவேன்" என்றான் அந்த வேடன்.

"உனக்கு வேண்டியதை எடுத்துக் கொள். ஆனால் ஒரே ஒரு நிபந்தனை. நீ இப்படிப் பாவம் செய்து சம்பாதிப்பதை, உன் பெற்றோரும், மனைவியும் குழந்தையும் அநுபவிக்

கிறார்கள் அல்லவா? உன்னுடைய பாவத்திலும் அவர்கள் பங்கு பெறத் தயாராக இருக்கிறார்களா என்று கேட்டுக் கொண்டு வா! பிறகு நான் எல்லாவற்றையும் கொடுத்து விடுகிறேன்'' என்றார் நாரதர்.

வேடனுக்கு ஒன்றும் புரியவில்லை. இதைப்பற்றி அவன் அதுவரை சிந்தித்துப் பார்த்ததே இல்லை. ''ஏன்? பாவத்திலும் அவர்களுக்குப் பங்கு உண்டு. பணத்தைப் பங்கு போட்டுக் கொள்கிறார்களா இல்லையா?'' என்று கேட்டான்.

நாரதர் தலையை அசைத்தார். ''நீ சுலபமாகச் சொல்லி விட்டாய்! ஆனால் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. அவர்கள் ஒரு நாளும் உன் பாவத்தில் பங்கு பெறச் சம்மதிக்க மாட்டார்கள். நீ போய்க் கேட்டுக் கொண்டு வா!'' என்றார் புன்னகையுடன்.

''முனிவரே! என்னை ஏமாற்ற நினைக்காதீர்! நான் போய்த் திரும்பி வரும் வரையில் நீர் இங்கேயே இருக்க வேண்டும். தப்பி ஓட நினைத்தால், நான் உம்மைத் துரத்திப் பிடித்துக் கொன்று விடுவேன்!'' என்று கூறிவிட்டு வேடன் தன் குடும்பத்தினரைச் சந்திக்கப் போனான்.

ஆவலோடு காத்திருந்த வேடனின் தந்தை ''இன்று எவ்வளவு கொண்டு வந்திருக்கிறாய்?'' என்று கேட்டார். ''நிறையக் கொண்டுவரப் போகிறேன். அதற்கு முன்னால் எனக்கு ஒரு விஷயம் தெரிந்தாக வேண்டும். உங்களுக்காக நான் கொலைகளைச் செய்தும், கொள்ளை அடித்தும் பணத்தைக் கொண்டு வந்து சேர்க்கிறேன். அதன் பலனை நீங்கள் பங்கு போட்டுக் கொண்டு அநுபவிக்கிறீர்கள். இந்தச் செயலினால் எனக்கு நிறைய பாவம் வந்து சேரும் என்று சொல்லுகிறார்கள். அதனால் நான் கஷ்டப்பட வேண்டி இருக்கும் என்றும் கூறுகிறார்கள். என் செல்வத்தில் பங்கு பெற்று சுகப்படும் நீங்கள், பாவத்திலும் பங்கு பெற்று கஷ்டத்தை அநுபவிக்க ஒப்புக் கொள்கிறீர்களா?'' என்று கேட்டான் வேடன்.

"பாவத்தில் பங்கா? அதை எப்படி நான் ஏற்றுக் கொள்ளமுடியும்?" என்று திருப்பிக் கேட்டார் தந்தை. வேடன் திகைத்துப் போனான். தன்னைப்பெற்ற தாயாவது ஒப்புக்கொள்வாள் என்று எண்ணி அவளிடம் போய்க் கேட்டான். அவளும் தந்தை சொன்னமாதிரியே பதில் கூறி விட்டாள்.

மிகுந்த ஏமாற்றத்துடன் வேடன்மனைவியிடம் போனான். அவளுக்கு அழுகையே வந்து விட்டது. "இப்படியெல்லாம் கேட்டு என்னைச் சோதிக்காதீர்கள். ஏற்கனவே நான் குடும்ப பாரத்தில் உழன்று கொண்டிருக்கிறேன். பாவச் சுமையை வேறு ஏற்றுச் சிரமப் படவேண்டும் என்று சொல்கிறீர்களா?" என்று கேட்டு புலம்ப ஆரம்பித்து விட்டாள்.

"அப்பா! நாங்கள் உங்களைப்பாவம் செய்யத் தூண்டவில்லை. நீங்கள் செய்யும் காரியங்களுக்கு நீங்களே பொறுப்பு!" என்று குழந்தைகளும் கூறிவிட்டார்கள். வேடனுக்கு அறிவு பிறந்தது. வாழ்நாள் முழுவதும் அவன் செய்த கொடிய பாவங்கள் அவன் கண் முன்னால் தோன்றின. 'இவர்களுக்காகத் தானே நான் அப்படிச் செய்ய நேர்ந்தது' என்று வருந்தினான்.

மனம் நொந்துபோய் நாரதரைத் தேடிக்கொண்டு ஓடிவந்தான் வேடன். நாரதர் தனது நகைகளைத் தயாராகக் கழற்றி வைத்துக் கொண்டு காத்திருந்தார். வேடன் அவற்றைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. "முனிவரே! என் ஞானக் கண்ணைத் திறந்துவிட்டீர்கள். மகாபாவங்களில் உழன்றுகொண்டிருந்த என்னைக் கரையேற்றி விட்டீர்கள். நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்!" என்று அவருடைய காலில் விழுந்து அழுதான்.

நாரதர் மனமகிழ்ந்து போனார். "வேடனே! நீ பெரிய மந்திரங்களை உச்சரிக்க இயலாது. மிக எளிய புண்

ணிய மந்திரம் ஒன்றை உனக்குக் கற்றுத் தருகிறேன். ஒரு மரத்தடியில் அமர்ந்து 'ராமராம' என்று சொல்லத் தொடங்கு. உன்னுடைய பாவங்கள் மறைந்துபோகும்!" என்று கூறினர். வேடனுக்கு அதைக்கூடச் சரியாகச் சொல்லவரவில்லை. மரத்தடியில் அமர்ந்ததால் 'மராமரா' என்றே சொல்ல ஆரம்பித்தான். அதுவே சொல்லச் சொல்ல ராமநாமம் ஆயிற்று.

ராமநாமத்தை உச்சரிப்பதில் தன்னை மறந்தான். அவனைச் சுற்றி புற்று (வன்மீகம்) மூடிக்கொண்டது. அவனே பிற்காலத்தில் வால்மீகி என்று அழைக்கப்பட்டான் ஸ்ரீமந்ராமாயண காவியத்தைச் சுலோகங்களின் மூலமாகப் பாடிய மகாகவியானான்.

வாழ்க்கையில் நாம் எவ்வளவோ தவறுகளைச் செய்கிறோம். பாவங்களைச் செய்து சம்பாதிக்கிறோம். அது குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக என்று சொல்லி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளுகிறோம். குடும்பத்தினர் நமது பாவங்களைச் சுமக்க மாட்டார்கள். நாம்தான் நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். அதற்காக நல்ல வழியில் நடக்கும் நெறி முறையைப் பின்பற்றத் தெரிந்து கொள்ள வேண்டும்.



## 63

துரியோதனன் அஸ்தினபுரத்தின் அரசனாக ஆட்சி செய்தபோது, அங்க தேசத்து அரசனாக இருந்து வந்தான் கர்ணன். நாடு முழுவதும் கர்ணனின் கொடைத்திறனைப்

பற்றிப் புகழ்ந்து பேசிற்று. அவனிடம் பரிசுகள் பெற்ற பலர் துரியோதனனிடம் வந்து அதைப்பற்றிப் பாராட்டிச் சொல்லிவிட்டுப் போனார்கள்.

துரியோதனனுக்கு இதனால் சிறிது பொறாமையும்கூட ஏற்பட்டது. 'கர்ணன் ஒரு சிறு தேசத்து அரசன். அவனுடைய கொடைக்கு இவ்வளவு பாராட்டுக்களா? அப்படியானால் சக்கரவர்த்தியான எனக்கு ஏன் அதுபோன்ற பாராட்டுக்கள் கிடைக்கக்கூடாது?' என்று எண்ணிக்கொண்டான்.

மறுநாள் முதல் தினந்தோறும் காலையில் அரண்மனைக்கு ஏழைகளை வரவழைத்து, அவர்களுக்குக் கொடையளிப்பதை ஒரு வழக்கமாக ஏற்படுத்திக்கொண்டான். கொஞ்சம் கொஞ்சமாக மக்கள் துரியோதனனின் கொடைத் திறனைப் பாராட்ட ஆரம்பித்தார்கள். ஆனாலும், 'கர்ணனைப்போல துரியோதனனும் கொடைகள் அளிக்கத் தொடங்கிவிட்டான்;' என்றுதான் சொன்னார்கள். இதைக்கேட்ட துரியோதனனுக்கு மனம் சங்கடமடைந்தது. 'கர்ணனை அவ்வளவு தூரம் பாராட்டும்படியாக அவனுக்கு என்ன சிறப்பு......?' என்று எண்ணிக்கொண்டான்.

அப்போது அவனைச் சோதிக்க இந்திரன் வந்து சேர்ந்தான். ஓர் ஏழை அந்தணனைப் போல வேடம் தரித்து, இந்திரன் துரியோதனனின் அரண்மனையை அடைந்தான். "சக்கரவர்த்தி! எனக்குச் சிறு உதவி தேவைப்படுகிறது. தாங்கள் உதவி அருள வேண்டும்" என்றான்.

"எது வேண்டுமானாலும் கேள்! நான் கட்டாயம் கொடுக்கிறேன். துரியோதனன் தனது கொடைத் திறனில் யாருக்கும் குறைந்தவன் அல்ல!" என்று பதில் சொன்னான் துரியோதனன். அதைக் கேட்டு மனத்துக்குள் சிரித்தபடி இந்திரன் "ஐயா! என்னுடைய தேவை அதிகம் இல்லை நான் ஒரு யாகம் செய்வதாக இருக்கிறேன். அதற்கு ஒரு

வண்டி விறகு தேவைப்படுகிறது. அதைத் தாங்கள் கொடுத்தால் போதும்'' என்று பணிவுடன் கேட்டுக்கொண்டான்.

துரியோதனன் வாய்விட்டுச் சிரித்து, ''ஐயா! உலகம் தெரியாதவராக இருக்கிறீரே? என்னிடம் வந்து இதைத்தானா நீர் கேட்க முடிந்தது? உம்முடைய அதிருஷ்டத்தை என்னவென்று சொல்ல? உமக்கு வேண்டிய விறகை இன்றே எடுத்துச் செல்லும்!'' என்று சொன்னான்.

''அரசே! இப்போது கொண்டு சென்றால் வைத்துக் காப்பாற்ற எனக்கு வீடு இல்லை. ஆகையால் பதினைந்து நாட்கள் கழித்து நான் தங்களிடம் வந்து பெற்றுச் செல்கிறேன்!'' என்று சொல்லிவிட்டு இந்திரன் அங்கிருந்து போய்விட்டான்.

அங்கிருந்து கர்ணனை நாடி அங்க தேசத்துக்குப்போனான், இந்திரன். கர்ணனிடமும் இதையே கேட்டான். கர்ணன் அந்த ஏழை அந்தணனை வணங்கி ''ஐயா! தாங்கள் இதைக் காட்டிலும் சிறப்பானதெதையேனும் கேட்டிருக்கக்கூடாதா? நான் அந்தப் பேற்றைப் பெற்றிருக்கக் கூடாதா... எப்போது வேண்டுமானாலும் தாங்கள் இந்த ஒரு வண்டி விறகை எடுத்துக்கொள்ளலாம்!'' என்றான்.

''பதினைந்து நாட்கள் பொறுத்து வருகிறேன். அப்போது தாங்கள் எனக்கு அதை அளித்தால்போதும் அரசே!'' என்று சொல்லி இந்திரன் மறைந்துவிட்டான்.

இந்திரன் இருவரையும் சோதிக்கத் திட்டமிட்டான். தொடர்ந்து கடும் மழை பெய்ய வேண்டி வருணனைத் தூண்டிவிட்டான். பதினைந்து நாட்கள் தொடர்ந்து மழை பெய்தது. எல்லா இடங்களிலும் நீர் வெள்ளமாக ஓடிற்று. காய்ந்த விறகு ஒரு சுள்ளிகூட இல்லை. அந்த நிலையில் துரியோதனனிடம் வந்து சேர்ந்தான் இந்திரன்.

''மன்னிக்க வேண்டும் அந்தணரே! இப்போது என்னால் நீர் கேட்டதைக் கொடுக்க இயலாது. போய்விட்டு ஒரு வாரம் கழித்து வாரும். வெயில் அடித்து மரம் காய்ந்தால் நீங்கள் கேட்ட ஒரு வண்டி விறகைக் கொடுக்கிறேன்'' என்றான்.

''அரசே! உங்களுக்காக யாகத்தைத் தள்ளிப்போட முடியுமா? அதற்கேற்ற நல்ல நாள் மீண்டும் வருமா? கொடுத்த வாக்கை எப்படியாவது நீங்கள் காப்பாற்ற வேண்டும்!'' என்று பதில் கூறினான் இந்திரன். துரியோதன னுக்கு கோபம் வந்து ''இந்தப் பைத்தியக்காரனை அரண் மனையிலிருந்து வெளியேற்றுங்கள்!' என்று உத்தரவிட்டு விட்டான்.

வெளியேதள்ளப்பட்ட இந்திரன் கர்ணனிடம் போனான் அந்த ஏழை அந்தணனை வரவேற்று உபசரித்தான் கர்ணன். ''அரசே! எனக்குத் தேவையான ஒரு வண்டி விறகைக் கேட்கவந்திருக்கிறேன். எப்படிக் கொடுக்கப்போகிறீர்கள்?'' என்று கேட்டான் இந்திரன்.

''கவலை வேண்டாம்? இந்த மழையில் காய்ந்த விறகு கிடைக்காது. அதனால் நான் யாரையும் கேட்டு, அவர்களை வேதனையில் ஆழ்த்த விருப்பவில்லை. என்னுடன் வாருங் கள்!'' என்று அழைத்துச் சென்றான். அரசன் படுத்து உறங் கும் கட்டிலைஉடைக்க உத்தரவிட்டான்.

உடைத்த மரங்களை வண்டியில் ஏற்றி ''ஐயா! இதை எங்கே கொண்டு வந்துதர வேண்டும்?'' என்று கேட்டான் கர்ணன்.'' நான் கொண்டு செல்வேன். அந்தக் கவலை தங்க ளுக்கு வேண்டாம்'' என்று அந்த வண்டியை கொண்டு அழைத்துக் துரியோதனனிடம் வந்தான் இந்திரன்.

வண்டி நிறைய காய்ந்த மரத்துண்டுகளைப் பார்த்தான் துரியோதனன். ''எப்படி உமக்குக் கிடைத்தது?'' என்று வியப்புடன் கேட்டான். நடந்ததைச் சொன்னான் இந்திரன்.

வெட்கித் தலைகுனிந்து "ஐயா! என்னை மன்னியுங்கள் கர்ணனைவிட எனக்குச் செல்வம் அதிகமாக இருக்கலாம் என்னைவிடக் கர்ணனுக்குத் தான் விரிந்த உள்ளம் இருக்கிறது! அதை அறியாமல் நான் அவன் மீது பொறாமைப் பட்டு விட்டேன்" என்று ஒப்புக் கொண்டான் துரியோதனன்.

"இதை உனக்கு உணர்த்தவே இந்த சோதனையில் ஈடுபட்டேன்" என்று தன் உருவத்தைக் காட்டி மறைந்து போனான் இந்திரன்.

செல்வம் எவ்வளவு இருப்பினும், அதை மகிழ்ச்சியுடன் கொடுக்க முன் வருபவன் தான் உண்மையில் செல்வந்தன். மற்றவர்களிடம் செல்வம் இருந்தாலும் அதன் சிறப்பை உலகம் பாராட்டாது.



# 64

ஒரு குடும்பத்தில் 'யார் பெரியவன்' என்ற போட்டி அடிக்கடி ஏற்படுவதைப் பார்க்கிறோம். அதைப்போல ஒரு போட்டி மனிதனின் உடம்பிலேயே ஏற்பட்டால் எப்படி இருக்கும்?

மனிதனைப் படைத்த கடவுளிடம் அவனுடைய ஐம் பொறிகள் சண்டை போட்டுக் கொண்டு போய் நின்றன. 'யார் பெரியவன்?' என்பதில் அவர்களிடையே போட்டி

"நான்தான் பேசுகிறேன். அதனால் தான் மனிதன் தனக்கு வேண்டியதைக் கேட்டு உயிர் வாழ முடிகிறது. பேச்சு இல்லாவிட்டால் எல்லாம் போச்சு. அதனால் நான் தான் பெரியவன்!" என்றது பேசும் சக்தி.

கண்பார்வை இருந்தால்தான் உலகத்தைப் பார்க்க முடியும். பார்த்த பிறகுதானே எது தேவையோ, அதைக் கேட்க முடியும்? அதனால் பேச்சை விட முக்கியமானது பார்வைதான். அதனால் நான் தான் பெரியவன்!" என்றது பார்க்கும் சக்தி.

"கண்ணால் பார்ப்பதும் மெய்யல்ல. தான் பேசித் தெரிந்து கொள்வதும் மெய்யல்ல. பிறர் தன்னைப்பற்றிச் சொல்வதைக் கேட்டு, அதற்கேற்ப விவேகமாக வாழ்பவனே சிறந்த மனிதன். அதனால் கேள்வி ஞானமே ஒரு மனிதனை உருவாக்குகிறது" என்றது கேட்கும் சக்தி.

"ஏன் எல்லோரும் அலட்டிக் கொள்கிறீர்கள்? மனத்தில் சிந்தனை இல்லாமல் பார்த்தோ, பேசியோ, கேட்டோ என்ன பயன்? வந்து சேரும் விஷயம் எதுவானாலும் அதைச் சிந்தனையால் பக்குவப்படுத்திக் கொடுப்பது மனம்தான். அதனால் நானே பெரியவன்?" என்றது சிந்திக்கும் சக்தி.

மூச்சுவிடும் சக்தி எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு பேசாமலே இருந்தது. கடவுள் அதைப் பார்த்து "நீ ஒன்றும் சொல்லவில்லையே?" என்று கேட்டார். அது பெருமூச்சு விட்டு விட்டுப் பேசாமல் இருந்துவிட்டது.

"சரி! நான் சொல்லும் தீர்ப்பு இதுதான். உடம்பிலிருந்து எந்த சக்தி நீங்குவதால் மனிதனுக்கு அதிக அளவு தொந்தரவு ஏற்படுகிறதோ, அதுவே மனிதனுக்கு மிகவும் முக்கியமானது என்று வைத்துக் கொள்வோம். இப்போது முறையிட்ட வரிசைப்படி நீங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதம் மனித உடலிலிருந்து பிரிந்து இருங்கள்.

நடப்பதைப் பார்ப்போம்!" என்றார் கடவுள். அதைக் கேட்டுக் கொண்டு எல்லாச் சக்திகளும் திரும்பி வந்தன.

பேசும் சக்தி முதலில் நீங்கியது. ஒரு மாதம் அவனால் பேச முடியவில்லை. அதனால் மனிதன் சிரமப்பட்டானே ஒழிய, உயிர் வாழ்வதில் சிக்கல் இல்லை. கையால் ஜாடை காட்டி வேண்டியதை வாங்கிச் சாப்பிட்டுப் பிழைத்துக்கொண்டான். ஊமையாக இருப்பவர்கள் வாழும் அளவுக்குத்தான் மனக்குறை இருந்தது.

பேசும்திறன் உடலுக்குத் திரும்பி வந்தது. பார்க்கும் சக்தி போய்விட்டது. மனிதனால் எதையும் பார்க்க முடியவில்லை. வேண்டியதைக் கவனித்துக் கேட்க முடியவில்லை. ஆனால் தட்டுத் தடுமாறி, தொட்டுப் பார்த்து, வேண்டியவற்றைப் புரிந்து கொண்டான். 'பாவம் குருடன்!' என்று பச்சாத்தாபப்பட்டு எல்லோரும் உதவி செய்தார்கள். ஒரு மாதம் எப்படியோ ஓடிவிட்டது.

பார்க்கும் சக்தி உடலுக்குத் திரும்பிற்று. கேட்கும் திறன் விலகிப்போயிற்று. மற்றவர்கள் சொல்வது அவனுக்குப் புரியவில்லை. அதனால் பாதுகாப்பாக இருந்தான். அவசியம் ஏற்பட்டாலொழிப் பிறரிடம் பேசவில்லை. பிறர் சொல்வது புரியாவிட்டால் கேட்கவில்லை. பக்குவமாக ஒரு மாத காலம் ஒதுங்கியே வாழ்ந்து, காலத்தைத் தள்ளி விட்டான்.

அடுத்து வந்தது மனம். மனிதன் சிந்திக்கும் சக்தியை இழந்தான். சித்தப்பிரமை பிடித்தவனைப்போல உட்கார்ந்து கொண்டிருந்தான். 'அவனுக்குச் சித்த சுவாதீனம் இல்லை. அவன் அருகில் போனால் ஆபத்து!' என்று எல்லோருமே ஒதுங்கிவிட்டார்கள். பரிதாபப்பட்டு வேளாவேளைக்குச்சாப்பாடு போட்டு விட்டார்கள். மனிதன் பிழைத்துக் கொண்டான்.

கடைசிப் பங்கு மூச்சுவிடும் சக்திக்கு வந்தது. அது ஒன்றும் சொல்லாமலே உடம்பிலிருந்து விலகத் தொடங்கிற்று. அவ்வளவுதான்! கண்பார்வை மங்கிற்று. காதின் சக்தி அடங்கிற்று. பேச முடியவில்லை. சிந்தனை குழம்பிக் கலங்கிற்று. மனிதன் கீழேபடுத்து விட்டான். மார்பைப் பிடித்துக் கொண்டு தவிதவித்துப் போனான். உடல் மரக்கட்டையாக அசைவின்றி ஆகிவிடும் போல இருந்தது.

நான்கு பொறிகளும் ஓடிவந்தன. "தயவு செய்து உடம்பை விட்டுப்போய் விடாதே! நீ இல்லாவிட்டால் உடலுக்குப் பொருள் இல்லை. எந்த காரியமும் இயங்கப் போவதில்லை. நாங்கள் செய்வது வெளியே தெரிகிறது. உன் பெருமை வெளியே தெரிவதில்லை. ஆனால் நீ இல்லாவிட்டால் ஒன்றுமே இல்லை!" என்று நான்கும் ஒரே குரலில் சொல்லி விட்டன.

'யார் பெரியவன்?' என்ற சந்தேகம் அப்புறம் எழவில்லை. கடவுள் வந்து தீர்ப்பு சொல்ல வேண்டிய அவசியமும் ஏற்படவில்லை.

முக்கியமானவர்கள் எப்போதும் பணியிலேயே கருத்தாக இருப்பார்கள், அவர்கள் தாங்கள் செய்வதை விளம்பரப்படுத்திக் கொள்வதில்லை. அடக்கத்துடன் செய்யும் பணிதான் எப்போதும் அவசியமான பணியாக அமைந்துவிடும்.

● ●

# 67

ஓர் ஊரில் செல்வந்தரான வியாபாரி ஒருவர் இருந்தார். பணக்காரராக இருந்தாலும், அவர் தயாளகுணம் நிறைந்தவர். ஏழை எளியவர்களுக்கு நிறைய தான தருமங்கள் செய்துவந்தார். அவருக்கு வயதாகி விட்டது. ஆனாலும் வியாபாரத்தை நிறுத்தவில்லை. அதைத் தனது வயது வந்த மகனிடம் ஒப்படைக்கவும் இல்லை.

அந்த ஊரில் ஓர் ஆலயம் கட்டத் தொடங்கினார்கள். வியாபாரி அதற்குரிய பொருட்களை வாங்கப் பணம் கொடுத்தார். கூடவே இருந்து எல்லா உதவிகளையும் செய்தார். அதே சமயம் வியாபாரத்தையும் கவனித்துக் கொண்டிருந்தார். ஆலயப்பணி முடிந்தது. திறப்பு விழா நடைபெறும் நாளும் வந்தது.

கும்பாபிஷேகம் செய்விக்க சந்நியாசி ஒருவர் வந்து சேர்ந்தார். கும்பாபிஷேகம் நன்றாக நடந்தது. பக்தகோடிகள் திரளாக வந்து தரிசனம் செய்தார்கள். அன்று மாலை சிறப்பாகப் பூஜைகளும் பெரியவரின் உபந்நியாசமும் நடந்தது. எல்லாம் முடிந்த பிறகு அந்த சந்நியாசியைத் தனது இல்லத்துக்கு அழைத்துக் கொண்டு போனார் செல்வந்தரான அந்தப் பிரபு.

பலகாரம் முடிந்தது. படுக்கப் போன சந்நியாசியை உடன் இருந்து பிரபு கவனித்தார். எல்லோரும் உறங்கிவிட்டார்கள். அந்தப் பிரபு தூங்கப் போகவில்லை. அவரை அருகே அமரச் சொன்னார் சந்நியாசி. "உன்னிடம் ஒன்று கேட்கலாமா?" என்று கேட்டார்.

"எது வேண்டுமோ கேளுங்கள். நான் எதையும் செய்யத் தயாராக இருக்கிறேன்" என்றார் அந்தப் பிரபு.

"எதையும் செய்வாயா? வாக்குக் கொடுத்த பிறகு தயங்கக் கூடாது" என்று எச்சரித்தார் சந்நியாசி.

"இல்லை சுவாமி! தாங்கள் என்னுடைய நன்மைக்கு உரியதைத்தானே சொல்லுவீர்கள். தாராளமாக உத்தர விடுங்கள்!" என்றான் பிரபு.

"நாளை நான் புறப்படும்போது என்னுடன் கிளம்பி வந்துவிடு. உன் செல்வம், குடும்பம், யாவற்றையும் உதறி விட்டு, என்னுடன் சந்நியாசியாகப் புறப்பட்டு வந்துவிடு!" என்றார் சந்நியாசி. அந்தப் பிரபு அதைக் கேட்டுத் திகைத்துப் போனார். பதில் பேச முடியாமல் அப்படியே நின்றார்.

"என்ன திகைத்துப் போய் விட்டாய்? உனக்கு விருப்பம் இல்லையா? இப்போதுதானே நான் சொல்லுவது எதுவானாலும் செய்வதாக வாக்குக்கொடுத்தாய்? இப்போது என்ன தயக்கம்?" என்று கேட்டார் சந்நியாசி.

"சுவாமி! எனக்கு மனம் இன்னும் பக்குவம் அடைய வில்லையோ என்று சந்தேகமாக இருக்கிறது. அதே சமயம் நான் நடத்தும் வியாபாரத்தைப் பொறுப்பாக ஏற்று நடத்தும் அளவுக்கு என் மகன் இன்னும் பக்குவம் அடைய வில்லை. என்னுடைய மனைவியோ ஒன்றும் அறியாதவள். அவளைத் தனியே விட்டு விட்டுப் போய் விட்டால், அவள் கதி என்ன ஆதமோ என்று தயக்கமாக இருக்கிறது" என்றார் அந்தப் பிரபு.

"அப்படியா நான் ஒரு கதை சொல்லுகிறேன் கேள்!" என்று கூறத் தொடங்கினார் சந்நியாசி.

"குரங்கு ஒன்று சபையில் ஓரமாக உட்கார்ந்து ஓர் உபந்நியாசத்தைக் கேட்டது. அதற்குத் தனது மனம் பக்குவம் அடைந்துவிட்டதைப் போலத் தோன்றிற்று. தோட்டத்துக்குப் போய் ஒரு பாறையின் மீது அமர்ந்து கொண்டு

ஒருநாள் முழுவதும் கண் மூடியபடி ராமஜபம் செய்ய வேண்டும். என்று தீர்மானித்தது. அப்படியே உடனே ஜபம் செய்யவும் தொடங்கிற்று.

சிறிது நேரத்தில் ஒரு சந்தேகம் வந்தது, 'ஒருவேளை நான் இப்படி பட்டினி கிடந்தால், நான் எனக்கு வேண்டிய இரையைத் தேட வெளியே போய் மரத்துக்கு மரம் தாவ முடியாமல் போய்விடுமோ? அப்படியே கிடந்து, பட்டினியில் என் உயிர் போய்விடுமோ?''என்ற ஐயம் ஏற்பட்டது. அதனால் தொடர்ந்து ஜபம் செய்ய முடியவில்லை. வெளியே ஓடிப்போய், மரங்களிலிருந்து பழங்களைப் பறித்துக் கொண்டு வந்தது, ஒரு மூலையில் அவற்றை வைத்து விட்டு ஜபம் செய்ய ஆரம்பித்தது.

மீண்டும் அதன் மனத்தில் ஒரு சந்தேகம் ஏற்பட்டது. "ஒருவேளை நான் பட்டினியால் நாளைக்கு மிகவும் பலவீனமடைந்து, இந்தப் பழங்களை நடந்து போய் எடுத்துச் சாப்பிடக் கூட முடியாமற் போய்விடுமோ? இவற்றைப் பார்த்தபடியே ஏங்கிக் கொண்டு உயிரைவிட்டு விடுவேனோ?' என்று எண்ணிற்று. அதற்கு அழுகை வந்து விட்டது. ஓடிப்போய் அந்தப் பழங்களையெல்லாம் கொண்டுவந்து காலடியில் வைத்துக்கொண்டது. ஜபம் செய்ய ஆரம்பித்தது.

மறுபடி ஒரு சந்தேகம் வந்தது. 'ஒரு நாள் பட்டினிக்கு பிறகு என்னால் கைநீட்டி எடுத்து வாயில் போட்டுக்கொள்ள முடியாத அளவுக்குப் பலவீனம் ஏற்பட்டுவிட்டால்?' என்று எண்ணிற்று. தன்னை அறியாமல் ஒரு பழத்தை எடுத்து வாயில் போட்டுக் கொண்டது. வாய் நிறையப் பழம் இருந்ததால், அதனால் வாயை அசைத்து ஜபம் சொல்ல முடியவில்லை. மனமும் பழத்தின் ருசியிலேயே ஈடுபட்டிருந்தது.

அந்தப் பழம் முடிந்தது. குரங்கு எண்ணிற்று. 'எப்படியும் நாளைக்கு இவற்றை நான் தானே சாப்பிடப் போகி

றேன்? அதை இப்போதே சாப்பிட்டுவிட்டால்? பட்டினி யுடன் தான் ஜபம் செய்ய வேண்டும் என்பது என்ன நியதி?

உடனே குரங்கு எல்லா பழங்களையும் ஒவ்வொன்றாக எடுத்து ருசித்துச் சாப்பிட்டது. வயிறு நிறைந்தது. ஜபம் செய்யும் எண்ணம் மறைந்து போயிற்று. அங்கேயே தூங்கிப் போய்விட்டது.

கதையைச் சொல்லிவிட்டு சந்நியாசி அந்தப் பிரபுவைப் பார்த்துச் சிரித்தார். பிரபு புரிந்து கொண்டார். மறுநாளே அவருடன் காவியுடை அணிந்து சந்நியாசியாகப் புறப் பட்டு விட்டார்.

• •

## 66

நல்லமுறையில் ஆண்டு வந்த ஒரு ராஜ்ஜியத்தின் அரசன், சேனாதிபதியின் சூழ்ச்சியினால் காட்டுக்குத் தப்பி ஓடும்படி ஆகிவிட்டது. மந்திரியின் உதவியுடன் ராணியைக் குதிரையில் ஏற்றிக் கொண்டு, காட்டுக்குப் போய்விட்டான் அரசன். ஆட்சியைப் பிடித்துக்கொண்ட சேனாதிபதிக்கு அத்துடன் பேராசை அடங்கவில்லை. அரசன் உயிருடன் இருக்கும்வரை தனது ஆட்சிக்கு ஆபத்து என்று எண்ணினான். அரசனைக் கொன்று வரக் காட்டுக்கு ஆட்களை அனுப்பி வைத்தான்.

ராணியை ஒரு வேடர் குடிசையில் தங்கச் செய்துவிட்டுக் குதிரைமேல் ஏறி அரசன் சுனை ஒன்றுக்குப் போனான். அங்கே அவன் நீராடிக் கொண்டிருந்தபோது ஆட்கள் அவனை அம்பு

எய்தி கொன்றுவிட்டார்கள். அரசனின் உடல், சுனையில் மிதந்து போய்விட்டது. அரசனுக்காகப் பல நாட்கள் காத்திருந்தாள் ராணி. அரசன் திரும்பவில்லை. அவனை யாரோ கொன்றுவிட்டார்கள் என்று தீர்மானம் செய்துவிட்டாள்.

ராணி தன்னுடைய உயிரையும் போக்கிக் கொள்ள முனைந்தாள். அப்போது அந்த வேடனின் மனைவி, "அம்மா! உன்னைப் பார்த்தால் கர்ப்பிணி போல் தோன்றுகிறது. உன்னுடைய உயிரைப் போக்கிக் கொள்ளத்தான் உனக்கு உரிமை உண்டு. உன் வயிற்றில் உள்ள உயிரை நீ எப்படி அழிக்கலாம்? அதனால் உன் குழந்தை பிறக்கும் வரை நீ உயிர் துறக்கக் கூடாது!" என்று சொன்னாள். ராணிக்கு அதுவும் நியாயமாகவே பட்டது. பிரசவம் ஆகும் வரை வைராக்கியத்துடன் இருந்தாள். பிரசவம் ஆயிற்று. ஆண் குழந்தையும் பிறந்தது. தனது கடமையைச் செய்துவிட்ட திருப்தியுடன் ராணி கண்ணை மூடிவிட்டாள். அவளுடைய கதை முடிந்தது.

'வேடப் பெண்மணி அந்தக் குழந்தையை எடுத்து வளர்த்தாள். வேடச் சிறுவர் உண்ணும் உணவையே அந்த ராஜகுமாரனுக்கும் கொடுத்தாள். ஒரே சூழ்நிலையில் வளர்ந்தாலும், அவனுடைய மனப்பான்மை மட்டும் வேறு விதமாக இருந்தது. மற்றவர்கள் காட்டுக்குப் போய் வேட்டை ஆடிய போது, அவன் மட்டும் அங்கே உள்ள முனிவர்களை நாடிக்கொண்டு போனான். மற்றவர்கள் கல்லை வைத்துக் கொண்டு, கயிற்றால் எறிந்து வேட்டையாடிய போது, அவன் மட்டும் சாஸ்திரப்படி வில் வித்தையைப் பயின்றான். கத்தியாலும் வேல் கொண்டு சண்டையிடும் வித்தைகளைக் கற்றுக் கொண்டான்.

காட்டில், வேடர்கள் திருவிழா நடந்தது. அதைப் பார்க்க சேனாபதியும், மந்திரியும் பிற அரச பரிவாரங்களும் வந்திருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் தனியாகத் தனது

திறமை ஒளிவிட சண்டைகளையும் விளையாட்டுக்களையும் செய்து காட்டிய சிறுவனை மந்திரி பார்த்தான். அவனுக்கு மனத்தில் சிறு சந்தேகம் ஏற்பட்டது. அரசன் தப்பித்துச் செல்ல உதவியவன் அவனே. அரசி அப்போது கருவுற்றிருந்த நிலையும் அவனுக்குத் தெரியும். அந்த அரசி ஒரு வேளை ஆண்மகவு ஒன்றை ஈன்றிருப்பாளோ? அந்த அரசகுமாரன் காட்டிலேயே வளர்ந்து கொண்டிருக்கிறானோ? அவன்தான் இந்தச் சிறுவனோ?— இவ்வாறெல்லாம் சந்தேகப்படத் தொடங்கினான்.

சேனாபதி அரச பரிவாரங்களுடன் நாட்டுக்குத் திரும்பிய பிறகு, மந்திரி மாறுவேடம் அணிந்து காட்டுக்கு வந்தான். காட்டில் வசித்து வந்த வேடப் பெண்மணியிடம் அந்தச் சிறுவனைப் பற்றிக் கேட்டான். வேடப் பெண்மணிக்குப் பொய் சொல்லத் தெரியவில்லை. நடந்தது அவ்வளவையும் அப்படியே சொல்லிவிட்டாள். தான் தேடிக் கொண்டு வந்த அரசகுமாரன் அந்தச் சிறுவன்தான் என்பதை மந்திரி உணர்ந்து கொண்டான்.

தன்னுடன் வரும்படி அவனை அழைத்தான். அந்தச் சிறுவன் ஒப்புக் கொள்ளவில்லை. "இந்தக் காடுதான் என்னுடைய வீடு. இந்த வேடச் சிறுவர்கள் தாம் என் உடன் பிறந்த மக்கள், இந்த வேடப் பெண்மணிதான் என்னுடைய தாய். இங்கிருந்து நான் வரமாட்டேன்!" என்று சொல்லிவிட்டான். மந்திரிக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. நாட்டுக்குத் திரும்பிப்போனான்.

கல்வியிலும், போர்க்கலையிலும் சிறந்த சில ஆசிரியர்களுடன் திரும்பி வந்தான். அவர்களை, அந்தச் சிறுவர்கள் எல்லோருக்குமே வித்தை கற்றுத் தரும்படி அமர்த்தினான். ஆனால், வேடச்சிறுவர்களுக்கு எதுவுமே புத்தியில் ஏறவில்லை. அரசகுமாரன் மட்டுமே எல்லாவற்றையும் நன்றாகக் கற்றுணர்ந்து திறமைசாலியானான். அப்போது அவனுடைய குரு அவனிடம் சுட்டிக்காட்டிச் சொன்னார்.

"பார்த்தாயா? நாங்கள் கற்றுத்தந்தும் அவர்களுக்கு எதுவும் புத்தியில் ஏறவில்லை. உனக்கும் நாங்கள் தாம் கற்றுக் கொடுத்தோம். நீ எவ்வளவு திறமைசாலியாக ஆகிவிட்டாய்! நீ வேறு, அவர்கள் வேறு என்பது உனக்கு இப்போது புரிந்ததா? எங்களுடன் நீ நாட்டுக்கு வா. அங்கே மேலும் பல கலைகளைக் கற்றுத் தருகிறோம். நீ யார் என்பதை அப்போது நீ உணர்வாய்!" என்று அழைத்தார்கள். வேடப் பெண்மணியும் வற்புறுத்தி அனுப்பினாள்.

அரசகுமாரன் நாட்டுக்கு வந்தான். படிக்கப் படிக்க ஞானம் முதிர்ந்தது. தான் யார் என்பதையும் புரிந்து கொள்ள முடிந்தது. அவன் எல்லா கலைகளிலும் வல்லவனானான். மந்திரியிடமிருந்து தனது பெற்றோரைப் பற்றித் தெரிந்து கொண்டான். தான் அரச பதவியில் இருக்க வேண்டியவன் என்பது புரிந்தது. மந்திரி துணையுடன், பழைய அரசனிடம் விசுவாசம் கொண்ட போர்வீரர்கள், குடிமக்களை ஒன்று சேர்த்தான். புரட்சிப் போர் நடத்தி, சேனாபதியை நாட்டைவிட்டு விரட்டினான். அரியாசனத்தில் அமர்ந்து, நல்ல வழியில் நாட்டை ஆளத் தொடங்கினான்.

மனிதனுடைய நல்ல புத்தி சூழ்நிலையாலும், பழக்கங்களாலும் மாசுபடிந்து போகிறது. தான் பிறந்ததன் பயனையும், வாழ்க்கையின் குறிக்கோளையும் மறந்து விடுகிறான். ஞானாசிரியன் ஒருவன் அவனை மீண்டும் சரியான வழிக்குக் கொண்டு வரவேண்டி இருக்கிறது. அந்த ஞான போதனையின் மூலம் அவன் தனது நிலையை உணர்ந்து கொள்கிறான். அவனுடைய வாழ்க்கையும், அவனது சுற்றத்தாருடைய வாழ்க்கையும், அந்தப் பண்பட்ட மனத்தால், மேம்பாடு அடைய முடிகிறது...

● ●

சூதாட்டத்தில் துரியோதனனிடம் தருமர் தோற்றுப்
போனார். கௌரவர்களின் கட்டளைப்படி பாண்டவர்கள்
வனவாசம் போக வேண்டியதாயிற்று. குந்தி தேவி கண்ண
னிடம் "கண்ணா! திரௌபதியின் மானத்தைக் காத்தது
போல நீ எங்கிருந்தாலும் பாண்டவர்களைக் காப்பாற்ற
வேண்டும். வனவாசத்தில் பாண்டவர்களுக்கு ஆபத்து
நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும்!" என்று கேட்டுக்
கொண்டாள். கண்ணனும் அவர்களுக்கு ஆதரவாக இருந்து
காப்பாற்றினான்.

வனவாசம் முடிந்து பாண்டவர்கள் திரும்பி வந்தார்
கள். தங்களுடைய நாட்டைத் திரும்பப் பெற வேண்டினார்
கள். குந்திதேவி கண்ணனிடம் "கண்ணா! நீதான் பாண்ட
வர்களுக்காகத் தூது போக வேண்டும். எப்படியாவது
பாண்டவர்களின் உரிமையைக் காத்து அவர்களுக்கு நல்ல
வாழ்வைக் கொடுக்க வேண்டும்!" என்று கேட்டுக் கொண்
டாள். கண்ணன் அவர்களுக்காகத் தூது போனான். நாடு
முழுவதையும் பங்கிட்டுக் கொடுக்காவிட்டாலும், ஐந்து
பகுதிகளையாவது, ஐந்து ஊர்களை யாவது, ஐந்து தெருக்
களை யாவது—குறைந்தது ஐந்து வீடுகளையாவது கொடுக்
கும் படி கேட்டான். கௌரவர்கள் சம்மதிக்கவில்லை.
கண்ணன் திரும்பி வந்து விட்டான்.

குருக்ஷேத்திரத்தில் யுத்தம் ஆரம்பமாக இருந்தது.
குந்தி தேவி பாண்டவர்களைக் காப்பாற்றக் கண்ணனை அனுப்
பினாள். "எதிர்ப்புறம் பீஷ்மர், துரோணர் போன்ற பெரி
யோர்கள், திறமைசாலிகள் இருக்கிறார்கள். கர்ணனைப்
போன்ற வல்லவர்கள் துணை நிற்கிறார்கள். நீதான் பாண்ட

வர்களைக் காப்பாற்ற வேண்டும். எல்லோருடைய குறியும் அர்ச்சுனன் மீதுதான் இருக்கிறது. நீ அர்ச்சுனனுக்குப் பாது காப்பாக இருந்து உதவ வேண்டும்!'' என்று கேட்டுக் கொண்டாள்.

''தாயே! கர்ணன் உனது மகன்தான்! அவன்தான் உன்னுடைய மூத்த மகன். சூரியதேவனை நீ வேண்டிப் பெற்ற மகன். அவனால்தான் அர்ச்சுனனுக்கு ஆபத்து நேரக் கூடும். நீ கர்ணனிடம் போய் உண்மையைக் கூறி நாகபா சத்தை அவன் ஒரு முறைக்குமேல் செலுத்தாமல் பார்த்துக் கொள். அதற்கு வரம் வாங்கிக் கொண்டு வா!'' என்று கூறி அனுப்பினான் கண்ணன். குந்தி தேவி அவ்விதமே வரம் பெற்றுக் கொண்டு வந்து விட்டாள். கண்ணன் பார்த்தனுக் குச் சாரதியாக இருந்து, தேரோட்டி, கீதோபதேசம் செய்து பாண்டவர்களுக்கு வெற்றி கிடைக்க உதவினான்.

வெற்றி அடைந்த பாண்டவர்கள் நாடாளத் திரும்பி னார்கள். கண்ணன் கூடவே இருந்து தர்மரை அரசராக அரி யணையில் அமர்த்தி முடிசூட்டி ஆசீர்வதித்தான். குந்தி தேவிக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. கண்ணன் பாண் டவர்களிடம் விடை பெற்றுக் கொண்டான். குந்தி தேவி யிடமும் சொல்லிக் கொண்டு போவதற்கு வந்தான்.

''கண்ணா! எல்லாம் நல்லபடியாக முடிந்துவிட்டது. அவற்றுக்கெல்லாம் நீயே ஆதார பலமாக இருந்து வெற்றி தேடிக் கொடுத்து விட்டாய். எனக்கு அது மிகுந்த மகிழ்ச்சி யாக இருக்கிறது. ஆனால் எங்களை விட்டுத் துவாரகைக்கு பிரிந்து செல்லப் போகிறேன் என்கிறாயே, அதுதான் எங்க ளுக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. நான் எப்படி உன்னைப் பிரிந்து இருப்பேன்?'' என்று கண்களில் நீர்மல்கக் கேட்டாள் குந்திதேவி.

''தாயே! கவலைப்படாதீர்கள். யாதவர்களின் அரசுப் பொறுப்பை ஏற்க நான் போவது, என்னுடைய கடமை

ஆனால் எங்கிருந்தாலும் என் கவனம் உங்களிடம்தான் இருக்கும்'' எப்போது நீங்கள் என்னை நினைத்து அழைத்தாலும் நான் உடனே வந்துவிடுவேன்!'' என்றான் கண்ணன்.

''அப்படியானால் எனக்கு ஒரு வரம் கொடு!'' என்று கேட்டாள் குந்திதேவி.

''வரமா? என்னிடமா? என்ன வரம் வேண்டும்தாயே?'' என்று வியப்புடன் கேட்டான் கண்ணன்.

''தினம் எனக்கு ஒரு துன்பம் நேரவேண்டும் என்று அருள் செய் கண்ணா!'' என்றாள் குந்தி தேவி.

''என்னம்மா இது? எல்லோரும் நல்லது கிடைக்க வரம் கேட்பார்கள். நீ தினமும் துன்பம் நேர வேண்டும் என்று கேட்கிறாயே?'' என்று ஆச்சரியப்பட்டான் கண்ணன்.

''கண்ணா! நீ அறியாதது இல்லை. துன்பம் வந்தால்தான் மக்கள் கடவுளை நினைக்கிறார்கள். நான் தினமும் உன்னை நினைக்க விரும்புகிறேன். அதனால்தான் தினம் எனக்கு ஒரு துன்பம் வரும்படி அருள் செய் என்று சொல்லுகிறேன்'' என்றாள் குந்தி தேவி. கண்ணன் அந்த ஆழ்ந்த அன்பையும், அதில் பொதிந்த தத்துவத்தையும் உணர்ந்து மனம் நெகிழ்ந்து போனான்.

துன்பம் வந்தால்தான் நாம் கடவுளை நினைக்கிறோம். இன்பம் கிடைக்கும்போது அதை நம்முடைய சாதனையாகவே எண்ணிக் கொள்ளுகிறோம். புண்ணின் வேதனை அடங்க மருந்து போடுவது போல், துன்பத்தின் சிரமம் மறைய பிரார்த்தனை நமக்கு உதவுகிறது.

தனது குடிமக்கள் நல்லமுறையில் வாழவேண்டும் என்பதில் அக்கறை மிகுந்த ஒரு மன்னன், மாறுவேடத்தில் மக்களிடையே சென்று அவர்கள் எப்படி வாழ்கிறார்கள் என்பதைக் கண்டு வருவதற்குப் புறப்பட்டான்.

செல்வ நிலையில் உள்ள வணிகர்கள் உள்ள பகுதியில் அவன் போய்ப் பார்த்தபோது, அங்கே அவர்கள் மனச்சாட்சியே இல்லாமல் அதிக விலைக்குப் பொருட்களைப் விற்பதையும், அவசியமான பொருட்களை பதுக்கி வைத்திருப்பதையும் கண்டான். அரசனுக்கு மிகுந்த மனவருத்தம் உண்டாயிற்று.

நடுத்தரமான வருமானம் உள்ள அலுவலர்கள் உள்ள பகுதியில் அவன் போய்ப் பார்த்தபோது, அவர்கள் தம்து கடமையைச் சரிவர செய்யாமல் சோம்பேறிகளாகத் திரிவதைக் கண்டான். மேலதிகாரி இருந்தால் ஒருவேலை இல்லாவிட்டால் ஒருவேலை என்று ஏமாற்றுவதையும் தெரிந்து கொண்டான். அவனுக்கு மிகுந்த மனச்சலிப்புஏற்பட்டது.

அடுத்தபடியாகத் தொழிலாளர்கள் நிறைந்த பகுதி ஒன்றுக்கு அரசன் போனான். அங்கே பலரும் தமக்குக் கிடைக்காதவற்றையே எண்ணிக் குறைபட்டுக் கொண்டிருப்பது அவனுக்குத் தெரிந்தது. மேலும் மேலும் ஊதியம் பெருக வேண்டும் என்பதற்கே அவர்கள யோசனை செய்து கொண்டிருந்தார்கள். உற்பத்தி பெருக வேண்டும் என்று அவர்கள் எண்ணவே இல்லை. அதைக் கண்ட மன்னன் மிகுந்த ஏமாற்றம் அடைந்தான்.

இவர்களைப்பற்றி யெல்லாம் யோசனை செய்தவாறு, வயல் வரப்பு ஒன்றில் அரசன் மாறுவேடத்தில் நடந்து போய்க்கொண்டிருந்தான். அங்கே ஓர் உழவன் சேற்றில் இறங்கி, நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த, உழுது கொண்டிருந்தான். அவனிடம் ''ஐயா! உங்களிடம் சிறிது பேச வேண்டும். இங்கே வரப்புக்கு வருகிறீர்களா?'' என்று கேட்டான் அரசன்.

''ஐயா! எனக்கு அதற்கு நேரம் இல்லை. நேற்று மழை பெய்திருக்கிறது. இன்று நான் உழுது முடித்தாக வேண்டும். இல்லையென்றால் என் பணி வீணாகிவிடும். அவசியமும் நீங்கள் பேசவேண்டும் என்றால், இங்கே சேற்றில் இறங்கி என்னுடன் நடந்தபடியே பேசும்'' என்று சொல்லி விட்டான் உழவன்.

அரசன் மிகுந்த மகிழ்ச்சியுடன் சேற்றில் இறங்கினான். அவனுடன் நடந்தபடியே ''இந்த நிலம் உனக்குச் சொந்தமானதா?'' என்று கேட்டான்.

''இல்லை ஐயா! இது என் எஜமானரின் நிலம். எனக்கு அவர் ஒரு நாளைக்கு நான்கு வெள்ளிக் காசுகள் கூலி கொடுக்கிறார்'' என்றான் உழவன்.

''அவர்தான் இல்லையே? நீ ஏன் கொஞ்சம் நிதானமாக ஓய்வெடுத்துக் கொண்டு வேலை செய்யக்கூடாது?'' என்று கேட்டான் அரசன்.

''எல்லோருக்கும் எஜமானரான ஆண்டவன் எந்த நேரமும் நம்மைப் பார்த்துக் கொண்டே இருக்கிறாரே? அவரை நாம் எப்படி ஏமாற்ற முடியும்? அதனால் என் கடமையை நான் ஒழுங்காகச் செய்தாக வேண்டும்'' என்றான் உழவன்.

சற்று வியப்படைந்த அரசன் ''நீ நாள் முழுவதும் உழைக்கிறாய். உனக்கு நான்கு வெள்ளிக் காசுகள் தாம்

கூலியாகக் கிடைக்கின்றன. அது உனக்குப் போதுமா? கூடுதலாகக் கூலிவேண்டும் என்று எஜமானரிடம் நீ சண்டை போட்டதில்லையா?'' என்று கேட்டான்.

''இல்லை! போதும் என்ற மனம் எனக்கு உண்டு. அது மட்டும் அல்ல. என் உழைப்பால் கூடுதலாக விளைந்தால், என் எஜமானர் எனக்கு அதிகமாகக் கூலி கொடுப்பார். அது போதும்'' என்றான் உழவன்.

மனதுக்குள் அவனைப் பாராட்டிய அரசன் ''உனக்கு கிடைக்கும் ஊதியத்தை நீ எப்படிச் செலவு செய்கிறாய்?'' என்று கேட்டான்.

''ஐயா! என் ஊதியத்தில் நாலில் ஒரு பங்கு கடனை அடைக்கப் போய்விடுகிறது. நாலில் இன்னொரு பங்கை வட்டிக்கு விடுகிறேன். நாலில் மற்றொரு பங்கைத் தருமம் செய்கிறேன். மிகுந்த நாலாவது பங்கு என் கடமையைச் செய்யத் தேவைப்படுகிறது!'' என்றான் உழவன். அதைக் கேட்ட அரசன் மிகுந்த ஆச்சரியம் அடைந்தான்.

''உமக்குக் கிடைக்கும் கூலியே சொற்பமானதாக இருக்கிறது. அதைச் செலவழிப்பதில் இத்தனை விதமா? சற்று விளக்கமாகச் சொல்லும்!'' என்று அரசன் திருப்பிக் கேட்டான்.

''ஆமாம் ஐயா! நான் எனது பெற்றோரை உடன் வைத்துப் பராமரிக்கிறேன். அதையே நான் பட்ட கடனை அடைப்பதாகச் சொல்லுகிறேன். என்னுடைய மகன்கள். இருவரையும் சோறுபோட்டு, கல்வி கற்பித்துபார்க்கிறேன். வளர்ந்த பின் அவர்கள் என்னைக் காப்பாற்றுவார்கள் என்று நம்புகிறேன். அதையே நான் வட்டிக்கு விடுவதாகக் கூறுகிறேன். என் மாமன் மகள் கணவனை இழந்து, தன் குழந்தையுடன் என்னிடம் அடைக்கலம் புகுந்திருக்கிறாள். அவளையும் நான் காப்பாற்றுகிறேன். அதையே நான் தருமம் செய்வதாகக் குறிப்பிட்டேன். நாலாவது பங்கு என்

மனைவியைக் காப்பாற்றி, அவளுடன் நான் வாழப் பயன்படு கிறது. இதுதான் எனது கடமையைச் செய்ய ஆகும் செலவு!'' என்றான் உழவன்.

அரசனுக்கு மிகுந்த ஆனந்தம் உண்டாயிற்று. அவனிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்பினான். ஆள் மூலம் அந்த உழவனுக்குப் பரிசுகளை அனுப்பி வைத்தான். தமது கடமையைச் சரிவரச் செய்யாத மற்ற குடிமக்களை வரவழைத்து எச்சரிக்கை செய்து அனுப்பினான்.

● ●

# 69

எல்லா காரியங்களையும் தடையின்றி செய்து முடிக்க, நாம் விநாயகரை வேண்டிக் கொள்கிறோம். அவருடைய உருவத்தைப் பார்த்து மேல் நாட்டினர் ''எப்படி இந்த உருவம் கொண்ட கடவுளிடம் நீங்கள் இவ்வளவு பக்தி கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்கிறார்கள். அவர்களுக்கு இதன் தத்துவம் விளங்குவதில்லை.

வேதாந்த உண்மைகளை விளக்கமாக கேட்டுக் கொள்ள வேண்டும். அதற்காகவே, பெரிய விசாலமான காதுகள் அவருக்கு அமைந்திருக்கின்றன. அப்படிச் சேகரித்த உண்மைகளை மிகுந்த ஞாபக சக்தியுடன் வைத்துக்கொள்ள வேண்டும். எந்த நல்ல விஷயத்தையும் தேடி எடுத்துக் கொள்ளும் சக்தியும் தேவை. மிகுந்த ஞாபக சக்தி உடையதும், தரையிலிருந்து ஊசியையும் பொறுக்கிவிடக் கூடியதுமான யானையின் தலை மகா கணபதிக்கு அமைந்திருப்பது

இதைத்தான் குறிக்கிறது. யானை தனது தும்பிக்கையால் அருகம் புல்லையும் பறிக்க முடியும். மரத்தையும் உலுக்கி வேரோடு பிடுங்க முடியும். விஷயங்கள் எப்படிப்பட்டவை யானாலும் அவற்றை அடையக்கூடிய சக்தியைத் தும்பிக்கை காட்டுகிறது. எந்த உக்கிரத்தையும் வேரோடு எடுத்துவிடக் கூடிய சக்தியையும் அடையாளமாகக் குறிப்பிடுகிறது.

வேதாந்தம் கற்றவனுக்கு, நல்லவை தீயவை என்ற பாகுபாடுகளைக் கடந்த சிந்தனை இருக்க வேண்டும். கணபதியின் இரு தந்தங்கள் இதைத்தான் காட்டுகின்றன. விநாயகருக்கு அளவு கடந்த பசி உண்டென்று கதை சொல்லுவார்கள். குபேரன் தனது அளவு கடந்த செல்வத்தைப் பற்றி, மிதந்த பெருமை கொண்டிருந்தானும். ஒரு நாள் அவன் விநயகரைத் தனது அரண்மனைக்கு அழைத்தான். பெரிய விருந்து ஒன்றுக்கும் ஏற்பாடு செய்தான். முதற் கடவுளான கணபதி முதலிலேயே வந்து சேர்ந்து விட்டார். சமைத்து வைத்திருந்தவை அவ்வளவையும்அவர் ஒருவராகவே சாப்பிட்டு முடித்துவிட்டார்! உள்ளே வைத்திருந்த அரிசி, பருப்பு, கறிகாய், பழங்கள் எல்லாவற்றையும் சாப்பிட்டு விட்டார். குபேரன் கலங்கிப் போனான். கர்வபங்கம் அடைந்தவனாகச் சிவபெருமானிடம் ஓடினான். அவர் வந்து மகனுக்கு வெந்த அரிசியில் செய்த பலகாரத்தைக் கொடுத்தார். கணபதியின் பசி அடங்கிற்று. குபேரனின் கர்வமும் தணிந்தது!

இதைக் காட்டும் விதமாகத்தான் விநயக சதுர்த்தி யன்று கொழுக்கட்டை நைவேத்தியம் செய்கிறோம். அவருடைய ஞானப்பசி அடக்க முடியாதது. நல்ல விஷயங்களைப் பக்குவமாகச் சமைத்து கிரகித்துக் கொண்ட பிறகு தான், அந்த ஞானப்பசி அடங்குகிறது என்பது இதன் பொருள். உலகியல் ஞானங்களைத் தன்னுடன் அடக்கி வைத்துள்ள உருவமாகவே பெரும் வயிறு காணப்படுகிறது.

காலை மடித்து, ஒரு காலைத் தொங்க விட்டுக் காட்டு கிறார் மகா கணபதி. ஞானம் முற்றிய நிலையில் தன்னை அடக்கி வைத்துள்ள ஒருவனின் தோற்றமே இதில் பிரதி பலிக்கிறது. பத்மம் ஒன்றில் அமர்ந்திருப்பது அவருக்கு மலரின் மென்மையான ஆசனமே, மனத்தின் மென்மைக்கு உகந்தது என்பதைக் காட்டுகிறது.

மகா கணபதியின் பாதத்தில் ஒரு மூஞ்சுறு அமர்ந்திருப் பதைக் காணலாம். நிறைய பழங்கள், பட்சணங்கள், இவற் றுக்கு நடுவே அது அமர்ந்திருக்கிறது. ஆனால் அவை எதை யுமே தொடுவதில்லை. விநாயகரை நோக்கி உயர்ந்த முகத் துடன் இருக்கிறது. அது அடங்கிக் கிடக்கிறது, உலக இச் சைகளைப் பின்தொடரும் உள்ளம் எல்லோருக்கும் இருக் கும். சுற்றிலும் ஆசையைக் கவரக்கூடிய பொருட்கள் இருக்க, உள்ளம் அதை லட்சியம் செய்யாமல் மெய்ஞ் ஞானத்தையே நோக்கி நிமிர்ந்து நிற்கவேண்டும். இதையே இந்த அமைப்பு எடுத்துக் காட்டுகிறது.

விக்னேசுவரருடைய நான்கு கைகளில் ஒன்று கோடா லியை வைத்திருக்கிறது. பக்தர்களுடைய அஞ்ஞானத்தை அறவே நீக்கும் சக்தியை இது காட்டுகிறது. இன்னொரு கை கயிற்றைச் சுருட்டி வைத்திருக்கிறது. இதைக் கொண்டு பக்தர்களை மெய்ஞ்ஞானத்தை நோக்கி அவர் கட்டி இழுக் கிறார். மூன்றாவது கையில் மோதகம் இருக்கிறது. பக்குவ மான அறிவை பக்தர்களுக்கு அவர் வழங்குவதை இது குறிக்கிறது. நாலாவது கை உயர்ந்து ஆசீர்வதிக்கிறது. பக்தர்களுக்குச் சிரமம் வராமல் அவர் தடுத்தாட் கொள் வதையே இது காட்டுகிறது.

உலக வாழ்க்கையில் அறியாமை தான் நமது மிகப் பெரிய இடைஞ்சல். அந்த அறியாமை நீங்கினாலும், மெய்ஞ் ஞான வழிக்குச் செல்ல முடியாமல் இச்சைகள் நம்மைக் கவருகின்றன. அவற்றிலிருந்து நம்மைப் பிரித்து அழைத்துச் செல்லும் பகவான், போகும் வழியில் நமக்கு அருட்பிர

சாதம் தருகிறார். உய்யும் வழியில் செல்லும்போது அபயகரம் தந்து காப்பாற்றுகிறார். இந்த நான்கையுமே விநாயகரின் நான்கு கைகள் காட்டுகின்றன.

பழுத்த ஞானியான வேதவியாசரிடம், கணபதி உட்கார்ந்து தன் தந்தத்தை ஒடித்து எழுது கோலாக வைத்து மகாபாரதத்தை எழுதி முடித்தாகப் புராணம் கூறுகிறது. எந்த வயதிலும் யாரும் அறிவை தேடிச் செல்லத் தயங்கக் கூடாது என்பதை இது காட்டுகிறது. உணர்ந்து புரிந்து கொண்டாலொழிய எழுதக் கூடாது என்ற நிபந்தனை போட்டாராம் வியாசர். கணபதியும் ஒவ்வொரு சொல்லையும் பொருள் புரிந்து, அங்கங்கே நிதானித்து எழுதினாராம். உண்மையான கல்வியறிவு எப்படி இருக்க வேண்டும் என்பதையே இந்தப் புராணக் கதை எடுத்துக் காட்டுகிறது.



## 70

மாளவம் என்ற நாடு பசுமையுடன் செழிப்பாக விளங்கிற்று. அதன் தலைநகராகவிளங்கியது கன்னயாநகரம். அதில் சந்திராங்கதன் என்ற அரசன் ஆட்சி புரிந்து வந்தான். அவனுடைய பட்டத்து ராணியின் பெயர் இந்துமதி. கணவன் மனைவி இருவரும் தாம்பத்திய நெறி சற்றும் மாறாமல், பக்தியுடன் வாழ்ந்து வந்தார்கள். அவர்களுக்கு விநாயகப் பெருமானிடம் அளவு கடந்த பக்தி. இறைவன் அருளால் அவர்களுக்கு ஒரு பெண் குழந்தையும் பிறந்தது.

வழக்கம்போல, சந்திராங்கதன் காட்டுக்கு வேட்டை யாடப்போனான். அங்கே பயங்கரமான காட்டு மிருகங்களை வில்லுக்கும் வேலுக்கும் பலியாக்கினான். அந்தக் காட்டுக்கு அதிபதிகளாக விளங்கிய இராட்சதர்கள் இதனால் கோபம் கொண்டார்கள். சந்திராங்கதனுடன் போரிட வந்தார் கள். அரசன் அவர்களை எல்லாம்வென்று வீழ்த்திவிட்டான்.

இராட்சதர்களின் அன்னையான அரக்கி இதைக் கண்டு கடுங்கோபம் கொண்டாள். மாய வடிவில் புயற்காற்றைப் போல வந்து சந்திராங்கதன் மீது மோதினாள். அவனை நிலை குலையச் செய்து பொய்கை ஒன்றில் தள்ளிவிட்டாள். அரசன் நீருள் மூழ்கி மறைந்து போனான்.

அந்தப் பொய்கையில் நீராட நாகலோகத்தைச் சேர்ந்த கன்னியர்கள் வந்திருந்தார்கள். அரசனுடைய அழகைக் கண்ட அவர்கள் பிரமித்துப்போனார்கள். அவனை அப்படியே நாகலோகத்துக்குத் தூக்கிச் சென்று விட்டார் கள்.

அரசன் நாடு திரும்பவில்லை. இந்துமதி தாங்கவொண்ணா துயரத்துக்கு ஆளானாள். அரசனைத் தேடி வர நாலாபுறமும் படைகளை அனுப்பினாள். அரசன் கிடைப்பதாக இல்லை. ஒற்றர் கள் காட்டிலிருந்து திரும்பி வந்து, சந்திராங்கதன் பொய் கையில் மூழ்கி இறந்துவிட்டதாகச் சொன்னார்கள். இந்து மதியால் அந்தச் செய்தியைத் தாங்கிக் கொள்ளவே முடிய வில்லை. தானும் உயிர் துறந்து கணவனிடம் போய்ச்சேர ஆயத்தங்கள் செய்தாள்.

ராஜகுருவும் மந்திரிமார்களும் இதைக்கேட்டு மகா ராணியிடம் வந்தார்கள். "அரசாட்சி நடக்கவேண்டும். உங்கள் குழந்தை வளர வேண்டும். நீங்களும் போய் விட்டால் நாட்டில் குழப்பம் தோன்றி விடும். நாட் டின் நன்மைக்காக நீங்கள் உயிருடன் இருக்க வேண்டும்!" என்று சொல்லி அரசியைச் சம்மதிக்க வைத்தார்

கள். இந்துமதியும் ஒரு துறவியைப் போல நாட்டை ஆட்சி செய்து வந்தாள்.

நாகலோகம் சென்று கண்விழித்த சந்திராங்கதன் அழகிய நாகலோகப் பெண்களைக்கண்டு திகைத்துப்போனான். அவர்கள் அவனிடம் "அரசே! நாங்கள் நாகலோகக் கன்னியர்கள். உங்களுடைய அழகில் மயங்கி உங்களை இங்கே கொண்டு வந்து சேர்த்தோம். எங்களை நீங்கள் அனுபவித்து இன்பம் தரவேண்டும்" என்று விரகதாபத்துடன் கேட்டுக் கொண்டார்கள். ஏகபத்தினி விரதனாக இருந்த அரசன் அதற்கு இணங்கவில்லை. ஊரில் விட்டு வந்த மனைவியையே எண்ணி வருந்திக்கொண்டிருந்தான்.

திரிலோக சஞ்சாரியான நாரதர் ஒருநாள் அரண்மனைக்கு வந்து, இந்துமதியை ஆசிர்வதித்தார். கணவனை இழந்த அரசி, அவரிடம் தனது துயரத்தைச் சொல்லிப் புலம்பினாள். இந்துமதியின் பக்தியை அறிந்த நாரதர் "உன் கணவன் உயிருடன்தான் இருக்கிறான். நாகலோகத்தில் அவனைப் பார்த்தேன். அவன் உயிருடன் உன்னிடம் வருவதற்கு ஓர் உபாயம் சொல்கிறேன்" என்றார்.

"அப்படியா! அவர் உயிருடன் இருக்கிறாரா? அவரை மீண்டும் அடைய நான் என்ன செய்யவேண்டும்? சொல்லுங்கள். உடனே செய்கிறேன்!" என்று பதைபதைத்து வேண்டினாள் இந்துமதி.

"விநாயகப் பெருமானைப் பூசிப்பவள் நீ. அவருடைய அருள் இருந்தால் உன் கணவன் உயிருடன் திரும்பி வந்து விடுவான். அதற்குச் சதுர்த்தி விரதத்தை மேற்கொள். உன்னுடைய கணவன் உனக்குக் கிடைப்பான்!" என்று கூறினார் நாரதர்.

முனிவரின் உபதேசப்படி, பொட்டும் பூவும் துவங்க, சதுர்த்தி பூஜையைத் தொடங்கினாள் இந்துமதி. "கணவனை

இழந்த பெண் பொட்டும் பூவுமாக எப்படி பூஜை செய்ய லாம்?" என்று பலரும் நிந்தனை செய்தார்கள். இந்துமதி அதைப் பொருட்படுத்தவில்லை. ஆவணி மாதம் சுக்கில பட்சத்தில் வரும் சதுர்த்தியன்று விரதத்தைத் தொடங்கிச் சரியாக முப்பது நாட்கள் கட்டுப்பாட்டுடன் விரதத்தைச் செய்தாள். நிறைய தான தருமங்களையும் செய்தாள்.

இந்துமதியின் விரத நியமத்தை அறிந்து மகிழ்ந்த விநாயகப் பெருமான் நாகலோக கன்னியரின் மனத்தை மாற்றினார். தங்கள் அழகாலும் கவர்ச்சியாலும் சந்திராங் கதனை இணங்க வைக்க முடியாத அவர்கள், அவனைப் பத்திரமாகப் பொய்கைக் கரையிலேயே கொண்டு வந்து விட்டு விட்டார்கள். தூங்கி எழுந்தவனைப் போல அரசனும் கண்விழித்து, மாளவ வளநாட்டின் தலைநகருக்குத் திரும்பி வந்து விட்டான்.

மன்னன் திரும்பி வந்துவிட்டான் என்ற செய்தி நாடு முழுவதும் பரவிற்று. மக்கள் பெருவாரியாகத் திரண்டு அரசனை வாழ்த்தினார்கள். மாங்கல்யத்தைத் திரும்பப் பெற்ற இந்துமதிக்கும் சந்திராங்கதனுக்கும் மாலைகளைச் சூட்டி, மறுபடியும் ஒரு திருமணம் நடத்தி வைத்தார்கள். இன்றும் மங்கலயான மனைவியர் கணவனின் நீண்ட ஆயுளுக் காக, ஆவணி மாதம் சுக்கில பட்சத்தில், சதுர்த்தி விரதம் கொண்டாடுவது வழக்கமாக இருந்து வருகிறது. பார்க்கவ புராணம் என்ற விநாயகப் புராணத்தில் இந்தக் கதை வருகிறது.

மனத்தைத் தூய்மையுடன் பாதுகாத்து வரும் வரை அதில் பக்தியும் மகிழ்ச்சியும் மலருகிறது. அதை நழுவவிட்டு விட்டால் சோதனைகள் வந்து சேருகின்றன. பிறர் நம்மைப் பார்த்துக் கேலி செய்யும் நிலையும் உண்டாகிறது. ஆனால் மனோ திடத்துடன் பக்தியைத் தொடர்ந்தால் மீண்டும் பழைய நிலையைப் பெறலாம். சந்திராங்கதனின் கதை இந்தத் தத்துவத்தைத்தான் விளக்குகிறது.

## 71

அன்று உலகம் தோன்றிய முதல் நாள் உலகத்தில் இருக்க வேண்டிய சகல ஜீவராசிகளுக்கும் பகவான் ஓர் அட்டவணை தயாரித்து விட்டார். அவற்றுக்கு ஆயுட்காலம் எவ்வளவு என்பதைத் தீர்மானம் செய்ய வேண்டி இருந்தது.

பகவானின் ஆணைப்படி நாரத முனிவர் ஒவ்வொரு ஜீவராசியையும் அழைத்து வந்தார். அவற்றிடமே அவை விரும்பும் ஆயுட்காலங்களைக் கேட்டு, அப்படியே வரமும் கொடுத்து அனுப்பி விட்டார் பகவான். ஊர்வன, பறப்பன, புழு, பூச்சிகள் ஆகியவை எல்லாம் முடிந்த பிறகு மிருகங்களின் பங்கும் வந்து சேர்ந்தது.

''உங்கள் எல்லாருக்கும் முப்பது ஆண்டுகள் ஆயுசு?'' என்று மொத்தமாக வரம் கொடுத்தார் பகவான். அவை எல்லாவற்றுக்கும் ரொம்ப மகிழ்ச்சி. கத்திக் கொண்டும், குதித்துக் கொண்டும், துள்ளி ஓடி ஊர்வலமாக உலகத்தை நோக்கி அவை புறப்பட்டன. கோடிக்கணக்கான ஜீவராசிகள் அப்படி ஆண்டவனின் அருளைப் பெற்று புறப்பட்ட காட்சி பார்க்கப்பிரமாதமான ஒன்றாக இருந்தது.

''நாரதா! எல்லாரும் போய் விட்டார்களா?'' என்று கேட்டார் பகவான். எழுந்து வெளியே போய்ப் பார்த்து விட்டுத் திரும்பிய நாரதர், ''இன்னும் நான்கு வகை ஜீவராசிகள் மட்டும் காத்துக் கொண்டிருக்கின்றன. அவை தங்களிடம் முறையிட விரும்புகின்றன!'' என்றார் நாரதர்

''அப்படியா? நான் கொடுத்த வரம் அவர்களுக்குத் திருப்தியாக இல்லையா? அப்படியானால் ஒவ்வொன்றாக வரச் சொல்லு! நான் விசாரிக்கிறேன்'' என்றார் பகவான்.

முதலில் கழுதைஉள்ளே வந்தது பகவானின் முன் நின்று கண்ணீர் விட்டது. ''உன் குறையென்ன? சொல்லு! நான் போக்கி விடுகிறேன்'' என்றார் பகவான்.

சி.—17

''ஆண்டவனே! தாங்கள் எதற்காக எனக்கு முப்பது ஆண்டுகள் ஆயுளைக் கொடுத்தீர்கள்? என் பிழைப்பு உங்களுக்குத் தெரியாதா? கொஞ்சம் வளர்ந்தவுடன் மூட்டைகளைச் சுமக்க வைப்பார்கள். சரியானபடி தீனி கிடைக்காது. சிறுவர் முதல் பெரியவர் வரை எல்லாருடைய கேலிக்கும் ஆளாவேன். வயது முதிர்ந்த யாருக்கும் பயன் படாமல் உணவின்றி நலிந்து இறந்து போவேன். இந்த வாழ்க்கைக்கு எனக்கு முப்பது ஆண்டுகள் தேவையா? தாங்கள் தாம் அருள் கூர்ந்து இதைக் குறைத்து அருள வேண்டும்'' என்றது கழுதை.

''பயப்படாதே! உன் ஆயுளைப் பதினெட்டு ஆண்டுகளாகக் குறைக்கிறேன். மனிதன் உன்னை துன்புறுத்தினாலும் நீ சுத்தமான துணிகளைச் சுமப்பாய். உன் குரல் நல்ல சகுனமாகக் கருதப்படும்'' என்று வரம் கொடுத்து அனுப்பினார் பகவான். அடுத்ததாக நாய் உள்ளே நுழைந்தது. தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டது. பகவான் அதன்குறையை விசாரித்தார்.

''ஆண்டவனே! தாங்கள் அறியாததா? நான் இரவு பகலாகத் தூக்கமின்றி ஓடித் திரிந்தாக வேண்டும். என் பெயரைத் திட்டுவதற்கேற்ற இழி சொல்லாக உபயோகிப்பார்கள். சிறுவர்களும் என்னைக் கல்லால் அடித்து துன்புறுத்துவார்கள். இந்த நாய் பிழைப்புக்கு முப்பது ஆண்டுகள் எதற்கு? குறைத்தருள வேண்டும் சுவாமி!'' என்று புலம்பியது நாய்.

''அப்படியா? சரி! நீ பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்தால் போதும். அதிலும் நீ நல்லபடியாக நடந்து கொண்டால், உன்னை வீட்டில் வைத்துச் சோறு போடுவார்கள். நீ நன்றியுள்ள மிருகம் எனப் பெயர் பெறுவாய்'' என்று ஆசி கூறி அனுப்பினார் பகவான். நாய் வெளியே வரும் வரை காத்திருந்த குரங்கு உள்ளே ஓடி வந்து தலைக்கு மேல் கை கூப்பி இரண்டு காலில் நின்றபடி வணங்கிற்று.

''உனக்கென்ன குறை?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் பகவான்.

''எனக்குமா முப்பது ஆண்டு ஆயுள்? யோசித்துப்பாருங்கள் கடவுளே! என்னால் உழைத்துப் பிழைக்க முடியாது. விஷமம் செய்தே நான் காலந் தள்ளியாகவேண்டும். தற்காப்புக்காக மரத்துக்கு மரம் தாவியாக வேண்டும். கிளைகளைப் பிடித்துக்கொண்டுதொங்க வேண்டும். முப்பது வயது வரையில் நீங்கள்என்னைவாழச் செய்து விட்டால் முதிய பருவத்தில் எப்படி இவற்றைச் செய்வேன்? கொஞ்சம் அருள் கூர்ந்து என் ஆயுட்காலத்தைக் குறையுங்கள்!'' என்று கேட்டது குரங்கு.

''சரி! உனக்கு இருபது ஆண்டுகாலம் போதும். ஆனால் நீ நல்லபடியாகப் பிழைத்துக் கொள்வாய். ஆண்டவனின் தொண்டன் என்று பூஜிக்கப்படுவாய். உன்னைத் துன்புறுத்துவதும் பாபமாகக் கருதப்படும். கவலைப்படாமல் போய்ச் சேர்!'' என்று கூறி அனுப்பினார் கடவுள்.

கடைசியாக உள்ளே வந்தான் மனிதன். ஆண்டவனைக் கையெடுத்துக் கும்பிட்டான். ''உனக்கென்னப்பா குறை?'' என்று கேட்டார் கடவுள்.

''சுவாமி! எனக்கு முப்பது வயதுதான் கொடுத்திருக்கிறீர்கள். கல்வி கற்கவும், வேலையில் சேரவும், மணஞ் செய்து கொள்ளவும் இந்த வயது சரியாகப் போய்விடும். அப்புறம் நான் வாழ்க்கையை அநுபவிப்பது எங்கே? நானும் என் துணைவியும் பெறும் குழந்தைகளைக் காப்பாற்றுவது யார்? அவர்கள் வளர்ந்து எங்களைக் காப்பாற்றுவது எப்படி? எனக்கு ஆயுட்காலத்தைக் கூட்டிக் கொடுக்க வேண்டும் ஆண்டவனே!'' என்று கேட்டான் மனிதன்.

கடவுளின் முகம் வாடிப்போய் விட்டது. நெற்றி சுருங்கிற்று. ஒரு கணம் மனிதனை அனுதாபத்துடன் பார்த்தார். பிறகு மனிதனை ஆசீர்வதித்து ''சரி அப்பா! உன் விருப்பப்படி நடக்கட்டும். உனக்கு கொடுத்த முப்பது ஆண்டுகளுடன், கழுதையின் பதினெட்டு ஆண்டுகளையும், நாயின்

பன்னிரண்டு ஆண்டுகளையும் குரங்கின் இருபது ஆண்டுகளையும் சேர்த்துக் கொள். மொத்தம் எண்பது வயது கிடைக்கும். சாமர்த்தியம் இருந்தால் அதற்குப் பிறகும் வாழ்ந்து கொள்!'' என்றார் பகவான்.

மனிதனுக்கு ஒரே சந்தோஷம். கீழே விழுந்து வணங்கி விட்டு ஓடி விட்டான். பகவான் உற்சாகமின்றி உட்கார்ந்திருந்தார், நாரதர் அவரை ''வணங்கி ஆண்டவனே! மனிதனின் வேண்டுகோள் தவறு? ஏன் இப்படி சோர்ந்துபோய் உட்கார்ந்து விட்டீர்கள்?'' என்று கேட்டார்.

''ஆமாம் நாரதா! நான் கொடுத்த முப்பது ஆண்டுகளுக்குத்தான் அவன் சிரமமின்றி, உடல் ஆரோக்கியத்துடன் பிறர் உதவியை நாடாமல் வாழ முடியும். அத்துடன் அவன் பிழைத்துப் போயிருக்கலாம். தெரியாத்தனமாக மேலும் ஆயுள் வேண்டும் என்று கேட்டு வாங்கிக் கொண்டான். இப்போது நடக்கப்போவதென்ன? அடுத்த பதினெட்டு ஆண்டுகளுக்குக் கழுதையைப் போலவே வேலையில் சுமையையும், அப்புறம் நாயைப் போலப் பன்னிரண்டு ஆண்டுகள் சம்பாதித்துச் சேமித்த பணத்தைக் காவல் காத்தும், பிறகு இருபது ஆண்டுகள் வயதான காலத்தில் குடும்பத்தார் சொன்னபடியெல்லாம் ஆடிக் கொண்டும் இருந்து உயிரை விடப் போகிறான். இது என்ன பிழைப்பு? முப்பது வயதில் அவன் ஞானம் பெற்று, மனப்பக்குவம் அடைந்து என்னை வந்து அடைந்திருக்கக் கூடாதா?'' என்று பதில்சொல்லி பெருமூச்சு விட்டார் பகவான்.

உண்மைதான்! இன்றும் மனிதன் பெரும்பாலும் கடைசி வரை மிருக உணர்வுகளுடன் பயனில்லாத வாழ்க்கைதானே வாழ வேண்டியிருக்கிறது? முப்பது வயதில் ஞானம் பெற்று முக்தியைத் தேடியவர் யார்? மிகச் சொற்பமான ஆசாரிய புருஷர்களே அல்லவா?

● ●

வெகு நாட்களுக்குமுன் உத்தானபாதன் என்ற அரசன் தனது நாட்டைத் திறமையாக ஆண்டு வந்தான். அவனுக்கு சுநீதி, சுருசி என்று இரு மனைவிகள். சுநீதி, மிகவும் நல்லவள்; பக்திமிகுந்தவள். சுருசி மிக அழகானவள்; கவர்ச்சி மிகுந்தவள்; அதனால் சுருசியிடம் தான் அரசனுக்கு அதிகப் பிரியம் இருந்தது.

இருவருக்கும் குழந்தைகள் பிறந்தன. சுநீதியின் மகனான துருவனும் சுருசியின் மகனான உத்தமனும் வளர்ந்து வந்தார்கள். அரசனுக்குத் துருவனிடம் அதிகப் பிரியம் இல்லை. இருந்தாலும் உத்தமனுடன் அவன் சேர்ந்து விளையாடுவான். அப்படியே தந்தையைப் பார்க்க வருவான். இது சுருசிக்குப் பிடிக்காது. அவளுக்குமுன் அரசன் துருவனிடம் அன்புவார்த்தைகள் பேசுவது கூட இல்லை; அவ்வளவு பயம்.

ஒருநாள் துருவன் அரசனிடம் போன போது உத்தானபாதன், உத்தமனை மடியில் வைத்துக் கொஞ்சிக் கொண்டிருப்பதைப் பார்த்தான். ஆசையோடு அவனும் தந்தை மடியில் ஏறி உட்கார முயன்றான். இதைப் பார்த்த சுருசி வெறுப்புடன் அவனை இழுத்துக் கீழே இறக்கி விட்டு ''இங்கே உனக்கு இடமில்லை!'' என்று சீறினாள்.

''என் தந்தையின் மடியில் நான் உட்காரக் கூடாதா சித்தி?'' என்று கேட்டான் துருவன். சுருசிக்குக் கடுங் கோபம் உண்டாயிற்று. ''நீ அரசருக்குப் பிறந்திருக்கலாம். ஆனால் உன் தாய் சுருசியல்லவே! அபாக்கியவதி சுநீதி அல்லவா? சுருசியின் மகனுக்குத்தான் இங்கே மதிப்பு!

இங்கிருந்து ஓடிப்போ, அடுத்த பிறவியிலாவது சுருசியைப் போல ஓர் அன்னை கிடைக்க வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்தித்துக் கொள்'' என்று கூறி அனுப்பிவிட்டாள்.

துருவன் அழுது கொண்டே, தன் தாய் சுநீதியிடம் வந்து எல்லாவற்றையும் சொன்னான். ''அம்மா! நீயும் ராணிதானே? நானும் அரசரின் மகன்தானே! நம்மிடம் ஏன் அப்பாவுக்குப் பிரியம் இல்லை! அப்பா ஏன் நம்மிடம் அன்பு காட்டுவதில்லை?'' என்று புலம்பினான்.

''அப்பா! நமக்கு வாழ்வு இப்படித் தான் இருக்கும். இது சீராக வேண்டும் என்றால், பகவான் நாராயணன் தான் நமக்கு அருள் புரிய வேண்டும்!'' என்றாள் சுநீதி.

''பகவான் நாராயணனை எங்கே பார்க்கலாம்? அவரை எப்படிச் சந்தித்து முறையிடலாம்? அதற்கு என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான் ஏதுமறியாத ஐந்து வயதுச் சிறுவன் துருவன்.

''அதற்குக் காட்டுக்குப் போய் முனிவர்கள் கடுந்தவம் செய்கிறார்கள். ஆனால் உன்னால் அப்படிச் செய்ய இயலாது. பேசாமல் இரு. கொஞ்ச காலத்தில் உன் தந்தையின் மனம் மாறும் அதுவரை இங்கேயே இருந்து கடவுளைப் பிரார்த்தித் துக் கொள்'' என்றாள் சுநீதி.

துருவன் தாயின் காலில் விழுந்து நமஸ்கரித்தான். காட்டுக்குப் போய்த் தவம் செய்ய அனுமதி வேண்டினான். தாய் எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை; அவளுடைய ஆசியைப் பெற்று மரவுரியுடன் காட்டுக்குக் கிளம்பி விட்டான். வழியில் அவனைப் பார்த்தார் முனிவர் நாரதர்.

''நீ யாரப்பா? இந்தச் சிறுவயதில் எதற்காகக் காட்டுக் குப் போகிறாய்? உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

''சுவாமி! என் தந்தை அரசர் உத்தானபாதன், என்னிடம் அன்பு காட்டவில்லை. அவருடைய அன்பு கிடைக்க வேண்டும் என்று பகவான் நாராயணனிடம் முறையிடப் போகிறேன். அதற்காகத் தவம் செய்யப் போகிறேன்!'' என்றான் துருவன்.

''நாட்டுக்கு வா! உன் தந்தையிடம் பேசி நான் சமாதானம் செய்து வைக்கிறேன். இல்லாவிட்டால் என்னுடன் வா. குழந்தைகள் இல்லாமல் ஏங்கிக் கொண்டிருக்கும் பேரரசர்கள் பலரை எனக்குத் தெரியும். அவர்களிடம் உன்னை அழைத்துக் கொண்டு போய் சேர்க்கிறேன்'' என்று நாரதர் சொன்னார்.

''சுவாமி! மன்னிக்க வேண்டும். எனக்கு பகவான் நாராயணனின் அருள் வேண்டும். எங்கே அமர்ந்து எப்படித் தவம் செய்வது! எனக்குச் சொல்லிக் கொடுங்கள்'' என்று அவர் காலில் விழுந்தான் துருவன்.

''இப்படியே போ! யமுனை நதிக்கரை வரும். அங்கே ஆற்றங்கரையில் மரத்தடியில் அமர்ந்து 'ஓம் நமோ நாராயணாய!' என்று சொல்லிக் கொண்டே இரு. கண்களைத் திறக்காதே. மிருகங்கள் வந்து பயமுறுத்தும். நீ அஞ்சாதே! பகவான் உன்னைக் காப்பாற்றுவார்'' என்று சொல்லி அனுப்பினார் நாரதர். துருவனும் அவ்வாறே சென்று யமுனை நதியில் நீராடி, மரத்தடியில் அமர்ந்து தவம் செய்யத் தொடங்கினான்.

நாரதர் அரண்மனைக்கு வந்தார். உத்தானபாதன் தனது மகன் காட்டுக்குப் போய்விட்டதைப்பற்றி அவரிடம் முறையிட்டுப் புலம்பினான். அரசே வருந்தாதே, உன் மகன் சாதாரணப் பிறவியல்ல, அவன் சிறந்த ஞானி. பகவான் நாராயணன் அவனுக்குத் தரிசனம் கொடுக்கப் போகிறார். உன் வம்சத்தில் அவன் மிகுந்த பெருமையுடன் திகழப் போகிறான். இனிமேலாவது அவனைப் பெற்ற உன் மனைவி

சுநீதியை அன்புடன் நடத்து!'' என்று சொல்லி விட்டு நாரதர் போய்விட்டார்.

துருவனின் கடுந்தவம் தொடர்ந்தது. கடைசியில் பகவான் நாராயணன் அசரீரியாக அவன் முன் தோன்றினார். ''குழந்தாய்! எழுந்திரு. உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார். துருவன் அப்போதும் கண்ணைத் திறக்கவில்லை. ''சுவாமி! நீங்கள் முதலில் என் முன்னால் நின்று தரிசனம் தர வேண்டும். உங்கள் குரல் மட்டும் கேட்டால் போதாது'' என்று சொல்லிவிட்டான்.

பகவான் அவனுக்கு முன்னால் பிரசன்னமானார். தலையைத் தொட்டு ஆசீர்வதித்தார். துருவன் கண்ணைத் திறந்தான். அதே சமயம் அவனுடைய ஞானக் கண்ணும் திறந்தது. தனக்காகவோ, தன் தாய்க்காகவோ முறையிடத் தோன்றவில்லை. பகவானை எண்ணியபடியே துதிப் பாடல்களைப் பொழியத் தொடங்கினான்.

''உனக்கு எல்லா மங்களமும் உண்டாகும். நீ சிரஞ்சீவியாக இருப்பாய். உலகத்துக்கே வழிகாட்டுவாய்!'' என்று கூறிஅருளி விட்டுபகவான் நாராயணன் மறைந்துபோனார். அவருடைய பெருமையைப் பாடியபடியே துருவன் நாடு திரும்பினான். நாட்டின் எல்லையிலேயே அரசனும், ராணிகள் இருவரும், படைகளுடன் அவனுக்காகக்காத்துக்கொண்டிருந்தார்கள். உத்தானபாதன் அவனைக்கண்டதும்ஓடிவந்து தூக்கி எடுத்து அன்புடன் தழுவிக் கொண்டான். சுநீதிக்கு அளவில்லாத ஆனந்தம் உண்டாயிற்று. சுருசியும் கூட அவனைத் தழுவி முத்தமிட்டாள்.

துருவன் பெரியவனானதும் அரசனானான். பல ஆண்டுகளுக்கு நேர்மையாக ஆட்சி செய்தான். கடைசியில் பகவானின் அருளால் நட்சத்திரமாக மாறி, சிரஞ்சீவியாக இருக்க, வானத்தில் இடம் பெற்றான். இன்றும் துருவ நட்சத்திரத்தைச் சுற்றி சப்தரிஷிகளின் நட்சத்திரங்களும்

வலம் வருகின்றன. துருவன், நிரந்தரமான நிலையில் நின்று வழிகாட்டுகிறான். பிரயாணிகளும் கடலில் கப்பலில் வருபவர்களும், துருவ நட்சத்திரத்தை வைத்துத்தான் திசைகளை அடையாளம் காணுகிறார்கள்.

விடாமுயற்சியாலும், ஆழ்ந்த பக்தியாலும் சாதிக்க முடியாதது ஒன்றும் இல்லை என்பதற்குத் துருவனின் சரிதம் ஓர் அடையளம்.

● ●

# 73

அஸ்தினபுரத்தில் நீண்ட நாட்கள் பாண்டவர்கள் ஆட்சி செய்தார்கள். கண்ணனுடைய அருள் அவர்களுக்கு முத்திரையாக இருந்தது. கண்ணன் தனது அவதார காலத்தை முடித்துக் கொண்டு மறைந்து விட்டான். பாண்டவர்களுக்கு வாழ்க்கை சலித்துப் போயிற்று. அவர்கள் அரச பாரத்தை துறந்துவிட்டு, இமாலயத்துக்குத் தவம் செய்யப் போய்விட்டார்கள்.

அர்ஜுனனின் பேரன் பரீட்சித்து அரச பதவியை ஏற்றுக் கொண்டான். மக்களுடைய நன்மைக்காக, அவன்நேர்மையாக ஆட்சி புரிந்தான். அவனிடம் வந்து யாசித்தவர்கள் வேண்டியதைப் பெற்றார்கள். செல்வந்தருக்கும் ஏழைக்கும் நீதி ஒரேவிதமாக இருந்தது.

ஒரு நாள் பரீட்சித்து சரசுவதி நதிக்கரையில் நடந்து கொண்டிருந்தான். அங்கு ஒரு விநோதமான காட்சி அவன் பார்வையில் பட்டது. ஒரு கீழ்த்தர உணர்ச்சி கொண்ட மனிதன் வெண்ணிறக் காளை ஒன்றை உதைத்து, அடித்து,

வருத்திக் கொண்டிருந்தான். அருகில் ஒரு பசு மாடு நின்று கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தது. காளையின் மூன்று கால்கள் ஒடிந்துவிட்டன நாலாவது காலும் நொந்து சிதைந்து கொண்டிருந்தது. அரசன் அந்தக் கொடுமையை நிறுத்தச் செய்தான்.

பரீட்சித்துவைக் கண்டதும் அந்தக் காளை மாடு தலை குனிந்து பணிந்தது. கண்ணீர் விட்டபடியே பேசத் தொடங்கிற்று. ''அரசே! தாங்கள் என் வேதனையைக் கண்டு வருந்துகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் இப்படி ஒரு வேதனைக்கு ஆளாக, நான் என்ன பாபம் செய்தேன் என்பது எனக்கே தெரியவில்லை. தெரிந்தோ தெரியாமலோ, பகுத்தறிவில்லாத மிருகங்கள் பாபங்களைச் செய்கின்றன. அவற்றின் பலனையும் அப்புறம் அநுபவிக்கின்றன. ஒரு சிலர் இந்தக் கஷ்டங்களைக் கர்ம பலன் என்றும் சொல்லுகிறார்கள். நீங்கள்தாம் இதை விளக்க வேண்டும்'' என்று கூறிக் கீழே படுத்துக்கொண்டது.

பரீட்சித்து அந்தக் காளைமாடு பேசுவதைக் கண்டு அதிசயித்துப் போனான். அது கூறியதைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்தான். அவனுக்கு விஷயம் புரிந்தது. அப்படி உருவம் சிதைந்து போய்க் கொண்டிருந்தகாளை தான் தருமதேவதை என்று தெரிந்து கொண்டான். அருகே நின்று கண்ணீர் விடும் பசு, பூமாதா என்பதும் புரிந்தது. இரக்கமின்றி அப்படி வதைப்பவன் கலிபுருஷனே என்பதும் தெரிந்தது. கலியுகம் தொடங்கிவிட்டதை உணர்ந்து கொண்டான்.

அந்தக் காளையைப் பார்த்து பரீட்சித்து சொன்னான்: ''நீ தருமதேவதையின் உருவம். தூய்மை, எளிமை, தர்ம சிந்தனை, வாய்மை, நான்கும் உனது கால்கள். இதில் முதன் மூன்று கால்களை இப்போது நீ இழந்துவிட்டாய், வாய்மை ஒன்றையே நம்பி நீஇப்போது நிற்கிறாய். அதையும் விரைவில் கலி அழித்துவிடப் போகிறான்!''

இவ்வாறு சொல்லிவிட்டு, பரீட்சித்து தனது உடைவாளை உருவி, அந்தக் கலிபுருஷனைக் கொல்லப்போனான். ''நான் சொல்லுவதைக் கேளுங்கள்!'' என்று கூறி மன்றாடியபடி, அந்தக் கலிபுருஷன் அரசனின் காலில் விழுந்துவிட்டான். காலில் விழுந்தவர்களைக் காப்பாற்றுவதுதான் அரசனின் கடமை. ஆகையால் பரீட்சித்து கலி சொல்வதைக் கேட்க வேண்டியதாயிற்று.

''அரசே! கலியுகம் வரப்போகிறது. கொடுமையும் தீமையும் தழைக்கப் போகின்றன. பொய்யும், சூது வாதும் பெருமை பெறப்போகின்றன. ஊழல்கள் மலிந்து விடப் போகின்றன. அப்போது என்னைப் போன்றவர்களே ஆட்சி புரிவார்கள். தருமம் தலையெடுக்க விடமாட்டார்கள். இது ஆண்டவன் சித்தம். அதை அடையாளம் காட்டவே நான் இதைச் செய்தேன். ஆகையால் என்னைத் தண்டிக்காதீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டான் அந்தக் கலிபுருஷன்.

கலிபுருஷனின் பணிவைக் கண்டு பரீட்சித்து மனம் நெகிழ்ந்து போனான். ''நீ பிழைத்துப் போ! நான் ஆட்சி புரியும் வரை நீ தலையெடுத்து வெளியே திரியக்கூடாது. மறுபடி நீ என் கண்ணிற்பட்டால் உன்னை அழித்து விடுவேன்'' என்றான் பரீட்சித்து.

''அரசே! தாங்கள் சொல்லுவது முற்றிலும் சரி. தங்களுடைய தர்ம ராஜ்யம் என்னால் பாழ்பட்டுவிடக் கூடாது. ஆனால் நான் எங்கேயும் இருக்கக்கூடாது என்று தாங்கள் உத்தரவு போட்டுவிட்டால், நான் பிழைப்பது எப்படி? எனக்கு எங்கேயாவது இருந்து பிழைக்க இடம் ஒதுக்குங்கள்!'' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான் கலிபுருஷன்.

''சரி! நீ சூதாடும் இடங்களிலும், மது அருந்தும் விடுதிகளிலும போய் இருந்து கொள். பெண்கள் கற்பின்றி வாழும் விடுதிகளிலும், ஆண்கள் சிற்றின்பத்தையே தேடும் இடங்களிலும் போய் இருந்துகொள். எங்கெங்கே பொய்,

ஏமாற்றுவேலை, கர்வம், பொறுமை, பகை, காமம் இவையெல்லாம் தலை விரித்தாடுகிறதோ அங்கேயெல்லாம் நீ குடி இருக்கலாம். அத்தகைய இடங்களில் நீ அமோகமாக வளர்ச்சி பெறுவாய்" என்று ஆசிகூறி அனுப்பினான் பரீட்சித்து.

கலிபுருஷன் வாழும் இடங்கள் நமக்கு இப்போது தெரிந்துவிட்டன. அத்தகைய இடங்களைவிட்டு நாம் ஒதுங்கி இருக்க வேண்டும். என்னென்ன தீயபண்புகள் அவனது உறைவிடமாக இருக்கின்றன என்பதையும் தெரிந்து கொண்டோம். அவற்றை நாம் நமது வாழ்விலிருந்து விலக்க வேண்டும். தர்மதேவதை இழந்துவிட்ட கால்களான, தூய்மை, எளிமை, தர்மசிந்தனை மூன்றும் மறுபடி வலுப்பெற்று விளங்க, நாம் ஒவ்வொரு காரியத்தையும் செய்ய முற்பட வேண்டும்.

● ●

# 74

பாண்டவரின் அரசை ஏற்று ஆண்டு வந்த பரீட்சித்து ஒருநாள் காட்டுக்கு வேட்டையாடப் போனான். நெடு நேரம் வேட்டையாடியதில் அவனுக்கு மிகுந்த களைப்பும் தாகமும் ஏற்பட்டது. அடர்த்தியான மரங்களுக்கு நடுவில் ஆசிரமத்தில் அமர்ந்திருந்த சமிக என்ற மகரிஷி அப்போது அவன் கண்ணில் பட்டார்.

பரீட்சித்து அவருக்கு அருகில் சென்று, "எனக்கு மிகுந்த தாகமாக இருக்கிறது. குடிக்கத் தண்ணீர் கொடுங்

கள்!'' என்று கேட்டான். நிமிர்ந்து உட்கார்ந்து, தியான நிலையில் தன்னை மறந்திருந்த மகரிஷிக்கு இந்தப் பேச்சு காதில் விழவில்லை. அரசன் இரண்டு மூன்று 'தடவை கூப்பிட்டுப் பார்த்தான். பதிலே இல்லை. அவனுடைய பொறுமை எல்லை மீறிவிட்டது.

'இவர் வேண்டுமென்றே மௌனமாக இருக்கிறார். என்னை விடத் தான் உயர்ந்தவன் என்பதைக் காட்டிக் கொள்ள எண்ணுகிறார். இந்த அகம்பாவத்துக்கு நான் சரியான பாடம் கற்பிக்க வேண்டும்' என்று எண்ணிக் கொண்டான். அருகில் இருந்த செத்த பாம்பு ஒன்றை எடுத்து அவருடைய கழுத்தில் மாலையாகப் போட்டுவிட்டுப் போய்விட்டான். சமிக மகரிஷி அதைப்பற்றி கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. அவருடைய ஆழ்ந்த தியானம் தொடர்ந்தது.

சமிக மகரிஷியின் மகன் சிருங்கி, அருகில் உள்ள சிற்றாறு ஒன்றுக்குத் தண்ணீர் கொண்டுவரப் போயிருந்தான். தண்ணீருடன் திரும்பி வந்த அவன் தனது தந்தையின் நிலையைப் பார்த்தான். அவருடைய கழுத்தில் போடப்பட்டிருந்த செத்த பாம்பையும் பார்த்தான். அவனால் அந்த அவமானத்தைச் சகித்துக் கொள்ள முடியவில்லை, கோபம் பொங்கி வந்தது. ரிஷிபுத்திரன் அல்லவா? அவனுக்கு அபார சக்தியும் இருந்தது.

''என் தந்தையை இவ்வாறு அவமானப்படுத்திய அகந்தை மிகுந்த க்ஷத்திரியன், இன்றையிலிருந்து ஏழாவது நாள் தட்சகன் என்ற பெரும் பாம்பினால் கடிக்கப்பட்டு உயிர் துறப்பான்!'' என்று சாபம் கொடுத்துக் கண்ணீர் விட்டான் சிருங்கி.

சமிக மகரிஷி தியானத்திலிருந்து மீண்டார். நடந்தது எல்லாவற்றையும் ஞானதிருஷ்டியால் புரிந்து கொண்டார். ''மகனே! எதற்காக நீ அப்படி ஒரு சாபம் கொடுத்து

விட்டாய்? நாட்டின் ராஜ்ய பாரம் முழுவதையும் அவர்கள் தமது தோள்மீது சுமக்கிறார்கள். பரீட்சித்து போன்ற ஒரு நல்ல அரசனைக் கண்டு பிடிப்பது மிக அரிது. அவன் கோபப் பட்டதற்குக் காரணம் இருக்கிறது. ஒரு தவறை இன்னொரு தவறால் சரி செய்ய முடியுமா? என்ன காரியம் செய்துவிட் டாய்?'' என்று மகனைப் பார்த்து வருந்தினார். பகவானிடம், ''என் மகன் அவசரத்தில் சாபம் கொடுத்துவிட்டான். தாங்கள் அவனுடைய தவறை மன்னித்துக் காப்பாற்ற வேண்டும்!'' என்று கேட்டுக் கொண்டார்!

மகரிஷிகளின் மனம் எவ்வளவு தூய்மையானது. தங் களுக்குத் தீங்கு செய்தவர்களையும் அவர்கள் கோபிப் பதில்லை. பரீட்சித்து அரசனின் நல்ல பண்புகளை மட்டும் தான் அவர் பார்த்தார். அவருடைய விசாலமான மனத் தில் அவனுக்காக அனுதாபம் மட்டுமே இருந்தது.

அரண்மனையை அடைந்த பரீட்சித்து, முனிவரின் குமாரன் கொடுத்த சாபத்தைப் பற்றிக் கேள்விப்பட்டான். ''நான் பாவம் செய்துவிட்டேன். எனக்கு இந்த தண்டனை உரியதுதான்! என்னுடைய குடிமக்களை நான் மிகவும் நேசிக் கிறேன். ஆனால், அந்திமகாலத்தை நெருங்கிவிட்ட நான் இனி பகவானின் புண்ணிய நாமங்களைச் சொல்லவேண்டும். அவருடைய புகழ் மிகுந்த கதையைக் கேட்க வேண்டும். அதுவே எனது இறுதிக் கடமை!'' என்று கூறி, மகன் ஜன மேஜயனிடம் அரசபதவியை ஒப்படைத்து விட்டுக் கங்கைக் கரைக்குப் போய்விட்டார்.

கங்கையின் கரையில், பரீட்சித்துவைப் பார்க்க வியாசர், வசிஷ்டர், அகஸ்தியர், ஆங்கிரர், ஆத்ரேயர் போன்ற ரிஷிகள் வந்து சேர்ந்தார்கள். பகவானுடைய திருநாமங்களை அவன் காது கேட்கக் கூறி ஆசீர்வதித்தார் கள். அங்கு அப்போது சுகர் வந்துசேர்ந்தார். சுகப்பிரும்மம்

வியாசரின் மகன்; பதினாறு வயது மட்டுமே நிறைந்த பாலன். ஆடை ஏதும் அணியாமல், மனத்தில் களங்கமின்றி, ஒளிவீசும் முகத்துடன் திகழ்ந்த பாலஒளி அவன்.

சுகரைப் பார்த்ததும் எல்லா மகரிஷிகளும் மரியாதையுடன் எழுந்து நின்றார்கள். அந்தப் பாலயோகியிடம் அவர்கள் காட்டிய அன்புமிக்க மரியாதையைக் கண்ட பரீட்சித்து "சுவாமி இவ்வளவு பெரிய மகானை தாங்கள் என்னைப் பார்க்க வந்தது என்னுடைய முற்பிறவியின் புண்ணியமே ஆகும். இறக்கும் தறுவாயில் உள்ள என்னை வாழ்த்த தாங்கள் இங்கு வந்திருக்கிறீர்கள். பிறப்பிலிருந்தும் இறப்பிலிருந்தும் விடுபட்டு சுதந்திரம் பெற எனக்கு வழி காட்டுங்கள். இறக்கப் போகும் ஒரு மனிதன் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லிக் கொடுங்கள். இதுவே எனக்கு இப்போது தேவை" என்று பணிவுடன் கேட்டுக் கொண்டான்.

சுகப்பிரும்மம் புன்னகை செய்தார். எப்படித் தியானம் செய்வது என்பதைக் கற்றுக் கொடுத்தார். பிறகு பகவான் பூமியில் அவதரித்து நடத்திய திருவிளையாடல்களைக் கதை வடிவமாகச் சொல்ல ஆரம்பித்தார். பரீட்சித்துவின் மனத்தில் அமைதி நிறைந்தது.

அந்த அழகிய காட்சியை நினைத்துப் பாருங்கள். அமைதியான கங்கைக் கரையில், தருப்பையைப் பரப்பி பரீட்சித்து அமர்ந்திருக்கின்றான். சுற்றிலும் மகரிஷிகள் உட்கார்ந்திருக்கிறார்கள். சுகப்பிரும்மம் இனியக் குரலில் பாகவதக் கதையைச் சொல்லுகிறார். பட்சிகளும் மிருகங்களும்கூட அதை மெய்ம்மறந்து கேட்கின்றன.

இதுவே நமக்குப் பாகவதம் கிடைத்த கதை. பிறப்பும் இறப்பும் மனிதனால் தவிர்க்க முடியாதவை. இறக்கும்

நேரத்திலும் மனம் அமைதியுடன் இருக்க நாமும் பாக வாதத்தை மிகுந்த பக்தியுடன் படிக்கவேண்டும். இதுவே சுகப்பிரும்பம் போன்ற மகாஞானி பாமரர்களாகிய நமக்குச் சொல்லித் தந்தத் தத்துவம். அதை அவர் பாகவதக் கதையின் மூலம் கற்றுத் தருகிறார்.

## முடிவுரை

கடந்த மூன்று ஆண்டுகளுக்கு மேலாக சுவாமி சின்மயானந்தரின் சிறுகதைகளைத் தொடர்ந்து, பத்திரிகைக்கு உரிய கதை வடிவத்தில் எழுதிவரும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. அவருடைய உபமானக்கதைகள், தத்துவக் கதைகள், புராணக் கதைகள் ஆகியவற்றை, சுமார் எண்பதுக்கு மேல் இங்கு தொகுத்து எழுதி வந்திருக்கிறேன். இந்த வாய்ப்பை அளித்தப் பெரியோர்களுக்கு எனது நன்றி. சுவாமி சின்மயானந்தரின் ஆசியின் பலமே எனக்கு இவ்வாறு எழுதும் சக்தியையும் வன்மையையும் கொடுத்தது. தொடர்ந்து படித்து, பாராட்டி வந்த வாசக அன்பர்களிடமிருந்து, இந்த நல்ல பணியை நல்ல முறையில் முடித்துக்கொண்டு, இந்த இதழுடன் விடை பெறுகிறேன். வணக்கம்.



